# "OVER FORTY YEARS BEFORE THE FOOTLIGHTS."

## PART 5.

IN TAMIL

BY

RAO BAHA[illegible] IDAM, B.A., B.L.,

The Tw[illegible] Love, The Curse of Urvasi, [illegible] a, Fate and Love, Simhala[illegible], Pushpavalli, Amaladitya, Magapathi, The Ideal Wife, Siruthondar, The Golden Fetters, True Love, The Bandit Chief, Bricks-Between, At Any Cost, The Fair Ghost, The Wedding of Valli, Brahmin *vs* Non-Brahmin, Vijayarangam, As you like it, Sati Sulochana, Lord Buddha, The Tragedy of Silence, The Good Fairy, Geetha Manjari, The True Brother, Malavikagnimitra, Chandrahari, The Demon Land, Sabapathy Part I, The Pongal Feast or Sabapathy Part II, A Rehearsal or Sabapathy Part III, Sabapathy Part IV, Blessed in a Wife, The Dancing Girl, Subadra-Arjuna, Karna the Giver, Sahadeva's Stratagem, The Surgeon General's prescription, Vichu's Wife, Sakuntala, Vikramorvasi, The Point of View, The Two Selves, The Tragic Denouement, The Sub-Assistant Magistrate of Sultanpet, Harischandra, Blind Ambition, Markandeya, Sarangadhara, Manohara, The Two Friends, The Knavery of Kalappa, As We Sow-So We Reap, Over Forty Years Before the Footlights Parts I, II & III & IV, The Search, Prince Koneri, The Crowd in the Shandy, Ratnavali, The Gypsy Girl, Vaikunta Vaithiyar, Dikshithar Stories, Funny Stories, The Good Sister, Short Stories, The Tamil Drama etc in Tamil, and Harischandra, and Yayathi in English.

TM.
894.8112
M12 N

FIRST EDITION

Madras:

PRINTED BY THE PEERLESS PRESS,
15, LINGHI CHETTY STREET, G. T.

[All Rights Reserved 1936 Price per Copy Re. 2-0

INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# நாடகமேடை நினைவுகள்

## ஐந்தாம் பாகம்

கோயம்புத்தூரில் நாங்கள் நாடகங்களாடிய சாலை மிஸ்டர் வின்செண்ட் என்பவரால் கட்டப்பட்டது. இதைவிடப் பெரிய நாடக சாலைகளைப் பார்த்திருக்கிறேன்; இதை விட அழகிய நாடக சாலைகளைப் பார்த்திருக்கிறேன்; ஆயினும் இதைப்போன்ற ஆக்டர்களுக்குச் சௌகர்யமான நாடகசாலையை நான் பார்த்ததில்லை. ரங்கத்திலிருந்து மெல்லப் பேசினும், ஹால் முழுவதும் ஸ்பஷ்டமாய்க் கேட்கும்படி கட்டப்பட்டது; ரங்கத்தின் பின்பாக வேஷம் தரிப்பதற்காக இரண்டு மூன்று பெரிய விசாலமான அறைகள் இருந்தன; அன்றியும் மற்ற நாடகசாலைகளிலில்லாத இவ்விடமிருந்த புதுமையென்னவெனில், மற்ற நாடக சாலைகளில் ஆக்டர்கள் நாடகமாரம்பித்த பிறகு, ஏதாவது பாட்டுகளின் சுருதிகளை மாற்றவேண்டியிருந்தபோதிலும், அல்லது ஏதாவது பாட்டை விடவேண்டியிருந்த போதிலும், பக்க வாத்தியக்காரர்களுக்குச் சொல்லியனுப்பவேண்டியிருந்தால் மேடைக்கு வெளியே ஒரு ஆள் அனுப்பி அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டும். இங்கு அக்கஷ்டமில்லாது, நேபத்யத்திலிருந்து அவர்கள் உட்கார்ந்திருக்கும் இடத்திற்கு ரங்கத்தின் கீழ் சுரங்கம் மாதிரி ஒரு வழியாக ஹாலில் உட்கார்ந்திருப்பவர்கள் ஒருவருமறியாதபடி, சென்று அவர்களுக்கு சொல்லவேண்டியதைச் சொல்லிவர, ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதனால் இன்னொரு பிரயோஜனமும் உண்டு. மற்ற நாடகசாலைகளிலெல்லாம், வேடம் தரித்த ஒரு ஆக்டர், தனக்கு வேலையில்லாத ஒரு காட்சியில், வெளியிற் போய் அக்காட்சி எவ்வாறு நடக்கிறதெனப் பார்க்க சாத்தியமில்லை; இந்த நாடக சபையில் இது சாத்தியமாயிருந்தது. தரித்த வேஷத்துடன் இந்தச் சுரங்க வழியாக, பக்க வாத்தியக்காரர்களிருக்குமிடம் போய் உட்கார்ந்திருந்து பார்த்துவிட்டு, ஹாலில் வந்திருப்பவர்கள் ஒருவரும் அறியாதபடி, திரும்பிவரச் சாத்தியமாயிருந்தது. இந்தக் சூழ்ச்சியை யறிந்தவுடன் எங்கள் ஆக்டர்

களெல்லாம் ஒவ்வொருவராக இந்த வழியாகப் போய் உட்கார்ந்து பார்த்து களித்து வந்தார்கள்; நானும் அங்ஙனமே செய்தேன். மற்ற நாடகசாலைகளிலும் இம்மாதிரியான ஏற்பாடு இருக்குமாயின் மிகவும் சவுகர்யமாயிருக்கும். சீமை முதலிய இடங்களில் இப்படிப் பட்ட ஏற்பாடுகள் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். தென் இந்தியாவில் இதை இந்த நாடகசாலையில் தான் கண்டேன். இந் நாடக சாலையை இவ்வளவு சவுகர்யமாக அமைத்த அதன் புரொப் ரைட்டர் வின்செண்ட் என்பவர் இங்கு வந்தாடும் சபைகளுக்கெல் லாம் கூடிய சவுகர்யங்களை எப்பொழுதும் செய்துவருவதாகக் கேள்விப்பட்டேன். எங்களுக்கும் அப்படியே தானாக வேண்டிய சவுகர்யங்களை யெல்லாம் மனமுவந்து செய்துவந்தார். அவர் ஒரு கால் இதை வாசிப்பாராயின், நான் இங்கெழுதியதையே என் மன முவந்த வந்தனமாகக் கொள்வாராக!

இவ்வூரில் எங்கள் முதல் நாடகமாகிய "லீலாவதி சுலோசனா" நாடக தினம், நாடகக் கொட்டகைக்குப் போவதற்காக எல்லா ஆக்டர்களையும் அழைத்துக்கொண்டு நான் புறப்பட்டபொழுது, நடந்த ஒரு சிறு விஷயத்தை இங்கு குறிக்க விரும்புகிறேன். எந்தக் காரியத்தை நான் ஆரம்பிப்பதாயினும் விக்னேச்வரரைத் தியானம் செய்து விட்டு ஆரம்பிப்பது சிறு வயது முதல் என் வழக்கம். அப் படியே என் மனதில் தியானம் செய்து விட்டு, எனது ஆக்டர்களை அழைத்துக்கொண்டு புறப்பட, நான் நாங்கள் குடியிருந்த வீட்டின் படிக்கட்டை விட்டு இறங்கவுடன், யாரோ தெருவில் போய்க் கொண்டிருந்தவன் பலமாகத் தும்பினான். உடனே என் பின்னால் நின்று கொண்டிருந்த எனது நண்பர் ராமகிருஷ்ண ஐயர், "வாத்தி யார்! எவனோ தும்புகிறான், இப்பொழுது புறப்படாதீர்கள்!" என்று தடுத்தார். இன்னும் சிலரும் அப்படியே சொன்னார்கள். உடனே திருஞான சம்பந்த ஸ்வாமிகள் கோளறு திருப்பதிகம் பாடின சந்தர்ப்பத்தை நினைத்துக்கொண்டு, ஸ்வாமி யிருக்கிறார் புறப்படுங்கள், என்று சொல்லி, நிற்காது நாடகசாலைக்குச் சென் றேன். அந்த நாடக சாலையில் நாடகமானது நன்றா யிராது, ஜனங்கள் அதிகமாய் வராது, ஏதாவது கெடுதியாய் முடிந்திருந் தால், "தும்பினபொழுது புறப்பட்டதனால் தான் இங்ஙனம் நேர்ந்

தது, எங்கள் வார்த்தையைக் கேளாமற் போனீரே" என்று என்னை வைதிருப்பார்கள் எனது நண்பர்கள். அன்றைத்தினம் நாடகமானது நன்றாய் ஒரு விக்கினமுமின்றி ஆடப்பட்டது; அன்றியும் நாடகம் ஆரம்பமாவதற்கு ஒரு மணிக்கு முன்பாகக் கொட்டகையில் ஒரு ரூபாய் வகுப்பினர்க்கே இடமில்லையாம். 8 அணா காலரி வகுப்பினரை நெருங்கி உட்காரச் செய்து, வெளியிலிருந்து சில பெஞ்சுகளைக் கொண்டுவந்து போட்டு ஏற்பாடு செய்தார் நாடகசாலை புரொப்ரைடர். நான் இதை இங்கு எழுதியதற்கு முக்கிய காரணம் தெய்வத்தை நம்பி எக்காரியத்தையும் ஆரம்பிப்பவர்கள், இம்மாதிரியான சகுனங்களுக்கெல்லாம் பயப்படவேண்டியதில்லை என்பதே.

இவ்வூரில் இரண்டு தெலுங்கு நாடகங்கள் ஆடப்பட்டன; இவைகளுக்காக பல்லாரியிலிருந்து தெலுங்கு நாடகமாடுவதில் மிகவும் பிரசித்திபெற்றிருக்கும் எனது நண்பர் ராகவாசார்லுவை வரவழைத்திருந்தோம். ஆயினும் அவைகளுக்கு தமிழ் நாடகங்களுக்கு, வந்த ஜனங்களில் மூன்றிலொருபங்குகூட வரவில்லை. இதனால் நான் தெலுங்கு நாடகங்களைப்பற்றி ஏதோ இழிவாகக் கூறுகிறேன் என்று இதை வாசிக்கும் எனது நண்பர்கள் எண்ணக் கூடாது; நான் என் கண் கொண்டு பார்த்த இந்திய ஆக்டர்களுக்குள் எனது நண்பர் ராகவாசார்லுவுக்குச் சமானமானவர்கள் இல்லையென்று நான் உறுதியாய்க் கூறக்கூடும்; அன்றியும் அவர் ஆடும் அநேக நாடகங்களில் ராமராஜு அல்லது "விஜயநகர சமஸ்தானத்தின் அழிவு" என்னும் நாடகமானது ஒரு மிகச் சிறந்தது என்று எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியது. அப்படியிருந்தும் அவர் இங்கு முக்கிய வேடம் தரித்த மேற்கண்ட நாடகத்திற்கும் நள சரித்திரத்திற்கும், ஜனங்கள் வராதது (நெல்லூரிலிருந்தது போல) ஜனங்கள் குற்றமல்ல; முக்கியமான தமிழ் நாடாகிய கோயமுத்தூரில் தெலுங்கு நாடகமாடிய எங்கள் சபையோரின் குற்றமே. இவ்விரண்டு தெலுங்கு நாடகங்களினால் எங்கள் சபைக்கு ரூ. 160—10—6 நஷ்டம் நேரிட்டது. தமிழ் நாடகங்களின் கண்டிராக்டினால் கிடைத்த ஆயிரம் ரூபாய் லாபத்தினின்றும் இந் நஷ்டத்தைக் கழிக்கவேண்டி வந்தது. "பிச்சை எடுத்த

தாம் பெருமாள், அத்தைப் பிடுங்கியதாம் அனுமார்" என்னும் பழமொழியை எனது நண்பர்களிற் சிலர் எனக்கு இந்த சந்தர்ப்பத்தில் நினைப்பூட்டினர்.

நாங்கள் இங்காடிய மற்றிரண்டு தமிழ் நாடகங்களாகிய மனோஹரன், காலவரிஷி என்பவற்றிற்கு முதல் நாடகத்தில் வந்தது போலவே வெகு ஜனங்கள் வந்திருந்து, நாடக சாலையில் இடம் போதாமற் போயிற்று. நாடகசாலை புரொப்ரைட்டர் வின்ஸெண்ட் என்பவர், சாதாரணமாக, நாடக ஆரம்பத்திற்கு ஒரு மணிக்கு முன்தான் நாடகசாலையின் கதவுகளைத் திறக்கிற வழக்கமாம். இந்தத் தமிழ் நாடகங்களுக்கெல்லாம் இரண்டு மணி காலத்திற்கு முன்பே ஜனங்கள் வெளியில் சேர்ந்து கோஷ்டம் செய்து கொண்டிருக்கின்றனர் என்று அறிந்தவராய் அந்த வழக்கத்தையும் மாற்றி ஏழு ஏழரை மணிக்கெல்லாம் கதவுகளைத் திறந்து விட்டார்! நந்தனார் சரித்திர நாடகத்திலும் சேலத்தில் செய்த யுக்தியின்படி, இங்கும் எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலுவை, நர்த்தனம் செய்யச் சொல்லி, அவர் பெயரை நாடக விளம்பரங்களில் அச்சடித்தோம். ஏதோ என் சிநேகிதனை நான் அதிகமாய்ப் புகழ்கிறேன் என்று எனது நண்பர்கள் எண்ணாதிருக்கும்படி இங்கு நடந்த ஒரு சிறு விருத்தாந்தத்தை எழுதுகிறேன்.

இவ்வூரில் கடைசியாட்டமாக வைத்துக்கொண்டது எனது நண்பர் டி. சி. வடிவேலு நாயகர் எழுதிய "வள்ளியின் கலியாணம்". அதில் நாடகாசிரியராகிய வடிவேலுவே வள்ளியாகவும் டாக்டர் ஸ்ரீனிவாச ராகவாசாரி, சுப்பிரமணியராகவும் நடிக்க வேண்டுமென்று ஏற்பாடாயிருந்தது. நோட்டீஸ் முதலியனவெல்லாம் அச்சிட்டுமாயது. இந்நாடகத்தை ஆடவேண்டுமென்று எங்கள் நிர்வாக சபையில் தீர்மானித்ததற்கு முக்கிய காரணம் என்னவென்றால், எல்லாம் சம்பந்தத்தின் நாடகங்களாக இருக்கக் கூடாது, மற்றவர்களுடைய நாடகங்களையும் ஆடவேண்டும் என்பதுடன் எல்லாத் தமிழ் நாடகங்களிலும் சம்பந்தமும் ரங்கவடிவேலுவும் பிரதானமான பாத்திரங்களை எடுத்துக்கொள்ளலாகாது, மற்றவர்களுக்கும் அய்ன்பார்ட் என்னும் பிரதான பாத்திரங்களைக்

கொடுக்கவேண்டும், என்று எனது நண்பர்களில் ஒருவர் நிர்வாக சபையின் கூட்டத்தில் பிரேரேபித்தார். அதன் பேரில் அவர் கூறுவது நியாயமென்று நானும் எனது நண்பர் ரங்கவடிவேலுவும் ஒப்புக்கொண்டோம். இத்தனை விவாதத்தின் பேரில் தீர்மானிக்கப்பட்ட நாடகம் இந்த 'வள்ளி கலியாணம்'. நந்தனர் நாடகம் முடிந்தவுடன், மறுநாள் காலை எனது நண்பர் வடிவேலு நாயகர் என்னிடம் வந்து "வாத்தியார், ஒரு சின்ன வேண்டுகோள். இந்தக் கடைசி நாடகத்தை மாற்றிவிடலாமென்றிருக்கிறேன். இங்குள்ளவர்களெல்லாம் ரங்கவடிவேலுவும் நீங்களும் ஆடினால்தான் நல்ல வசூலாகுமென்கிறார்கள். எனக்கு மப்படித்தான் தோன்றுகிறது; ஆகவே, அந்த வள்ளிகலியாணத்திற்குப் பதிலாக, உங்கள் 'சாரங்கதரா' நாடகத்தை வைத்துக்கொள்ளலாம், அதில் நீங்களும் ரங்கவடிவேலுவும் ஆடவேண்டும்" என்று வற்புறுத்தினர். அதன் பேரில் நான் ரங்கவடிவேலுவுடன் கலந்து பேசி, "அப்பா, எங்களுக்கு ஒன்றும் ஆட்சேபமில்லை. ஆயினும் இதை மாற்றுவதில், நாங்கள் சம்பந்தப்பட்டிருப்பதால், நாங்கள் ஒன்றும் பேச மாட்டோம். நீ மற்றக் கமிட்டி மெம்பர்களை யெல்லாம் கேட்டு, அவர்களை எல்லாம் சம்மதிக்கச் செய்தால் ஆட்சேபமில்லை" என்று சொன்னேன். அதன்பேரில் மற்றக் கமிட்டி மெம்பர்களையெல்லாம் கேட்டு அவர்களுடைய சம்மதியைப் பெற்று, கடைசி நாடகத்தை "வள்ளியின் கலியாணத்தி" லிருந்து "சாரங்கதரா" நாடகத்திற்கு மாற்றினர். இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய அம்சம் என்னவென்றால், முற்கூறிய நாடகம் தான் இயற்றியது, அதில் தனக்கு முக்கிய ஸ்திரீபார்ட் இருந்தது, இருந்தும் அதை விட்டு, தனக்கு முக்கியமான பாகமில்லாத, ரங்கவடிவேலுவிற்கும் எனக்கும் முக்கிய பாகங்களுடைத்தாயிருந்த பிற் கூறிய நாடகத்தை வைக்கும்படி இவரே பிரயாசை எடுத்துக்கொண்டதேயாம். இவர் இவ்வாறு செய்தது, ஒரு விதத்தில் தன் சுய நன்மைக்காக இருந்தபோதிலும், எங்கள் சபையின் பொது நன்மைக்காகவுமிருந்தது என்பதற்கையமில்லை. அவரும், மற்றெல்லோரும் எண்ணியபடியே, "சாரங்கதரா" நாடகத்திற்கு மிகவும் அதிகமாக ஜனங்கள் வந்து, ஏராளமான பணம் வசூலாயிற்று. எட்டு எட்

டரைமணிக்கெல்லாம் கடைசி வகுப்புக்கு டிக்கட்டுகள் விற்பதை நிறுத்தி ஒரு ரூபாய் டிக்கட்டுகளே விற்றதாக எனக்கு ஞாபகம். இங்கு நடத்திய எல்லா நாடகங்களையும் விட இதற்குத்தான் அதிக டிக்கட்டுகள் விற்கப்பட்டன. அன்றியும் இந்நாடகமும் ஆரம்பமுதல் கடைசி வரையில் மிகவும் நன்றாய் நடிக்கப்பட்ட தென்பது என் அபிப்பிராயம். இந்நாடகத்திலுள்ள ஒவ்வொரு முக்கியமான கட்டத்தையும் சபையோர்கள் மிகவும் சந்தோஷத் துடன் அனுபவித்துக் கரகோஷம் செய்து ஆக்டர்களைத் திருப்தி செய்தனர். நாடகம் முடிந்தவுடன் அதைப் பார்க்க வந்த அநேக பெரிய மனிதர்கள் எங்களிடம் வந்து நாடகத்தைப்பற்றித் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்து எங்கள் சபை இங்கு நாடகம் நடத் துவது இதனுடன் முடிந்துவிட்டதே என்று தங்களுடைய வருத் தத்தையும் தெரிவித்தனர். எங்களுடைய ஆக்டர்களும் (நான் உள்பட) இன்னும் நாடக சபையில் ஆடுவதற்கில்லையே யென்று வருத்தப்பட்டோம்!

இவ்வூரில் நாங்களிருந்த பொழுது, அக்ரிகல்ச்சரல் காலேஜ் தலைவர், ஸ்ரீமான் தாதலிங்க முதலியார் அவர்களும், சி. வெங்கட ராகவாசாரியார் அவர்களும் (பிறகு திவான் பகதூர் பட்டம் பெற்ற) சி. எஸ். ரத்தின சபாபதி முதலியார் அவர்களும் எங்கள் சபையோருக்குச் செய்த விருந்தும் உபசரணையும் என்றும் மறக்கற் பாலதன்று. இம்முறை ,சேலம் கோயமுத்தூருக்கு என்னுடன் வந்த ஆக்டர்களெல்லாம், ஏதாவது வெளியூர் பிரயாணத்தைப் பற்றிப்பேச்சு வரும்போதெல்லாம், சேலம் கோயமுத்தூர் பிரயா ணம் மாதிரியாக இனி எப்பொழுதும் வரப்போகிறதில்லை என்று இதைப்பற்றி இன்றும் புகழ்ந்து பேசுவது வழக்கம். நானும் அங்ஙனமே எண்ணுகிறேன். இதற்கு முன் செய்த பிரயாணங் களிலெல்லாம் ஏதாவது ஒரு குறை வந்து கொண்டிருந்தது. இந்தச் சேலம் கோயமுத்தூர் பிரயாணத்தில் தான், ஆதி முதல் அந்தம் வரை ஒரு குறையுமின்றி எல்லாம் மிகவும் சந்தோஷமாய் முடிந்தது. ஆகவே, எல்லாம் சுலபமாய் முடிந்து கோயமுத் தூரை விட்டுச் சென்னபட்டணம் புறப்பட்ட தினம், எப்படி

முடியுமோ என்றிருந்த பாரம் நீங்கினவனாய், நான், "காற்றின் மீது கொஞ்சம் நடந்தேன்" என்று ஒப்புக்கொள்ள வேண்டியதே.

எங்கள் சபைக்குச் சொந்தமாக, ஒரு நாடகசாலையும் இருப்பிடமும் கட்டுவதற்காகத் தக்க இடம் வேண்டிப் பல வருஷங்களாகப் பிரயத்தனப் பட்டுக்கொண்டிருந்ததற்கு, இவ் வருஷம் சென்னை கவர்னர் லார்ட் வில்லிங்டன், அவர்கள் தன் கவுன்சில் மந்திரிகளுடன் ஆலோசித்து எங்கள் சபைக்கு எங்கள் வேண்டுகோளுக் கிணங்கி, நேபியர் பார்க்கில் ஒரு இடம் கொடுக்க இசைந்ததாக, சந்தோஷமான சமாசாரம் கிடைத்தது. இதற்காக நான் எடுத்துக்கொண்ட பிரயத்னமும், பிறகு எங்கள் பிரசிடெண்டாகிய டி. வி. சேஷகிரி ஐயர் அவர்கள் அங்கு கட்டிடம் கட்டுவதற்காக அஸ்திவாரம் போட்டதும், முடிவில் இந்த இடத்தை கவர்ன்மெண்டாருக்கே நாங்கள் திருப்பிக் கொடுத்த கதையும் பிறகு எழுதவேண்டி வரும்.

இவ் வருஷம், அநேக நாட்களாக எங்கள் சபைக்காக உழைத்துவந்த வெ. வெங்கடாசல ஐயர் அவர்களுக்குபகாரமாக 'மனோஹரா' என்னும் நாடகத்தை நடத்தி, செலவுபோக மிகுதிப் பணமாகிய ரூபாய் 446—3—0 ஐ அவருக்குதவினோம், இந்த நாடகம் நடத்தியதில் ஒரு விசேஷ முண்டு. விக்டோரியா பப்ளிக் ஹாலின் மேல் மாடியில் இந்நாடகம் நடத்தினால் எங்கள் சபையின் அங்கத்தினர்களுக்கும், வருகிற மற்றவர்களுக்கும் இடம் போதாதென்று கருதினவர்களாய் பீபில்ஸ் பார்க்கின் வடகிழக்கில் கட்டியிருக்கும் ராயல் தியேட்டர் என்னும் நாடகசாலையில் இதை நடத்தினோம். இதுதான் முதல் முறை எங்கள் சபை சென்னையில் விக்டோரியா பப்ளிக் ஹாலை விட்டு, நாடகக் கம்பெனிகள் ஆடும் நாடகசாலையில் நாடகம் நடத்தியது. மேற் சொன்னபடி மற்ற நாடகசாலைகளில் நாம் ஆடுவது நமது சபையின் அந்தஸ்திற்கு ஏற்றதன்று என்று சிலர் ஆட்சேபித்தனர். வெளியூர்களுக்குப் போயிருந்தபொழுது, நாடகக்கொட்டகைகளில் நமது சபை நாடகங்களை நடத்தவில்லையா? அன்றியும், நாம் அங்கு போய் ஆடுவதினால் அந்த நாடக சாலைக்குக் கொஞ்சம் கௌரவம் அதிக

மாகுமேயொழிய, நம்முடைய அந்தஸ்து இழிபடாது என்று பதில் உரைத்து, அந்தக் கொட்டகையிலேயே ஆடினோம். நாங்கள் எண்ணியபடியே, கடைசி வகுப்பாகிய காலெரிக்குத் தவிர மற்ற வகுப்புகளுக்கெல்லாம் ஜனங்கள் ஏராளமாய் வந்தனர். எனக்கு இக்கொட்டகையில் ஆடுவதென்றால், சிறிது கூச்சமாகத் தானிருந்தது. சாதாரணமாக விக்டோரியா பப்ளிக் ஹாலில் நாடகமாடினால், கற்றறிந்தவர்கள்தான் வருவார்கள்; இவ்விடங்களிலெல்லாம் நாடகம் பார்க்கவரும் ஜனங்கள் பெரும்பாலும் பாமர ஜனங்களே; ஆகவே, எங்கள் சபையின் நாடகம் இவர்களுக்கு எப்படி ருசிக்குமோ என்று சந்தேகப்பட்டேன்; அன்றியும் இந்தமாதிரியான நாடகக் கொட்டகைகளுக்கு வரும் ஜனங்களெல்லாம், சங்கீதத்தையே முக்கியமாக விரும்புவார்கள்; நானோ 'மனோஹரா' நாடகத்தில் ஒரு பாட்டும் பாடுவதில்லை. ஆகவே, இந்நாடகத்தை, "காலரி ஸ்வாமிகள்" என்று ஆங்கிலத்தில் கூறப்பட்ட பாமர ஜனங்கள் எப்படி ஏற்பார்களோ என்று சம்சயப்பட்டேன். ஆயினும் அன்று நாடகம் நடத்திய பிறகு அந்தச் சந்தேகமெல்லாம் அறவே நீங்கியது. எவ்விதம் ஆடியபோதிலும் ஆடுபவர்களிடம் தக்க திறமையிருந்தால் சோபிக்காமற் போகாது என்பதை நேராகக்கண்டேன். இதன் பிறகு இவ்விடத்தில் பன்முறை எங்கள் சபையார் நாளது வரை நாடகங்கள் நடத்தியிருக்கின்றனர்; இந்நாடகம் நடத்தியபொழுது, இக்கொட்டகையில் ஸ்ரீமான் கன்னையா என்பவர், கொட்டகைக்காரரிடமிருந்து வாடகைக்குவாங்கிக்கொண்டு, தமது நாடகக் கம்பெனியின் நாடகங்களை நடத்திக்கொண்டிருந்தனர். எங்கள் சபையார் மேற்சொன்னபடி தர்மகைங்கர்யமாக அக்கொட்டகையில் நாடகம் நடத்தவேண்டுமென்று கேட்டபொழுது, மிகவும் சந்தோஷத்துடன் தான் போட்டுக்கொண்டிருந்த நாடகங்களையும் நிறுத்தி, இலவசமாக எங்களுக்கு அக்கொட்டகையை விட்டார். அன்றியும் நாடக தினம், தன் கம்பெனியின் படுதாக்கள் திரைகள் எல்லாம் எது வேண்டினும் எடுத்துக்கொள்ளுங்கள் என்றும் தயாளகுணத்துடன் உதவினார். இம்மாதிரி இவர் உதவியது இம்முறை மாத்திரம் அன்று இதற்கப்புறம் பன்முறை எங்கள் சபைக்கு தனது கொட்டகையை

யும் படுத்தாக்கள் உடுப்புகள் முதலியனவையும் கொடுத்து உதவி யிருந்தார்.

சாதாரணமாக ஒரு நாடகக் கம்பெனியார், மற்ற நாடகக் கம்பெனிகள் மீதாவது நாடக சபைகள் மீதாவது, பொறாமை கொள்வதுதான் உலக வழக்கமா யிருக்கிறது; அதற்கு மாறாக, நாடகமாடுவதையே தன் ஜீவனாதாரமாகக்கொண்ட இவர், எங்கள் சபையின் மீது இவ்வளவு அன்பு பாராட்டியது மிகவும் புகழத்தக்கதே. அந்த அன்பைப் பலவிதங்களில் ரூபித்துள்ளார். ஒரு முறை எங்கள் சபை திருநெல்வேலிக்குப் போனபோது, அதற்குச் சற்று முன்பாக அவ்வூரில் நாடக மாடிக்கொண்டிருந்த இவர், தன் கடைசி நாடகத்தின் முடிவில் அவ்வூர் ஜனங்களுக்கு வந்தன மளித்தபோது, மேடையிலிருந்து, "நீங்கள் தமிழ் நாடகங்கள் எப்படிச் சரியாக நடக்க வேண்டுமென்று தெரிந்துகொள்ள விருப்பமுடையவர்களானால், வருகிறவாரம் சுகுணவிலாச சபையார், இங்கு வந்து நாடகங்கள் நடத்தப் போகிறார்கள். அவற்றைப் போய்ப் பார்த்து ஆனந்தியுங்கள்" என்று கூறியதாக நான் அறிந்தேன். இதை வாசிக்கும் எனது நண்பர்கள், இவர் செய்ததையும் நெல்லூரில் எங்கள் தெலுங்கு நாடகங்களைப் பார்க்கக் கூடாதென்று முயற்சி செய்த அங்குள்ள ஒரு சபையின் செய்கையையும் ஒப்பிட்டுப் பார்ப்பார்களாக! அன்றியும் எங்கள் சபைக்கு ஏதாவது சாமான்கள் வேண்டியிருந்தால், கொஞ்சமும் மனதில் அசூயை இல்லாமல் இவர் கொடுத்துதவியது நான் என்றும் மறக்கற் பாலதன்று. அப்படிப்பட்ட பல உபகாரச் செய்கைகளுள் ஒன்றை மாத்திரம் இங்கெடுத் தெழுதுகிறேன். சென்ற 1930-ம் வருஷம் எங்கள் சபை "கொடையாளி கர்ணன்" என்னும் எனது நாடகத்தைப் போட்டபொழுது அதற்காக இரண்டு ரதங்கள் செய்ய வேண்டியிருந்தது; எங்கள் சபையின் நிர்வாக சபையார் இதற்காக ஏதோ ஒரு தொகை கொடுத்தார்கள்; அதற்குமேல் இருமடங்கு தன் பொருளைச் செலவழித்து அர்ஜுனனுக்கும், கர்ணனுக்கும், உபயோகப்படத்தக்க, இரண்டு அழகிய ரதங்களை, தானாகத் தன் ஆட்களைக்கொண்டு செய்வித்து உதவினார்! அன்றியும் நான் கர்ணன் வேடம் பூணப் போகிறேன் என்று அறிந்தவராய்த் தானு

கத் தன் செலவில் பொன் முலாம் பூசிய கவசமும், குண்டலங்க ளும் செய்தனுப்பினார்! நான் ஒருவரையும் ஒன்றையும் கேட்ப தில்லை என்பதை இதை வாசிக்கும் எனது நண்பர்கள் அறிவார்க ளென நம்புகிறேன். இவராக இதைச் செய்து அனுப்பியதுமன்றி, இதற்காக நான் என்ன பணம் கொடுக்க வேண்டு மென்று விசா ரித்த பொழுது, "தமிழ் நாடகத்திற்காக இவ்வளவு உழைக்கும் முதலியாருக்கு, நான் இவ்வளவாவது செய்யலாகாதா" என்று கூறி, அதன் விலையைப் பெறமாட்டேன் என்று மறுத்தார். அச் சமயம் என் மனதில் உதித்ததை நான் இங்கு எழுதுகிறேன். "கர்ணனுக் கப்புறம் கொடையில்லை" என்னும் பழமொழி தவறு. கர்ணனுக் கப்புறமும் கலியுகத்திலும் சில கொடையாளிகள் இருக் கின்றனர்" என்று எண்ணினேன். அந்தக் கவசத்தின் விலையைப் பற்றி நான் அதிகமாக பாராட்டவில்லை; அதையளித்த மனத் தையும், அதைக் கொடுத்த விதத்தையுமே, அதிகமாக மதிக்கிறேன். இவரது அருமை இலாத தயாள குணத்தை நினைக்கும் பொழுது, ஒரு முறை எங்கள் சபையின் நாடகத்திற்காக, சுவர்களில் ஒட்டிய பிளேகார்ட்ஸ் நாடக விளம்பரங்களை எல்லாம் கிழித்தெறியும்படிச் சில சிறுவர்களுக்குத் துட்டு கொடுத்து, அவ்வேலையைச் செய்யும் படிச் செய்த, மற்றொரு நாடக சபையின் காரியதரிசியின் "குண மும்" எனக்கு நினைவு வருகிறது! இதில் எது மேம்பட்டது, எது தாழ்ந்தது என்று நான் இங்கெழுதவேண்டிய நிமித்தமில்லை. சென்னை ராஜதானி முழுவதும் கன்னையா என்ற பெயர், அவர் இறந்தும், பல வருடங்கள் போற்றப்படும் என்பதற்கு ஐயமில்லை; மேற்குறித்தபடி நடந்த சபையின் பெயர், அடியுடன் நசித்துப் போயிற்று. அப்பெயரை நான் இங்கு எழுதினும், இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்குத் தெரியாததாகும். ஆகவே, "அறத்தாறு இதுவென வேண்டா" என்ற திருவள்ளுவர் வாக்கியத் துடன் இவ்விஷயத்தை முடிக்கிறேன்.

மறு வருஷமாகிய 1921-ம் வருஷத்தில் ஒரு துக்ககரமான விஷயமும் பல சந்தோஷகரமான விஷயங்களும் நேர்ந்தன. துக்க கரமான சமாசாரத்தை முன்பு எழுதியிருக்கிறேன் இவ்வருஷம் என் பூர்வ கர்ம வசத்தால், என் அருமைத் தமயன் ஆறுமுக முத

லியாரை இழந்தேன். ஒரு நாள் காலை, நான் தூங்கிக்கொண்டிருந்த பொழுது என் குமாரன் என்னை அவசரமாக எழுப்பி, சிந்தாதிரிபேட்டையிலிருந்து, என் தமயனார் இறந்துபோனதாகக் கடிதம் வந்ததைக் காண்பித்தான்! அதற்கு முந்திய தினம் அவர் தன் வழக்கம்போல் எங்கள் சபைக்கு வர, அவருடன் நானும் இன்னும் சில நண்பர்களும் சீட்டாடியது நன்றாய் எனக்கு ஞாபகமிருக்கிறது. அப்பொழுது அவருக்கு உடம்பு ஒன்றுமில்லை. தன் வழக்கம்போல்தான் எங்களுடன் பேசிக்கொண்டிருந்தார். 12 மணி நேரத்திற்குள்ளாக அவருக்கு மிருத்யு நேரிடுமென்று நான் கனவிலும் நினைத்தவனல்ல. அப்படி யிருக்க மறுநாள் அவர் காலமாய் விட்டார் என்ற செய்தி வந்தவுடன் என் மன நிலைமை எத்தன்மையதா யிருக்கவேண்டு மென்று என் நண்பர்கள் யோசித்துக் கொள்ளலாம். அதைப்பற்றி இங்கு எழுதி என் நண்பர்களுக்கும் கொஞ்சம் துக்கம் விளைவிக்க எனக்கு மனமில்லை. ஆங்கிலக் கவியொருவர் "நகைத்திடுவாயின் நீ—உலகம் நகைத்திடும் உன்னுடன், அழுதிடுவாயின் நீ—அழவேண்டும் தனியே நீயே." என்று எழுதியுள்ளார்.

அவர் திடீரென்று மடிந்ததற்கு ஏதோ ரத்தக்குழாய் உடைந்தது காரணமென்று விசாரித் தறிந்தேன். அவரது புத்திரன் பதினைந்து பதினாறு வயதுடையவன், எங்கள் குலத்தில் மிகுந்த புத்திசாலியாகப் படித்துக்கொண்டிருந்தவன், விஷ ஜ்வரத்தினால் இறந்தது முதல் அவர் பழய ஆறுமுக முதலியாராகவே இல்லை. மேலுக்கு மாத்திரம் முன்போல் எல்லோருடனும் பேசிக்கொண்டு தன் வேலையைச் செய்து வந்த போதிலும், அவர் ஹிருதயமானது அப்பெரும் துக்கத்தினால் குன்றியது என்பதை நான் நன்றாய் அறிவேன். இங்ஙனம் அவரது ஏக புத்திரன் அவருக்கு முன்பாகச் சென்றமையால், நானே அவருக்கு தீக்கடனையும் நீர்கடனையும் செலுத்த வேண்டியதாயிற்று. எங்கள் சபையின் தசராக் கொண்டாட்டத்திற்கு நான்கைந்து நாட்களுக்கு முன் தான் மேற்சொன்ன விபத்து நேரிட்டபடியால், இவ் வருஷம் தசராக் கொண்டாட்டத்தில் நானும் என துயிர் நண்பர் ரங்கவடிவேலுவும், ஒரு பாகமும் எடுத்துக் கொள்ளவில்லை. அவர் திடீரென்று மடிந்த

விதத்தைக் கேட்டு மனமுருகாத சபை அங்கத்தினர் ஒருவரு மில்லை யென்றே நினைக்கிறேன்.

இனி, இதை மறக்க முயன்று இவ்வருஷம் நடந்த சந்தோஷ கரமான சமாசாரங்களை எடுத்து எழுதுகிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபையின் அங்கத்தினர் தொகை 2000-க்கு மேற்பட்டது. டிசம்பர் மாசம் 31-ம் தேதி 2105 அங் கத்தினர் இருந்தனர்; 1459 சென்னை வாசிகள், 308 வெளியூர் வாசிகள் 334 ஸ்திரீகள் இதில் அடங்கி இருந்தனர். இத்தொகை யானது இதுவரையில் அதிகப்படவில்லை. இவ்வருஷம் முதல் குறைந்துகொண்டே வந்ததே யொழிய அதிகப்படவில்லை; ஆறுமுக முதலியாருடன் எங்கள் சபையின் லட்சுமி ஒரு கரத்தை இழந்த னள் போலும். இரண்டாயிரம் அங்கத்தினர் சேர்ந்தவுடன், அந்த இரண்டாயிரமாவது அங்கத்தினராகச் சேர்ந்த ஏ. ஆறுமுக முதலியார் என்பவர் இவ் வருஷம் பிப்ரவரிமாதம் 5-ஆம் தேதி, சபைக்கு ஒரு சாயங்கால விருந்தளித்தார்.

இவ்வருஷம் எங்கள் சபையில் புதிதாய் ஆடப்பட்ட தமிழ் நாடகங்கள், அ. சுப்பிரமணிய பாரதியார் எழுதிய மாருதி விஜயம் என்னும் நாடகமும், திவான் பஹதூர் எஸ். பாவநந்தம் பிள்ளை அவர்கள் எழுதிய "பாதுகா பட்டாபிஷேகமுமாம்" இவற்றுள் முந்திய நாடகமாகிய மாருதி விஜயத்தில், எனதுயிர் நண்பர் ரங்க வடிவேலு சீதையாக நடித்தபடியால், நான் ஸ்ரீ ராமராக நடிக்க வேண்டி வந்தது. "நடிக்க வேண்டி வந்தது" என்று யோசித்தே இங்கு வரைந்தேன். ஏனெனில், ரங்கவடிவேலு தான் சீதையாக நடிக்க வேண்டுமென்று விரும்பி, அந்தப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டிராவிட்டால், நான் ஸ்ரீ ராமருடைய பாகத்தின் அருகிலும் போயிருக்கமாட்டேன் என்பது திண்ணம். இதற்கு முன்பாகப் பல வருடங்களாக ரங்கவடிவேலு உட்பட எனது பல சினேகிதர் கள், என்னை ஸ்ரீமத் ராமாயணத்தை முற்றிலுமாவது, அல்லது சில முக்கிய பாகங்களையாவது, நாடக ரூபமாக எழுத வேண்டு மென்று நிர்ப்பந்தித்தும், நான் மறுத்து வந்தேன். இதற்கு முக்

கிய காரணம், வால்மீகி எழுதிய அவர் திவ்ய சரித்திரத்தைத் தினம் படித்துத் தொழுது வருவதிலிருந்து ஸ்ரீ ராமருடைய பாகத்தை ஒருவராலும் சரியாக மேடையின் பேரில் ஆட முடியாதென்பது என் துணிபு என்று முன்பே எனது நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கின்றேனென நினைக்கிறேன். இக்காரணம் பற்றி, ராமாயணத்தின் அருகிற்போக மாட்டேன் என்று மறுத்துக்கொண்டுவர, எனதுயிர் நண்பர் "நீங்கள் எழுதாவிட்டால் போகிறது. சுப்பிரமணிய பாரதியார் எழுதியிருக்கிறார் மாருதி விஜயம் என்னும் ராமாயணக் கதையை நாடகரூபமாக. அதில் நான் சீதையாக நடிக்க விரும்புகிறேன். அதற்காக நீங்கள் ஸ்ரீராமராக நடிக்கவேண்டும்" என்று தொந்திரவு செய்ய, மனமில்லாதபோதிலும் இசைந்தேன். இதில் இரண்டு காட்சிகளில் தான் எனக்குப் பாகமுண்டு; அவ்விரண்டு காட்சிகளிலும் கூட நான் நன்றாய் நடிக்கவில்லை என்பது என் நிச்சயம். உலகத்தவர்க்கு ஒரு உத்தம புருஷனை வர்ணிக்க வேண்டுமென்று வால்மீகி முனிவர் வர்ணித்துள்ள ஸ்ரீ ராமபிரானைப்போல் நாம் எங்கு நடிக்கப் போகிறோம் என்னும் அச்சம் என் மனதில் பூரணமாய்க் குடிகொண்டிருக்க, நான் அந்த பாத்திரத்துக்குத் தக்கபடி நடிக்க அசக்தனாயிருந்தேன். இந் நாடகமானது மறுபடியும் எங்கள் சபையில் இதுவரையில் என்னாலும் நடிக்கப்படவில்லை; மற்றெவராலும்கூட நடிக்கப்படவில்லை.

இவ்வருஷம் நான் புதிதாய் எழுதிய நாடகம் "வள்ளிமணம்" என்பதாம். இது எங்கள் சபையின் நாடகங்களுள் ஒரு முக்கிய நாடகமாக மதிக்கப் படுவதினாலும், இந் நாடகத்தினால் எங்கள் சபைக்கு எப்பொழுது ஆடியபோதிலும் நல்ல வரும்படி வருவதினாலும் இதைப்பற்றி சற்று விவரமாய் எழுத விரும்புகிறேன்.

இதற்குச் சில வருஷங்களுக்கு முன்பாகச் சென்னையில் இந்த வள்ளியின் கதையானது பல நாடக கம்பெனிகளால் ஆடப்பட்டுப் பிரபலமாகி வந்தது. இதைப் பன்முறை பார்த்த எனது ஆருயிர் நண்பர் தனக்காக இக்கதையை நான் நாடக ரூபமாக எழுதித் தரவேண்டும் என்று வற்புறுத்தினார். இவர் சாதாரண

மாக நான் ஏதாவது ஒரு நாடகத்தை எழுதி முடித்தால், அது ஆடப்பட்டவுடன் "பிறகு எனக்கு என்ன புதிய நாடகம் எழுதித் தரப் போகிறீர்கள்?" என்று என்னைக் கேட்டுக்கொண்டிருப்பார். இதற்காக நான் அவர்மீதில் குற்றம் கூறுவதில்லை. அவர் என்னை அப்படித் தொந்தரவு செய்து வந்ததற்காக, நான் இப்பொழுது நினைத்துப் பார்க்கும் பொழுது, பெரும் நன்றி பாராட்ட வேண்டியவனாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஏனெனில், நான் சாதாரணமாக, சோம்பேறிக் குணமுடையவனென்றே நினைக்கிறேன். இப்படி அவர் என்னை அடிக்கடி இடைவிடாது தொந்திரவு செய்துகொண்டு வந்தபடியினால்தான் 1895-ம் வருஷம் முதல் 1913-ஆம் வருஷம் வரையில் நான் எழுதிய நாடகங்களுள் பெரும்பாலானவற்றை எழுதி முடித்தேன் என்று உறுதியாய் நம்புகிறேன்; இத்தூண்டுகோலில்லாவிடின் அவற்றுள் நான்கில் ஒரு பங்குகூட எழுதி முடித்திருக்க மாட்டேன் என்பது என் தீர்மான எண்ணம். 1924-ம் வருடம் முதல் இந்த வேலையை எனது தற்கால உயிர் நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் எடுத்துக் கொண்டிருக்கிறார்! இதைப்பற்றிப் பிறகு எழுதவேண்டி வரும்.

மேற்சொன்னபடி ரங்கவடிவேலு என்னை வற்புறுத்தியபோது, ஸ்ரீ சுப்பிரமணியர் பாத்திரத்தை என்னால் ஆட முடியாது, அதைச் சரியாக ஆட என்னிடம் சக்தியில்லை, ஸ்ரீ ராமர் பாத்திரத்தை ஆடாததற்கு என்ன ஆட்சேபனை யிருந்ததோ, அந்த ஆட்சேபனை இதற்கும் இருக்கின்றது, எனத் தெரிவித்தேன். அப்போது இதற்குள்ளாக வக்கீல் பரீட்சையில் தேறி, என்னுடன் ஜூனியர் ஆக வக்கீல் வேலை பார்த்துவந்த இவர், வக்கீல்களின் நியாயப் பிரகாரம் "எப்படி ஸ்ரீ ராமர்வேடம் ஒரு முறை பூண்டீரோ அம்மாதிரியாகவே, சுப்பிரமணியர் வேடமும் எனக்காக ஒரு முறை பூணும்" என்று வாதித்தார். இந்த வாதுக்கு வகை சொல்ல வறியாது ஒருவாறு 'ஆகட்டும்' என்று இசைந்தேன். அதன்பேரில், இதற்கு முன்பாக ஒரு முறை எங்கள் சபையில் ஆடப்பட்ட பி. எஸ். துரைசாமி ஐயங்கார் எழுதிய "வள்ளி திருமணம்" என்னும் நாடகத்தை எடுத்துக்கொண்டு, அதில் முன் பாகத்தையும், கடைசி பாகத்தையும் அப்படியே வைத்துக்கொண்டு, அந்நாட

காசிரியர் அனுமதியின்மீது, இடையிலுள்ள சுப்பிரமணியர் வரும் படியான முக்கியமான மூன்று காட்சிகளை மாத்திரம் என் மனம் சென்றபடிப் புதிதாய் எழுதி முடித்தேன். இவைகளை நான் எழுதியவுடன் படித்துப் பார்த்து, மிகவும் நன்றா யிருக்கிறதென மகிழ்ந்து, உடனே நாடகத்தை ஆடவேண்டுமென்று விரும்பினார். நாடகத்தின் இம் மூன்று காட்சிகளையும் எழுதி முடித்தவுடன் இன்னொரு கஷ்டம் ஆரம்பித்தது. முதலிலேயே எனதுயிர் நண்பரிடம் நான் இந்நாடகத்தில் பாடமாட்டேன் என்று சொல்லியிருந்தேன். அப்பொழுதெல்லாம் சும்மா இருந்துவிட்டு, நான் எழுதியானவுடன் அதெல்லாம் உதவாது, நீங்கள் எப்படியும் இந் நாடகத்தில் பாடித்தான் ஆகவேண்டும் இல்லாவிட்டால் எனக்குக் கஷ்டமாயிருக்கும், நீங்கள் பாடாவிட்டால் தர்க்கப் பாட்டுகளாகிய சுப்பிரமணியருடன் பாடவேண்டிய என் பாட்டுகளை நான் விட்டு விட வேண்டிவரும்” என்று நிர்ப்பந்திக்க ஆரம்பித்தார். என்னால் தாளத்துடன் பாடமுடியாது பிறகு அவமானத்திற்கிடமாகும், என்று நான் எவ்வளவோ சொல்லியும் ஒரே பிடிவாதம் பிடித்தார். வேறெந்த நியாயமும் பயன்படாமற் போகவே கடைசியில், “நீங்கள் மனம் வைத்தால் எப்படியும் சாதிப்பீர்கள். என் பொருட்டு அவ்வளவு கஷ்டம் எடுத்துக் கொள்ளக் கூடாதா?” என்று கேட்டார். இந்த நியாயத்திற்கு நான் என்ன பதில் உரைப்பது? உடனே பதில் ஒன்றும் சொல்லாம லிருந்துவிட்டு, வீட்டுக்குப் போனதும் இவ்வளவு சொல்லும் பொழுது, நாம் முயன்று தான் பார்ப்போமே என்று தீர்மானித்து, அவர் அறியாதபடி ஏகாந்தமாய் தினம் கஷ்டப்பட்டு நான்கு பாடல்கள் மாத்திரம் தாளத்துடன் சரியாகப் பாடக் கற்றுக்கொண்டேன். இதனுடன் நான்கைந்து விருத்தங்களையும் ராகத்துடன் பாடக் கற்றேன். பிறகு ஒரு நாள் இந் நாடகத்திற்கு ஒத்திகை செய்த பொழுது அவர் பாடியானவுடன் திடீரென்று நானும் தாளத்துடன் என் பாட்டுகளைப் பாட ஆரம்பித்தேன்! அதைக் கேட்டுவிட்டு அவர் கூறிய பதில் இன்னும் என் மனதில் குடிகொண்டிருக்கிறது. “திருடு! தாளம் வராது என்று சொல்லிவிட்டு, இப்பொழுது, என்னமாக வந்தது? எல்லாம் நீங்கள் மனம் வைத்தால், செய்து முடிப்பீர்கள்.

இனிமேல் எப்பொழுதாவது என்னிடம் தாளத்துடன் பாட்டு வராது என்று சொல்லுங்கள்! உங்களுக்கு பைன் போடுகிறேன்!" என்று சிரித்துக்கொண்டு கூறின உருவம் என் மனதைவிட்டு இன்னுமகலவில்லை! எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாசய்யங்காரும் நானும் ஒருவருக்கொருவர் பைன் போட்டுக் கொள்ளுகிற வழக்கம்போல, இவரும் நானும் ஏதாவது தப்பு செய்தால் பைன் போட்டுக் கொள்வோம். ஆயினும் இதில் ஒரு வித்தியாசம். வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரும் நானும் பைன் போட்டுக்கொண்டால் அதை யெல்லாம் ஒரு உண்டியிற் போட்டு ஏதாவது தர்மத்திற்கு உபயோகிப்போம்; எனக்கு ரங்கவடிவேலு பைன் போட்டால் நான் அதை அவருக்குக் கொடுத்துவிட வேண்டும். அன்றியும், அவருக்குக்கு நான் பைன் போட்டாலும் அவருக்கு, அதை நானே கொடுத்து விடவேண்டும்! இதென்ன நியாயம் என்று கேட்டால், "நீங்கள் எழுதி யிருக்கிறீர்களே, இரண்டு நண்பர்கள் என்னும் நாடகத்தில்! இது பெண்கள் நியாயம்!" என்று கூறுவார். என்னுடன் இப்படி வேடிக்கையாய்ப் பேசும் போதெல்லாம் தன்னை ஒரு பெண்ணாகவே பாவிப்பார்!

இந்த வள்ளிமணம் என்னும் ஒரு நாடகத்தில்தான் ஏதோ கொஞ்சம் தாளத்தை ஒட்டி நான் பாடியது. முதன் முதல் புஹிரங்மாக நாடகமேடையில் நின்று தாளத்துடன் எனது பாடல்களைப் பாடியபோது, எனது நண்பர்கள் எல்லாம், "ஓகோ! வாத்தியார் கூடத் தாளத்துடன் பாடக்கற்றுக்கொண்டாரே!" என்று கைகொட்டி நகைத்தனர்! இந்நாடகத்தில் முதல் முறை நான் நடித்தபொழுது, ஆரம்பித்த ஒரு வழக்கத்தை இன்னும் அந் நாடகம் நடிக்கும்பொழுதெல்லாம் விட்டவனன்று, சுப்ரமணியர் வேடம் பூண்டவுடன், கையில் அவரது வேலாயுதத்தை எடுக்குமுன், அதை ரங்கத்தில் கோயிலில் வைக்கவேண்டிய அவரது சிலை உருவத்தின் கையில் வைத்து, பூஜித்து, அதை நாடகத்தில் ஏந்தும்படியான சக்தி எனக்குத்தந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தே பிறகு கையிலெடுப்பேன்.

இந்த வள்ளி நாடகமானது அடிக்கடி அநேக சபைகளிலும் கம்பெனிகளிலும் ஆடப்படுகின்றமையால், இதில் வரும் கதா

நாயகனுன சுப்பிரமணியர் வேடத்தைப் பற்றிச் சற்று விரிவாக எழுதவிரும்புகிறேன். நான் பார்த்தபடி அநேகம் முறை, முக்கியமாக நாடகக் கம்பெனிகளில், இவ்வேஷம் தரிப்பவர்கள் சுப்பிரமணியர் தன் சுய ரூபத்துடன் முதற் காட்சியில் தோன்றும்போது, சம்கி சொக்காய்களையும், நிஜார்களையும் அணிந்து அதன் பேரில் பூட்ஸ் அல்லது ஸ்லிப்பர்ஸ் போட்டுக்கொண்டு, தலையில் ஒரு சரிகை டொப்பியைப்போட்டுக்கொண்டு வருகிருர்கள். இப்படி வருவதின்தவறு பாமரஜனங்களுக்குத் தோன்ருவிட்டாலும், நல்லறிவு கொஞ்சமேனும் உடையவர்களுக்கு இது அருவருப்பையுண்டு பண்ணுகிறது என்பதற்கு கொஞ்சமேனும் சந்தேகமில்லை. பூர்வகாலத்தில் ஜனங்கள் என்னென்ன உடையை யணிந்தார்கள் நமது தேசத்தில் என்று கண்டு பிடிப்பது சாலவும் கஷ்டமாயினும் இந்தியர்கள் தெய்வங்களாக வணங்கும் சுப்பிரமணியர், ராமர் முதலியோர் இப்படி இப்படி உடைகளை அணிந்திருந்தார்கள் என்று சிறிது ஆராய்ச்சி செய்த போதிலும் கண்டு பிடித்து விடலாம். அன்றியும் புராதனமாயுள்ள கோயில்களின் சிலையுருவங்களைக் கொண்டு, சந்தேகமின்றி நிர்ணயித்து விடலாம். சங்க நூல்களில் முழங்கால் வரையில் அணியும் கால் சட்டைக்கு ஒரு பெயரே இருக்கின்றது வட்டுடையென்று; அதை அணிவதற்கு ஏதாவது அசந்தர்ப்பமாயிருந்தால் பட்டு பீதாம்பரங்களை அழகாக அணியலாம். இவை யிரண்டில் சுப்பிரமணியர் என்றும் இளமை மாருதவர் என்று கூறப்பட்டிருக்கிற படியாலும், தமிழில் அவருக்கு முருகன் (முருகி-இளமை) என்கிற பெயர் இருப்பதாலும், முழங்கால் வரையில் சட்டையணிவதே தகுமென்பது என் அபிப்பிராயம். அன்றியும் தலையில் அவர் கிரீடமணியவேண்டியது அவசியம். தற்காலத்திய சம்கி குல்லாய்களையணிவது மிகவும் ஆபாசமாம்.

பிறகு இரண்டாவது காட்சியில் அவர் வேடுவனாய் வரும்பொழுது, மான் தோல், அல்லது புலித்தோல் அல்லது ஏதாவது விலங்கின் தோலணிந்து, கிரீடத்தை நீக்கி, வேடர் முடியுடனும், ஆபரணங்களையெல்லாம் கழற்றி விட்டு, கைவில்லுடன் தோன்றுவதே நியாயமாகும். அநேக கம்பெனிகளில் சுப்பிரமணியர், முன்பிருந்தகோலத்துடனே, கையில் வில்லை மாத்திரம் எடுத்துக்

கொண்டு வருவதைப் பார்த்திருக்கிறேன். அக்கோலத்தில் அவரை சாட்சாத் சுப்பிரமணியர் என்று அறியாத வள்ளி மிகவும் புத்தி யற்றவளாயிருக்கவேண்டும்!

அன்றியும் தற்காலத் தென் இந்திய நாடகமேடையில் இந் நாடகம் நடிக்கப்படும் பொழுது சாதாரணமாக நடக்கும் மற்றொரு பெருத்த ஆபாசத்தை இங்கு கண்டித்தெழுத விரும்புகிறேன். சுப்பிரமணியர் வேடம் பூண்டவன், ரங்கத்தில் முதலில் தோற்றும் பொழுது, "ஜெய ஜெய கோகுல பால!" அல்லது "நின்னெவரனி" முதலிய கிருதிகளைப் பாடிக்கொண்டு வருவதும் மிகவும் தவறாகும். இக்கிருதிகளைப் பற்றி நான் குற்றமாகக் கூறவில்லை. அக்கிருதிகளை எத்தனை முறை கேட்டாலும் இன்னும் பன்முறை கேட்க விரும்பு கிறேன். ஆயினும் சுப்பிரமணிய வேஷதாரி, அவைகளைப் பாடுவது தவறாகும். அப்பாட்டுகளை அந்த வேஷதாரியிடமிருந்து கேட்க ஜனங்கள் விரும்பினால், காட்சிகளுக்கு இடையிலுள்ள அவகாசத்தில், அந்த வேஷதாரியை, தனியாகத் திரையின் முன்பு வரவழைத்துப் பாடக்கேட்கட்டும். சுப்பிரமணியராக ரங்கத்தில் ஆக்டு செய்து கொண்டிருக்கும் பொழுது இத்தகைய கிருதிகளையெல்லாம் பாடு வது மிகுந்த ரசாபாசமாம் என்பது என் நிச்சயம். தற்காலத்திய நாடக மேடைகளில் நடக்கும் சங்கீத ஆபாசங்களைப்பற்றிப் பிறகு விரிவாக எழுதலாமென்றிருக்கிறேன்.

இந்த வள்ளிமணம் என்னும் நான் எழுதிய நாடகமானது முதன் முறை நடிக்கப்பட்டபோது சபையோரால் மிகவும் சந்தோ ஷத்துடன் ஏற்கப்பட்டது. நான் சீக்கிரத்தில் மற்ற காட்சிகளை யும் என் மனதிற்கு யுக்தமென்று தோன்றியபடி எழுதி முடித்து இப்புத்தகத்தை மறுவருடம் அச்சிட்டேன். இந்நாடகமானது பன்முறை எங்கள் சபையில் ஆடப்பட்டிருக்கிறது. இது ஆடப் படும் பொழுதெல்லாம் நல்ல பணம் வசூலாகி யிருக்கிறது. எங்கள் சபைக்குப் பணத்தைக் கொண்டுவந்த நாடகங்களில் இது ஒரு முக்கியமானதாம். மனோஹரன், லீலாவதி-சுலோசனா நாடகங் களுக்குப் பின்பாக இதையே கூறவேண்டும். இது ஒன்பது வரு டங்களுக்கு முன்புதான் அச்சிட்ட நாடகமாயினும் இதுவரையில்

50 முறைக்குமேல் ஆடப்பட்டிருக்கிறது. எனது இந்நாடகமானது நாடகக் கம்பெனிகளால் ஆடப்படுவதில்லை. இதற்கு முக்கிய காரணம் இக்கதையை அநேக நாடகக் கம்பெனிகளில், பாட்டுகளை மாத்திரம் கற்றுக்கொண்டு வசனம் வாய்க்குவந்தபடிப் பேசிக் கொள்ளும் வழக்கமாயிருக்கலாமெனத் தோன்றுகிறது. அன்றியும் பாய்ஸ் கம்பெனிகளில், அவர்களுக்கு வேண்டிய வசனங்களை யாரையாவது கொண்டு எழுதிவைத்துக் கொள்ளுகிறார்கள். இப்படிச் செய்வதினால், நான் எழுதியபடி நடிப்பதென்று என் உத்திரவைப் பெற்று, எனக்குச் செலுத்தவேண்டிய கட்டணம் கட்ட வேண்டிய கஷ்டம் அவர்களுக்கு இல்லாதிருப்பதால் அவர்கள் மீது நான் குறை கூறுவதற்கில்லை.

நான் இப்பொழுது நடிக்க விரும்பும் பாத்திரங்களுள் இந்த வள்ளி மணத்தில் வரும் சுப்பிரமணியர் வேடம் ஒன்றாகும். எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலுவுக்கப்புறம் இந்நாடகத்தில் எனதுயிர் நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் வள்ளியின் வேடத்தில் மிகவும் நன்றாய் நடித்து வருகிறார்.

இவ்வருஷம் கோடைகால விடுமுறையில் எங்கள் சபையானது காரைக்குடிக்கும், நாகப்பட்டணத்திற்கும் போய்வந்தது. மே மாதம் 25-ஆம் தேதி புறப்பட்டுப்போய், ஜுன் மாதம் 27-ஆம் தேதி திரும்பி வந்தோம். இடையில் காரைக்குடியில் ஏழு நாடகங்களும் நாகப்பட்டணத்தில் நான்கு நாடகங்களும் ஆடினோம். இவ்விரண்டு இடங்களிலும் நாங்கள் ஆடிய நாடகங்கள் மிகவும் சிலாகிக்கப்பட்டனவென்றே சொல்லவேண்டும். அன்றியும் நல்ல தொகையும் வசூலாயிற்று. இந் நாடகங்களில் வந்த மொத்தவரும்படி 9250-12-6 செலவு 5710-14-0 போக, மிகுந்த லாபம் 3539-14-6 ரூபாய், சபையின் கட்டிட பண்டுக்குச் சேர்க்கப்பட்டது. இவ்வருஷத்திய தமிழ் கண்டக்டராகிய வி. வி. தேவநாத ஐயங்கார், எங்களுடன் வருவதற்கில்லாமற் போனபடியால், நான் இந்நாடகங்களுக்குக் கண்டக்டராக நியமிக்கப்பட்டு, அவ்வூர்களில் இந்நாடகங்களை நடத்தினேன்.

செட்டி நாட்டிற்கு எங்கள் சபை போய் அங்கு காரைக்குடியில் நாடகம் ஆடவேண்டுமென்று எங்களை உற்சாகப்படுத்தியவர்

நாட்டுக்கோட்டை செட்டியார் வகுப்பைச் சேர்ந்த, எனது நண்ப ராகிய எம். ஆர். எம். ராமசாமி செட்டியாரே. அவரும், கே. எம். ஏ. ஆர். வி. பெத்தாச்சி செட்டியாரும் காரைக்குடியில் எங்களுக் காகச் செய்த உபசாரங்களும், நாடகங்களுக்காக எங்கள் பொருட்டு எடுத்துக்கொண்ட கஷ்டமும் செப்பத்தரமல்ல. தற்போது சென் னையிலிருந்து காரைக்குடிக்கு நேராக ரெயில் போகிறது. 1921-ஆம் வருஷம் அப்படிப்பட்ட சௌகர்யம் கிடையாது. நாங்கள் சென் னையிலிருந்து புறப்பட்டுத் திருச்சிராப்பள்ளி போய்ச் சேர்ந்து, அங்கிருந்து ஐம்பது மைலோ அறுபது மைலோ மோட்டார் வண் டிகளில், புதுக்கோட்டை வழியாக, காரைக்குடிக்குப்போகவேண்டி வந்தது. திருச்சிராப்பள்ளியிலிருந்து காரைக்குடிக்கு இவ்வாறு போக, ராமசாமி செட்டியார் அவர்கள், எங்களுக்கெல்லாம் பல மோட்டார் வண்டிகளை ஏற்பாடு செய்திருந்தார். காரைக்குடிக்குப் போய்ச் சேர்ந்த தினம் நேர்ந்த ஒரு சங்கடத்தை இனி தெரிவிக் கிறேன். நாங்கள் ஐந்தாறு மோட்டார் வண்டிகளில் போனபோது, எல்லா வண்டிகளும் நெருக்கமாய்ச் சென்றால், முன் வண்டியின் வேகத்தினால் கிளம்பும் புழுதி, பின்னிருக்கும் வண்டிக்குக் கஷ்டத் தை விளைக்குமென்று, ஒவ்வொரு வண்டிக்கும் இடையில் கொஞ்ச தூரம் விட்டு, ஓட்டச் சொன்னோம். நாங்கள் போன பாதை அவ் வளவாக நன்றாய்ச் செப்பனிடாதபடியால், அதிவேகமாய்ப் போவ தற்கில்லாமற் போயிற்று. அன்றியும் இடையில் புதுக்கோட்டை யில் தங்கி, சாயங்காலம் டீ சாப்பிட்டு விட்டுப் போகவேண்டு மென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அப்படியே புதுக்கோட் டையில் ம-ா-ா-ஸ்ரீ பி. வி. ரகுநாதய்யர் பி.ஏ., பி.எல்., அவர்கள்வீட் டில் தங்கிப்போனோம். இவ்விடம் அவர் வீட்டில் இல்லாதபோதிலும் அவரது வயோதிகரான தாயார் எங்களுக்கு மிகவும் உபசரணை செய் தார்கள். இங்கு சற்றுத் தாமதித்துப் போனபடியால், இருட்ட ஆரம்பித்து விட்டது. எப்படியாவது விளக்கேற்றுமுன் காரைக்குடி போய்ச் சேரவேண்டுமென்று நான் துரிதப்பட்டவனாய் எங்கள் மோட்டார் வண்டியை முன்பு விடச் சொன்னேன். நான் இருந்த வண்டியில் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவும் ராமசாமி செட்டியாரும் இன்னும் யாரோ ஒரு அங்கத்தினரும் இருந்தனர்.

எங்களுக்குப் பின்னால் வந்த வண்டி ஒன்றில் என் குமாரன் வரத ராஜனும் இன்னும் சில ஆக்டர்களும் இருந்தனர். பள்ளத்தூர் போகிறவரையில் ஏறக்குறைய எல்லா வண்டிகளும் ஒருங்கு சேர்ந்து போயின. பிறகு அவ்விடமிருந்து காரைக்குடிக்குப் போக, எல்லா மோட்டார் வண்டி ஓட்டுகிறவர்களுக்கும் வழி தெரி யுமென்று எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு எங்கள் வண்டியை வேகமாய் விடும்படிக் கூற, அப்படியே எங்கள் டிரைவர் வேகமாய் விடக் காரைக் குடிக்குச் சுமார் ஏழு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். என் குமாரன் ஏறிய வண்டியும் இன்னொரு வண்டியும் தவிர மற்ற கார்களெல்லாம் வந்து சேர்ந்தன. ஏழரை மணிக்கெல்லாம் சாப் பாடு தயாராகி இலை போட்டிருந்தார்கள். அவர்களும் வந்தவுடன் எல்லோரும் ஒன்றாய்ச் சாப்பிடலாம் என்று சொன்னோம். எட்டா யிற்று, ஒன்பதாயிற்று, பத்தாயிற்று, பதினொன்றாயிற்று—அந்த இரண்டு கார்களும் வந்து சேரவில்லை! மற்றவர்களையெல்லாம் "நீங் கள் சாப்பிடுங்கள்; அவர்களுடன் நான் சாப்பிடுகிறேன்" என்று சொல்லியும் அனைவரும் அவர்களெல்லாம் வாராமல் சாப்பிட மாட் டோம் என்று மறுத்து விட்டார்கள். எல்லோரும் கவலையுடனும் பசியுடனும் அந்த இரண்டு கார்களின் வரவை எதிர்பார்த்திருந் தோம். போதாக்குறைக்குப் பள்ளத்தூர் வழியாக வந்த வேறு இரண்டு மோட்டார் வண்டிகளில் வந்த மனுஷ்யர்களை விசாரித்த தில் வழியில் எங்களவர்கள் ஏறியிருந்த வண்டிகளைச் சந்திக்கவில்லை யென்று கூறினார்கள். எனக்கு மாத்திரம் அல்ல; எல்லோருக் குமே இதனால் கவலை அதிகமாயிற்று. ஒருபுறம் என் புதல்வன் கதி என்னவாயிற்றோ என்கிற பயம். மற்றொருபுறம் மற்ற ஆக்டர்க ளுக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ என்கிற வருத்தம்; பன்னிரண்டு மணிவரையில் தைரியமாய் பொறுத்தேன். அதற்குமேல் பொறுக்க முடியாமல் முகவாட்டத்துடன் உட்கார்ந்து என் கைகண்ட ஔஷ தம் நாடினேன்—எல்லோரும் சவுக்கியமாய் வந்து சேரவேண்டு மென்று பிரார்த்தித்தேன்! 'கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள் மேற் காதல்' என்றார் பெரியார் ஒருவர். அவர்களுக்கே அப்படி யிருக்க, கேவலம் இல்லறத்திலுழலும் என்போன்ற பேதையர்க்குச் சொல்வானேன்!

பிறகு பன்னிரண்டு மணிக்கு அந்த இரண்டு வண்டிகளும் சாவகாசமாய் வந்து சேர்ந்தன! என்னவென்று விசாரிக்குமளவில், என் குமாரன் ஏறிவந்த வண்டிக்கு ஏதோ தடங்கல்நேரிட, அதைச் சரிபடுத்திக்கொள்ளும் பொருட்டு, பாதையைவிட்டுப் பள்ளத்தூரில் மோட்டார் வண்டிகள் ரிப்பேர் செய்பவன் வீட்டிற்குப்போய் அதைச் சரிப்படுத்திக்கொண்டு வர, இவ்வளவு நேரமாகியதென்றும் அவ்வண்டியைத் தனியாக விட்டு வர, மனமில்லாமல் மற்றொரு வண்டியையும் நிறுத்தவேண்டி வந்ததென்றும் தெரிவித்தார்கள். அதன் பிறகு அன்றிரவு ஏறக்குறைய 1 மணிக்கு எல்லோரும் ஆறிப்போன உணவை உண்டோம்.

மறுநாள் வெள்ளிக்கிழமை நாங்கள் எல்லோரும் அங்கு ஒரு மைலுக்கப்பாலுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களால் கட்டப்பட்ட அழகிய கோயில் ஒன்றுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்தோம்.

அங்கு நாங்கள் எங்கள் வழக்கப்படி நடத்திய முதல் நாடகம் 'லீலாவதி-சுலோசனா'. அன்று சாயங்காலம் நாங்கள் எல்லோரும் வேஷம்தரிக்க ஆரம்பித்துக்கொண்டிருந்தபொழுது, ஒரு பெரிய கூடையில், ஏறக்குறைய ஐந்தடி நீளமுள்ள, ஒரு ஆள் தூக்க முடியாத, இரண்டு ரோஜாமாலைகள் கொட்டகைக்கு வந்துசேர்ந்தன. இதென்னவிஷயம்? யாருக்காக இவை வந்தன என்று நான் மெல்ல விசாரித்தபொழுது, எங்களை இவ்வூருக்குவரவழைத்தசெட்டியார்கள், என் தாருயிர் நண்பர் ரங்கவடிவேலுக்கும் எனக்கும் போடுவதற்காக, இவைகளைத் தஞ்சாவூரிலிருந்து வரவழைத்ததாகக் கேள்விப்பட்டேன். "சுண்டைக்காய் காற்பணம் சுமை கூலி முக்காற் பணம்" என்றபடி மாலைகளின் செலவு ஒரு பக்கம் இருக்க, அவைகளைத் தஞ்சாவூரிலிருந்து கொண்டுவர மோட்டார்கார் செலவு அதை விட அதிகம்; ஏறக்குறைய 45 ரூபாய் இதற்காகச் செலவு செய்ததாகத்தெரிந்தது. இருந்தும், மெல்ல அச்செட்டிமார்களுள் பிரதானமானவரிடம் போய், எங்கள் சபையின் கோட்பாடுகளுக்கு இது விரோதமானது. எங்களுக்குள் எல்லா ஆக்டர்களும் சமமாயிருக்க, நாங்கள் இருவர் மாத்திரம் மாலை மரியாதை பெறுவது

நியாயமல்லவென்று கூறிப் பார்த்தேன், அவர் அதற்கிசையாது நாங்கள் உங்களுக்கு மரியாதை செய்ய வேண்டுமென்று விரும்பு கிறோம், இதில் தவறென்ன வென்று தர்க்கிக்க ஆரம்பித்தார். அதன்மீது அவர் பிடிவாதமாய்ப் பேசுகிறார் என்று கண்டவனாய், எனது கடைசி நியாயமாக அப்படி எங்களை நிர்ப்பந்திப்பதால், மேடையின் பேரில் இதை வாங்கமாட்டோம் என்று மறுப்போம் என்று சொல்ல வேண்டியதாயிற்று. அதன்பேரில், நாங்கள் இவ் வளவு செலவு செய்து கஷ்டப் பட்டுக்கொண்டு வந்த ரோஜா மாலைகளை என்ன செய்வது என்று அவர் கேட்க, "அவைகளை மிக வும் நன்றாக உபயோகப்படுத்தும் மார்க்கம் நான் சொல்லுகிறேன். அவைகளை அப்படியே, கோயிலுக்குக் கொண்டுபோய், ஸ்வாமி, அம்மனுக்குப் போட்டுவிடுங்கள்!" என்று பதில் சொன்னேன். அதன்மீது அவர், நான் சொன்னது நியாயம் என ஒப்புக்கொண்டு அப்படியே செய்தார். இந்த சிறிய விஷயத்தைப்பற்றி இங்கு நான் இவ்வளவு விவரமாய் எழுதியதற்கு ஒரு முக்கிய காரண முண்டு. ஆமெடேர் சபைகளில், முக்கிய ஆக்டர்களென்றும் முக் கியமில்லாத ஆக்டர்களென்றும் பிரிப்பது தவறு. எல்லோரையும் ஒரே சமமாகப் பாவிக்க வேண்டுமென்பது ஒருபக்க மிருக்கட்டும் இம்மாதிரி ரோஜா மாலைகளை ஆக்டர்களுக்கு (அவர்கள் எவ்வளவு சிறந்த ஆக்டர்களா யிருந்தபோதிலும்) மேடையின் பேரில் போடு வது யுக்தமல்ல வென்பது என் அபிப்பிராயம். சாதாரணமாக எல்லா நாடக கம்பெனிகளிலும் இது வழக்கமா யிருக்கிறது தற் காலம்; அயன் ராஜபார்ட், அயன் ஸ்திரீபார்ட் என்று சொல்லப் பட்ட முக்கியமான ஆக்டர்கள் மேடையின்மீது தோன்றியவுடன், அவர்கள் எந்த வேஷத்திலிருந்த போதிலும், என்ன சந்தர்ப்பத்தில் தோன்றிய போதிலும், சபையிலிருந்து அவர்களுக்கு வேண்டியவர் கள், அவர்களைக் கௌரவப் படுத்தவேண்டி ரோஜா முதலிய மலர் களால் ஆகிய மாலைகளைக் கொண்டுபோய் அவர்கள் பாட்டையோ, பேச்சையோ நிறுத்திப் போடுகிறார்கள். இது பெரும் தவறென்று எனக்குத் தோன்றுகிறது. ஹரிச்சந்திர நாடகத்தில் மயான காண்டம் நடக்கும்; அதில் ஹரிச்சந்திரன் தோட்டியாகத் தோன் றியவுடன் ரோஜா மாலை ஒன்று சரிகைகளுடன் அவன் கழுத்தில்

கொண்டுபோய்ப் போடுவது! அல்லது சந்திரமதி தன் ஒரே மகனை இழந்ததற்காக அழுதுகொண்டு வரும் பொழுது மேற்கண்டபடி ஒரு மாலையை அவள் கழுத்தில் போடுவது! இவை எவ்வளவு ரசாபாசமாக இருக்கிறதென இதைப் படிக்கும் எனது நண்பர்களே கவனிப்பார்களாக. மாலை மரியாதை யாராவது ஆக்டர்களுக்குச் செய்யவேண்டுமென்று விரும்பினால், நாடகக் கடைசியில் செய்வதே தகுதியாம்; அல்லது அதுவரையிற் காத்திருக்க முடியாத சந்தர்ப்பமாயிருந்தால், ஒரு காட்சிக்கும் மற்றொரு காட்சிக்கும் இடையில் ஆக்டர்களை டிராப் படுதாவுக்கு முன்பாக வரவழைத்து, அந்த மரியாதையைச் செய்யலாம் .இதை யொட்டியே காரைக்குடியில் நாடகங்கள் ஆடினபொழுது, கடைசி நாடகம் ஆனவுடன், எங்கள் சபையிலுள்ள எல்லா ஆக்டர்களையும் ரங்கத்தில் நிற்கச் செய்து, அவர்கள் மனம் கோணுதபடி எல்லோர்க்கும் மாலை மரியாதை செய்ய ஒப்புக்கொண்டேன்.

இங்கு எங்கள் சபை நாடகங்கள் நடத்திய பொழுது எனக்கு விந்தையாகத் தோன்றிய இன்னொரு விஷயத்தை எடுத்தெழுதுகிறேன். இவ்வூரில் இந்த நாடகசாலை வழக்கமென்னவென்றால், ரிசர்வ் வகுப்புக்கு, ரிசர்வ் செய்யும் பெரிய மனிதர்கள் தங்கள் தங்கள் நாற்காலிகளை அனுப்ப வேண்டியதாம்; அதன்படியே எல்லோரும் சாய்வான போல்டிங் நாற்காலிகளை அனுப்பி யிருந்தனர் போலும். முதல் நாடகமாகிய, 'லீலாவதி-சுலோசனுவில்' நான் மூன்றாவது காட்சியில் முதன் முறை மேடையில் தோன்றி, ரங்கத்தைக் கடந்து சென்றபோது ஹாலில் பார்க்க, ரிசர்வெட் வகுப்பிலிருந்தவர்களெல்லாம் ஏதோ படுத்துக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்ததுபோல் தோன்றியது! இதென்ன விஷயம் என்று பிறகு நான் விசாரித்த பொழுதுதான் மேற்சொன்ன உண்மை எனக்கு வெளியாயது. இந்தச் சாய்வு நாற்காலிகள் அதிக இடத்தை அடைத்துக் கொள்வதுமன்றி மேடையின் மீதிருந்து பார்ப்பவர்களுக்கு அவற்றிலுள்ளவர்கள் ஏதோ நாடகத்தைக் கவனியாது தூங்குவதுபோல் தோன்றுகிறபடியால், இவ்வழக்கத்தை விட்டு, நேராக உட்காரும் பெரிய நாற்காலிகளை இவ்விடத்திலுள்ள பெரிய

மனிதர்கள் உபயோகிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். இங்கு வந்த பெரிய மனிதர்கள் எங்கள் சபையின் நாடகங்களை மிகவும் நன்றாய்க் கவனித்து வந்தவர்கள் என்பதற்கு கொஞ்சமேனும் சந்தேகமில்லை. அதற் கிரண்டொரு உதாரணங்கள் இங்கு எழுதுகிறேன். 'லீலாவதி-சுலோசனா' நாடகத்தில், சுலோசனா வேடம் தரித்த ரங்கவடிவேலு, ஸ்ரீதத்தனைக் கைவளைசினில் க்ஷண நேரம் பார்த்த பார்வையை மெச்சி, ஹாலில் உட்கார்ந்திருந்த ஒரு பெரிய மனிதர் தன்னையு மறியாதபடி "சுட்டுவிட்டாளையா கண்ணால்!" என்று உரக்கக் கூவினார். இது சபையிலுள்ளவர்களுக்கும், எனக்கும், ஆநந்தத்தை விளைத்தது. இதை இங்கு நான் எடுத்து எழுதியதற்கு இன்னொரு காரண முண்டு. இக் காட்சியை நடத்தும் பொழுது அநேக நாடக சபைகளும், கம்பெனிகளும், ரசாபாசமாக்குகின்றனர். சுலோசனை ஸ்ரீதத்தனை ஒரு க்ஷண நேரம்தான் தன் கடைக் கண்ணாற் பார்க்கவேண்டியது. அதை விட்டு அதிக நேரம் பார்த்தால் தவறாகும். அந்தை விழிப்பதுபோல அறுபது விநாடி விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தால், அதைவிட ரசாபாசம் வேறு கிடையாது. இது ஒரு முக்கியமான கட்டம், சபையோர்களுக்கெல்லாம் இதனால் சந்தோஷத்தை உண்டு பண்ணலாம் என்றெண்ணி, அதிக நாழிகை பார்ப்பது, கற்புடைய ஸ்திரீயாகிய சுலோசனைக் கடுக்காது. அன்றியும் இந்தக் கட்டத்தில், ஸ்ரீதத்த வேஷதாரி செய்யும் ஒரு குற்றத்தினையும் எடுத் தெழுதுகிறேன். அந்த க்ஷணத்தில் சுலோசனையின் கண்களைத் தன் கண்கள் கொண்டு சந்தித்தவன் உடனே தன்பார்வையை மீட்டுக்கொண்டு தலை குனிந்தவனாய், சற்று அசைவற்று, பிறகு ஒரு முறை சுலோசனை போன பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு, பிறகு தன் நண்பனாகிய கமலாகர னிருக்குமிடம் நாடவேண்டும். நான் இன்னடகத்தை இதுவரையில் 50-முறைக்கு மேல் ஆடிய பொழுதெல்லாம் இம்மாதிரியாகத் தான் நடித்திருக்கிறேன். இதை விட்டு, பட்டிக் காட்டான் ஒருவன் மதுரை மீனாட்சி கோயில் கிழக்கு கோபுரத்தை, கண்கள் பிதுங்க வாயை திறந்துகொண்டு அரை நாழிகை பார்ப்பது போல், சுலோசனையைப் பார்த்துக் கொண்டிருப்பது பெரும் தவறாகும். இம்மாதிரிப் பல கம்பெனிகளில் ஸ்ரீதத்தனை நடித்த ஆக்டர்

கள் நடித்ததை நான் பார்த்து விசனப் பட்டிருக்கிறேன். ஒரு முறை ஒரு ஆக்டர் இப்படி ஏறெடுத்துப் பார்ப்பது போதாதென்று, சுலோசனை விரைந்து போனவுடன், அங்கிருந்த ஒரு நாற்காலியின்பேரில் ஏறி, அவள் போன திசையை உற்றுப் பார்ப்பதை நான் என் கண்ணாரக் கண்டிருக்கிறேன். ஸ்ரீ தத்தனை நான் சிருஷ்டித்த பொழுது அவனை இவ்வளவு மடையனுக்க முடியும் என்று கனவிலும் நினைத்தவனன்று. இனியாவது ஸ்ரீ தத்த வேஷதாரிகள் இம்மாதிரியாக ரசாபாசம் செய்யாதிருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

இவ்விடத்தில் நாங்கள் ஆடிய இரண்டாவது நாடகமாகிய 'மனோஹரன்' நாடகத்தில் நான் மனோஹரனுக நடித்தபொழுது நேர்ந்த ஒரு சங்கதியை எழுதுகிறேன். இந்நாடகத்தின் இரண்டாவது காட்சியில் மனோஹரன் வசந்தசேனை தன் தாயாரை வைததற்காகக் கோபித்து அவளை வெட்டப்போகும் தருவாயில், அவன் தந்தையாகிய புருஷோத்தமன் தடுக்க, அவன் கரததினின்றும் திமிறிக் கொள்ளும்பொழுது, "உமது பத்தினியின் மானத்தை நீர் காப்பாற்ருவிட்டால், என் தாயாரின் மானத்தை நான் காப்பாற்றுகிறேன்!" என்று கூறி அவ்வசந்தசேனையின் சென்னியைச் சேதிக்கப் போகிருன். அவ்வார்த்தைகளை நான் கூறி நடித்தபொழுது எல்லோரும் நிசப்தமாயிருக்க, ஒரு செட்டியார் மாத்திரம் 'பேஷ்' என்று உரத்த சப்தமாகக் கூறினர். நான் ரங்கத்தில் நடித்த பல தருணங்களில் ஆயிரக் கணக்கான நபர்கள் அதை மெச்சிக் கரகோஷம் செய்திருக்கின்றனர்; ஆயினும் அவர் அச்சமயம் கூறிய அவ்வொரு வார்த்தையானது, அவைகளெல்லாவற்றையும் விட எனக்கு அதிக உற்சாகத்தைத் தந்தது.

ஆயிரம் பெயர் சாதாரண ஜனங்கள் புகழ்வதைவிட, ரசிகன் ஒருவனுடைய புகழ்ச்சியே மேலாக மதிக்கப்படும் என்பதற்கு இதை ஒரு உதாரணமாக இங்கு என் அனுபவத்தில் எழுதினேன்.

இங்கு மனோஹரா நாடகத்தை நடத்தியதில் ஒரு விசேஷம் உண்டு. நாடகதினம் காலே, இந்நாடகத்தில் முக்கிய ஸ்திரீ பாக

மாகிய பத்மாவதி தேவி வேடம் தரிக்கவேண்டிய எம். தேசிகாசாரி யார் என்பவருக்கு 105 டிக்ரி ஜுரம் வந்து விட்டது. அவருக்குப் பித்தம் அதிகப்பட்டு, வாய்க்கு வந்தபடியெல்லாம் ஸ்மரணை தப்பிப் பேச ஆரம்பித்துவிட்டார்! இந்த ஸ்திதியிலிருக்கும் ஆக்டரை இர வில் பத்மாவதி வேடம் பூணச் செய்வது எப்படி என்று மனங் கலங்கினவனாய் யோசித்துக்கொண்டிருக்கும் தருணத்தில் சாயங் காலம் 4-மணிக்கு, பிறகு நடக்கவேண்டிய நாடகங்களில் ஆடுவ தற்காக, தற்காலம் என்னுடன் ஸ்திரீவேடம் பூண்டாடும் எனது பிரிய நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் அகஸ்மாத்தாய் வந்து சேர்ந்தார். வந்தவுடன் தேசிகாசாரியார் இருக்கும் நிலைமையை அவருக்குக் கூறி, எப்படியாவது ஆபத்தில் உதவவேண்டுமென்று சொல்லி, அவருக்குப் பத்மாவதியின் பாகத்தை ஒரு முறை படித் துக் காண்பித்தேன். அவரும் 'ஆகட்டும்' என்று இசைந்து அப் பொழுதிருந்த இரண்டொரு மணி சாவகாசத்திற்குள்ளாக அத் தனை பெரிய பாகத்தை சற்றேறக்குறைய குருட்டுப் பாடம் செய்து விட்டு, அன்றிரவு, பத்மாவதியாக மிகவும் நன்றாய் நடித்து எங்கள் சபையின் பெயரைக் காப்பாற்றினார். இவர் இங்ஙனம் கைகொடுத் திராவிட்டால், அன்று நாடகத்தை நிறுத்தியாவதிருக்கவேண்டும், அல்லது ஆபாசமாகவாவது முடிந்திருக்கும். இவரைப்பற்றிப் பிறகு நான் அதிகமாக எழுதவேண்டிவரும்.

இந்த மனோஹரா நாடகம் நடந்தபொழுது, தற்காலம் ராஜா என்கிற பட்டப் பெயரைப்பெற்று, தமிழ் பாஷையின் அபிவிர்த் திக்காகவே முக்கியமாக, "அண்ணாமலை யூனிவர்சிடி" என்கிற கல்விச் சங்கத்தைச் சிதம்பரத்தில் ஏற்படுத்தி, தமிழுக்கும் தமி ழர்க்கும் பல உதவிகள் செய்துவரும் வள்ளலாகிய சா. ம. ம. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் தன் ஊராகிய கானாடுகாத்தா னிலிருந்து வந்திருந்தார். அவர் இவ்வாறு எங்கள் சபையை உற் சாகப்படுத்தியது மன்றி, சபையோரையெல்லாம், ஒரு நாள் சாயங் காலம் தனது வீட்டிற்கு வரவழைத்துப் பெரும் விருந்து செய்து வைத்தார். செட்டிமார்கள் செய்யும் உபசாரமும் விருந்தும் இத் தன்மையது என்று அறிய விரும்பினால், அதை நேரில் அனுபவித் துத் தான் தெரிந்து கொள்ள வேண்டும்; அது செப்பத் தரமல்ல.

சாயங்காலச் சிற்றுண்டியாக எங்கள் ஒவ்வொருவர் இலையிலும் படைத்திருந்த பலஹாரத்தை ஒன்பது பெயர் சாப்பிட்டு மிகுதியாயிருக்கும்! இதைவிடப் பெரிய விருந்தை நானும் எனது சபை நண்பர்களும், திருவாங்கூர் போயிருந்த பொழுது மஹாராஜாவின் அரண்மனையில்தான் ஒரு முறை சாப்பிட்டிருக்கிறோம். (அதைப் பற்றிப் பிறகு நான் அவ்வூருக்குச் சபை போயிருந்த பொழுது நடந்த சங்கதிகளை எழுதுங்கால் தெரிவிக்கிறேன்.)

எனது வள்ளி நாடகமானது இங்காடப்பட்ட பொழுது, அது நாட்டுக்கோட்டை செட்டிமார்களுள் பலருடைய குல தெய்வத்தின் கதையாகையால், அவர்களால் மிகவும் ஆதரிக்கப் பட்டது. ஆயினும் அந்நாடகம் கொஞ்சம் சிறிதாயிருந்தது. சீக்கிரம் முடிந்துவிட்டது என்று சிலர் கூறினர். இதன் பொருட்டு, மறு நாடகதினம் மார்க்கண்டேயர் நாடக மாடிய பொழுது ஊர்வசியின் சாபத்தினின்றும் இரண்டு மூன்று முக்கிய காட்சிகளையும் ஆடவேண்டி வந்தது.

இவ்வூரில் நாங்கள் நடத்திய கடைசி ஆட்டத்தின் முடிவில் இவ்வூரார் எங்கள் சபை மெச்சப்பட்டு ஒரு வந்தனோபசாரப் பத்திரம் அளிக்கப்பட்டது. இவ்வூரை விட்டு நாங்கள் நாகப்பட்டணம் போவதற்குள் கொத்தமங்கலம் கா. மா. அ. ரா. லா. பெத்தாச்சி செட்டியார்; தேனிப்பட்டி சொக்கலிங்க செட்டியார், மா. ரா. மா. ராமசாமி செட்டியார் முதலியோர் எங்களுக்கு விருந்துகள் அளித்தனர்; அவர்களனைவரும் எங்கள் சபைக்காகச் செய்த உதவியின் பொருட்டும், மரியாதையின் பொருட்டும், எங்கள் சபையும் நானும் மிகவும் நன்றி யறிதலுடையவர்களா யிருக்கிறோம் என்பதை இதனால் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

காரைக்குடியை விட்டுப் பிரிய மனமில்லாமல் பிரிந்து வண்டி மூலமாக, அறந்தாங்கிபோய்ச் சேர்ந்து அங்கிருந்து மறுநாள் நாகப்பட்டணம் போய்ச் சேர்ந்தோம்.

இவ்விடத்தில் சர் அகமத் தம்பி மரக்காயர் மூத்தகுமாரனை ஏ. கே. எம். மொஹிய்தீன் மரக்காயர் எங்கள் சபைக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்து வைத்திருந்தார்.

இவ்வூரில் நாங்கள் நாடகங்களாடிய நாடகசாலை கொஞ்சம் சிறியது; ஆயினும் மற்ற விஷயங்களிலெல்லாம் சவுகரியமாகத் தானிருந்தது. இங்கு நாங்கள் நடத்திய நான்கு நாடகங்களில் முதல் நாடகமாகிய மனோஹராவில் ஒரு பெரும் விபத்து நேரிட விருந்தது. இருப்புச் சங்கிலிக் காட்சியில், நான் அவைகளை அறுத்துக்கொண்டு, புருஷோத்தம ராஜனை வெட்ட வாளை வீசிய பொழுது, வாளின் பிடி மாத்திரம் என் கையில் நிற்க, கத்தி பாகமானது பிடுங்கிக்கொண்டு, சபையோர் மத்தியில் போய் வேகமாய் விழுந்தது. அன்றைத்தினம் போலீஸ் உத்தியோகஸ்தராயிருந்த ஒரு வெள்ளைக்காரருடைய மனைவி, தமிழ் நன்றாய்ப் பேச உணர்ந்த மாது, இந்த நாடகத்தைப் பார்க்க வந்து ஹாலில் உட்கார்ந்திருந்தார்கள்; அவர்கள் மடியில் போய் விழுந்தது! உடனே சபையில் பெரும் ஆரவாரம் உண்டாயிற்று. நான் அதைக் கவனிப்பதா, நான் நடிக்கவேண்டியதைக் கவனிப்பதா? "ஆகிறது ஆகிறது, ஸ்வாமி இருக்கிறார், பார்த்துக்கொள்வோம்" என்று எண்ணி, நான் நடிக்க வேண்டிய பாகத்தின்மீது கவனமுடையவனாய், அருகிலிருந்த ஒரு ஆக்டரின் மரக்கத்தியைப் பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்டு, அக்காட்சியில் நான் நடிக்க வேண்டிய என் பாகத்தை முடித்தேன். காட்சி முடிந்த பிறகு, டிராப் படுதா விட்டவுடன், வெளியில் வந்து மேடையின்மீதிலிருந்து, அந்த அம்மாளை விசாரித்து, தெய்வாதீனமாய் காயமொன்றும் படவில்லை என்று கண்ட பிறகே என் அச்சம் நீங்கியது! வேகமாய் விழுந்த கத்தி தெய்வ கடாட்சத்தினால் பக்கவாட்டில் விழுந்தது; செங்குத்தாக விழுந்திருக்குமாயின், அவர்களை நன்றாய்க் காயப்படுத்தியிருக்குமென்பதற்குக் கொஞ்சமேனும் சந்தேகமில்லை. இது நடந்த பிறகு இந்நாடகத்தில் நான் நடிக்கும்போதெல்லாம், ஆரம்பத்திலேயே கத்தியானது பிடியைவிட்டு வராமலிருக்கிறதா என்று இழுத்துப் பார்த்துக்கொள்ளுகிறது வழக்கம்.

இவ்விடத்திலும் மார்க்கண்டேயர் நாடகம் ஆடியபொழுது, அந்நாடகம் கொஞ்சம் சிறிதாயிருந்தபடியால், ஊர்வசியின் சாபத்திலிருந்து இரண்டொரு முக்கியமான காட்சிகளைச் சேர்த்து என துயிர் நண்பர் ரங்கவடிவேலுவும் நானும் ஆடினோம். கடைசி நாட

கமாகிய வள்ளி மணமும் சீக்கிரம் முடிந்து விட்டால் வந்திருக்கும் ஜனங்களுக்கு அதிருப்தியாயிருக்குமென்றெண்ணி, நான் எழுதிய "பேயல்ல பெண்மணியே" என்னும் நாடகத்தின் இடைக்காட்சிகளைச் சேர்த்து ஆடினேம். இது ஜனங்களுக்கு ரமிக்கவில்லை. "என்னடா இது தெருக்கூத்துபோல ஆடுகிறார்களே" என்று எண்ணினர். அதற்காக நாடகத்தின் கடைசியில், தெருக்கூத்துகளிலுள்ள ஆபாசங்களை எடுத்துக்காட்டவே அக்காட்சிகள் ஆடப்பட்டன என்று சபையோர்க்கு தெரிவிக்க வேண்டி வந்தது.

இவ்வூரில் எங்கள் நாடகங்கள் நன்றாய் ஆதரிக்கப்பட்டன. ஜனங்களும் அதிகமாய் வந்திருந்தனர். ஆகவே, இவ்வூரைவிட்டுப் பட்டணம் திரும்பியபொழுது சந்தோஷமாகத்தான் திரும்பினேம். நான் இவ்வூருக்குப் பிறகு இரண்டொரு முறை போயிருந்தபோது, விசாரித்ததில் நாங்கள் ஆடிய நாடகக் கொட்டகையில் ஏதோ "சினிமா" வந்து சேர்ந்ததாகக் கேள்விப்பட்டேன். வெளியூர்களில் நான் ஆடிய நாடகக் கொட்டகைகளை, மறுபடி சாதாரண காலத்தில் போய்ப் பார்ப்பதில் எனக்கு ஒரு திருப்தி; அந்த திருப்தியை இங்கு அடைவதற்கில்லாமற் போயிற்று.

இவ்வருஷம் எங்கள் சபையின் தெலுங்குப் பிரிவினர் தெலுங்கில் "ராமதாஸ்" என்னும் நாடகத்தை நடத்தினர். இந்நாடகம் எங்கள் சபைக் காரியதரிசிகளில் ஒருவராய் அச்சமயம் இருந்த எனது நண்பர் டி. வெங்கடரமணையா என்பவரால் எழுதப்பட்டது. இந்நாடகம் தெலுங்குப் பிரிவினர் எங்கள் சபையில் நடத்திய நல்ல நாடகங்களில் ஒன்றும். இந்நாடகத்தில் ஓர் காட்சியில் சீதா பிராட்டியாகவும் ஸ்ரீராமராகவும் வரும்படி, எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவையும் என்னையும் கேட்டுக்கொண்டார். அதற்கிசைந்து அவ்வாறே நடித்தோம். நாங்களிருவரும் வரும் காட்சி நாடகத்தின் கடைசியில் வருகிறது. 5½-மணிக்கு நாடகம் ஆரம்பித்தால், 8½-மணிக்கு எங்கள் காட்சி வரும். நாங்கள் ஆக்டு செய்யும் காட்சி முழுதும் 5-நிமிஷம் கூட இருக்காது. இதில் எனது நண்பருக்கு பத்து பதினைந்து வரிகளும் இரண்டு பாட்டுகளும் உண்டு. எனக்கு பத்து பதினைந்து வரிகள் இருக்கும். இதற்காக மத்தியானம்

1 மணிக்கு வேஷம் போட்டுக்கொள்ள ஆரம்பித்து, நான்கு மணி சாவகாசம் மற்றவர்களுக்குக் கஷ்டம் கொடுத்து, பிறகு வேஷம் போட்டுக் கொண்டானவுடன் மூன்று மணி நேரம் அக்காட்சி வரும் வரையில் காத்துக்கொண்டிருக்க வேண்டியது! நடிப்பது 5 நிமிஷமானபோதிலும் வேஷம் போட்டுக்கொள்ளும் கஷ்டத்திற்குக் குறைவில்லை! வள்ளிமணத்தில், நான் சுப்பிரமணியர் வேடம் பூண்ட கஷ்டத்தை முன்பே வரைந்திருக்கிறேன். அதைப்போலவே சற்றேறக்குறைய இதில் ஸ்ரீராமர் வேடம் பூணுவதும் மிகவும் கஷ்டமேயாம். போதாக் குறைக்கு முகத்திலும் கைகால்களிலும் நீலவர்ணம் பூசிக்கொள்ள வேண்டியிருக்கிறது. நீலமேகஸ்யாமளராம் ராமனாகத் தோற்றவேண்டி, "அரை நாள் கூத்தாடுவதற்காக ஆறு மாசத்திய மீசையை அடித்துக்கொண்டானும்" என்று பழமொழியுண்டு, அதுபோல, "நான்கு வரிகள் பேசுவதற்காக நான்கு மணி நேரம் வேடம் போட்டுக்கொண்டானாம்!" என்று சொல்லலாம். இந்த வேஷம் போட்டுக்கொள்வது ஒரு கஷ்டமிருக்க, அதை நாடகமானவுடன் அழிப்பது மற்றொரு பெருங் கஷ்டமாம்! அதிலும் நீலவர்ணத்தைப் போக்க, எண்ணெய் தேய்த்துக் குளிப்பதுபோல், உடம்பெல்லாம் எண்ணெயிட்டு நன்றாய்த் தேய்த்தும் பிறகு சோப் போட்டு கழுவினால் தான் அவ்வர்ணம் போகும்!

இந்த ராமதாஸ் நாடகத்தை எனதுயிர் நண்பர் அந்தியகாலம் வரையில், எப்பொழுது எங்கள் சபை போட்டபோதிலும், மேற்சொன்னபடி அவரும் நானும், சீதையும் ராமருமாக அதில் நடித்து வந்தோம். அவருக்குப் பிற்காலம் இரண்டொரு முறை இந்நாடகம் ஆடியபொழுது கே. நாகரத்தினம் ஐயர் என்னுடன் சீதையாக வந்திருக்கின்றனர்.

மேற்சொன்ன ராமதாஸ் நாடகமன்றி இவ்வருஷத்தில் எங்கள் சபை தெலுங்குப் பிரிவு ஆடிய, காலஞ்சென்ற கிருஷ்ணமாசார்லு எழுதிய 'பிரமேளா' என்னும் நாடகத்திலும், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவும் நானும் வேஷம் பூண்டு நடித்திருக்கிறோம். இவ்வாறு இரண்டு மூன்று தெலுங்கு நாடகங்களில் நாங்களிருவரும் ஒன்றாய்ச் சேர்ந்து நடிக்கவே, 'அடடா! தெலுங்

இல்கூட இவர்களிருவரும் ஒன்றாய்ச் சேர்ந்து நடிக்கிறார்கள்' என்று எங்களுடைய நண்பர்கள் ஏளனம் செய்தனர். இவ்வாறு தெலுங்கில் நாங்களிருவரும் நடிப்பது வேடிக்கையா யிருந்த போதிலும், இதில் ஒரு குறை யுண்டென எண்ணுகிறேன். நாங்களிருவரும் தமிழர்கள். இரண்டு பெயரும் எவ்வளவுதான் தெலுங்கு படிக்கத் தெரிந்தவர்களா யிருந்த போதிலும், இருவரும் சம்ஸ்கிருதம் கற்றவர்களானபடியால், தெலுங்கு அட்சரங்களை உச்சரிப்பதில் கஷ்ட முடையவர்களா யில்லா திருந்த போதிலும், தெலுங்கில் பேசும்போது ஏதாவது குற்றங்கள் வந்து விடும். ஆகவே, இதைப் பற்றி என் அபிப்பிராயம் என்னவென்றால், கூடுமான வரையில் அந்தந்த பாஷையைத் தாய் பாஷையாக உடையவர்களே அந்தந்த பாஷையில் நடிக்க வேண்டு மென்பதே. அப்படி ஏதாவது நடிக்க வேண்டி வந்தால் சிறு பாகங்களை எடுத்துக் கொள்ளலாமே யொழிய, பெரிய பாத்திரங்கள் எடுத்துக் கொண்டு நடிப்பது தவறேயாகும். எனது நண்பர்களில் ஒருவர் ஏறக்குறைய தெலுங்கில் நன்றாய்ப் பேசக்கூடியவர். ஒரு தெலுங்கு நாடகத்தில் ஒரு பெரிய பாகத்தை எடுத்துக்கொண்டு நடித்த பொழுது ஏதோ ஒன்றிரண்டு எழுத்துக்களைச் சரியாக உச்சரிக்க வில்லையென்று ஹாலில் வந்திருந்த சில ஆந்திராபிமானிகள் அவரை ஏளனம் செய்ததை என் காதாரக் கேட்டிருக்கிறேன். அப்படி ஏளனம் செய்தவர்கள்மீது நான் குறை கூற மாட்டேன். தமிழ் நாடக மொன்றில், ஒரு தெலுங்கன் அவன் எவ்வளவுதான் கெட்டிக்காரனை ஆக்டரா யிருந்த போதிலும், தமிழில் ஒரு பாத்திரத்தை எடுத்துக்கொண்டு தமிழ் பதங்கள் உச்சரிப்பதில் ஏதாவது பிசகு செய்வானாயின், எனக்கு வெறுப்புண்டாகு மன்றோ? நம்முடைய அனுபவத்தைப் போல், மற்றவர்களுக்கும் இருக்குமென்பது நாம் கவனிக்கற்பாலது.

இவ்வருடம் நவம்பர் மாதம் 19-ஆம் தேதி மலையாளத்தில் பெருமழையினால் உண்டான தேசத்தின் கஷ்டத்தை நிவர்த்திக்கும் பொருட்டு ஏற்படுத்திய பண்டின் பொருட்டு, "லீலாவதி-சுலோசனா" என்னும் நாடகத்தை நடத்தினோம். இந் நாடகத்தை மாட்சிமை தங்கிய கவர்னர் லார்ட் வில்லிங்டன் அவர்களும் அவரது மனைவியும் தமது ஆதரவை அளித்தனர். இந் நாடகத்திற்கு

ரூபாய் 949 வந்தது. அதில் செலவு போக மிகுதி ரூபாய் 640-12-0 அந்த பண்டுக்கு அனுப்பினோம். விக்டோரியா ஹாலில் நாங்கள் ஆடிய நாடகங்களுள் இதுதான் எங்கள் சபைக்கு அதிக தொகையைக் கொணர்ந்தது.

எல்லா விஷயங்களையும் யோசிக்குமிடத்து இந்த 1921-ம் வருஷம்தான் எங்கள் சபை மிகவும் உன்னத பதவி யடைந்திருந் தது என்று கூறவேண்டும்.



# 24-ஆவது அத்யாயம்



இனி 1922-ம் ஆண்டின் நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபையில் நூதனமாய் நடத்திய நாடகங் களில் குறிப்பிடத் தக்கன இரண்டாம்; முதலாவது எனது நண்பர் ச. ராகவாசாரியார், தமிழில் மொழி பெயர்த்த "வேணி சம்ஹாரம்" என்பது. இதில் எனது ஆருயிர் நண்பர் ரங்கவடிவேலு, பானு மதியாய் வேஷம் பூண, நான் துர்யோதனனாக நடித்தேன். நான் சமஸ்கிருதத்தில் அநேக நாடகங்களைப் படித்திருக்கிறேன்; அவற் றுளெல்லாம் எனக்கு மிகவும் அதிருப்தியைத் தந்தது இந்த வேணி சம்ஹார நாடகமே. இது காரணம் பற்றியே என்னைப் பலர் இதை மொழி பெயர்க்கும்படியாகக் கேட்டும், நான் அவ்வாறு செய்யாது விட்டேன். இந்நாடகத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு, பிறகு ஒரு முறையோ இரண்டு முறையோதான் எங்கள் சபையில் ஆடப்பட் டது.

மற்றொரு நாடகம், "பிரதாப ருத்ரீயம்" என்னும் தெலுங்கு நாடகம். இதில் எனது ஆருயிர் நண்பர் ரங்கவடிவேலு நடனமா டும் மாதாக ஆடினார். நான் இந்நாடகத்தில் ஒரு மகம்மதிய சிப் பாயாகவும் பிறகு, டில்லி சுல்தான் மந்திரிகளில் ஒருவனாகவும் நடித் தேன். இந்தப் பிரதாபருத்ரீயம் என்னும் நாடகம் பிறகு பன்

முறை எங்கள் சபையோரால் நடிக்கப்பட்டது; அப்படி நடிக்கப் படும் போதெல்லாம், நான் மேற் சொன்ன இரண்டு வேடங்களையும் தரித்திருக்கிறேன். முக்கியமான வேஷங்களைத் தரிப்பதில் எனக்கு ஒருவிதமான சந்தோஷமிருக்க, இப்படிப்பட்ட சில்லரை வேடங் கள் தரிப்பதிலும் மற்றொருவிதமான சந்தோஷமுண்டு. இந்நாட கத்தில், சு. ராகவாசாரியார், மந்திரி யௌகந்தரராக நடித்தது மிக வும் மெச்சத் தக்கதென்று முன்பே குறித்திருக்கிறேன். ஆயினும் இவரைவிடச் சபையோரின் மனதையெல்லாம் கவர்ந்தவர் இதில் வண்ணுனை நடித்த பி. வி. ராமானுஜம் செட்டியாரே. இந்த வண்ணுன் வேடம் நடிப்பதற்கு மிகவும் கஷ்டமான வேஷ மாம். இந்த வேஷத்தில் செட்டியார் தத்ரூபமாய் நடித்து ஆந்திர தேசத்தாரும் புகழும்படிப் பெயர் பெற்றிருக்கிறுர். செட்டியார் அவர்கள், தெலுங்கு நாடகங்களில் ஹாஸ்ய பாகங்களை ஆடுவதில், தமிழில் எப்படி எம். துரைசாமி ஐயங்கார் பெயர் பெற்றிருந்த னரோ, அப்படியே பெயர் பெற்றிருக்கிறுர்.

இவ்வருஷம் கோடைகால விடுமுறையில் எங்கள் சபை திரு நெல்வேலி திருவனந்தபுரம் என்னும் இரண்டு ஊர்களுக்குப் போய் நாடகங்கள் ஆடித் திரும்பி வந்தது. சென்னையைவிட்டு மே மாதம் 29-ம் தேதி புறப்பட்டு, திருநெல்வேலியில் ஆறு நாடகங்களை நடத்தி, பிறகு திருவநந்தபுரம் போய் அங்கு 10-நாடகங்கள் ஆடிப் பிறகு ஜூன் மாதம் 8-ம் தேதி திரும்பி வந்தோம். இதுதான் என தாருயிர் நண்பர் கடைசி முறை வெளியூர் என்னுடன் போய் வந்த பிரயாணமாகையால், இதைப்பற்றிச் சற்று விவரமாக எழுத விரும் புகிறேன்.

திருவனந்தபுரத்திற்குப் போகவேண்டுமென்று யார் முதலில் பிரேரேபணை செய்தார்களோ எனக்கு ஞாபகமில்லை. நான் செய்ய வில்லை யென்பது நிச்சயம்; ஏனெனில், இந்த வார்த்தை முதலில் எங்கள் நிர்வாக சபையார் முன்னிலையில் வந்தபோது அவ்வளவு தூரம் செலவு செய்துகொண்டு போய் வருவதென்றால் சபைக்குக் கட்டிவருமா என்று நான் சந்தேகப்பட்டது எனக்கு நன்றாய் ஞாபக மிருக்கிறது. அன்றியும் என்ன காரணத்தினலோ, இது வரையில்,

வெளியூருக்குச் சபை போவதென்றால் மிகவும் குதூகலத்துடன் ஆமோதித்த எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு, தனக்கு அங்கு போவது இஷ்டமில்லை யென்று எனக்குத் தெரிவித்தார். அவரது அபிப்பிராயம் இப்படி யிருந்தபோதிலும், நிர்வாக சபையில் ஒரு முறை அங்கு போவது தீர்மானிக்கப்பட்ட பிறகு நாம் சபையுடன் போய்த்தான் தீரவேண்டு மென்று நான் அவரை வற்புறுத்தினேன். அதன் பேரில் என் வார்த்தைக் கிணங்கி ஒப்புக்கொண்டார். திருவநந்தபுரம் போகும்போது வழியில் திருநெல்வேலியிலும் சில நாடகங்கள் ஆடவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. இச்சமயம் எனது நண்பர் ச. ராகவாசாரியார் தமிழ் கண்டக்டராயிருந்தார். அவர் தான் இவ்விரண்டு இடங்களுக்கும் வருவது அசாத்தியம், ஒரு கால் தான் சில நாடகங்களுக்கு மாத்திரம் வந்து ஆக்டு செய்ய முடியும், வேறு யாரையாவது இந்தப் பிரயாணத்திற்குக் கண்டக்டர் இன்சார்ஜாக ஏற்படுத்திக் கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டார். அதன்பேரில் சில ஆக்டர்கள் ரகசியமாய் எனது நண்பர் சத்தியமூர்த்தி ஐயரைக் கண்டக்டராக நியமிக்க வேண்டு மென்று பேசிக் கொண்டார்களாம். இதனை எப்படியோ அறிந்த எனதுயிர் நண்பர் என்னிடம் வந்து, "இப்படி இவர்களெல்லாம் தீர்மானித்திருக்கிறார்களாம், அவர்கள் போய்வரட்டும்; நாம் போகாது நின்று விடலாம்" என்று சொன்னார். அதன் பேரில் அவருக்கு நான் சமாதானம் சொல்லி, "அவர்கள் அப்படிச் செய்தபோதிலும், நாம் நம்முடைய கடமையைச் செய்ய வேண்டும். இந்தப் பிரயாணத்தில் வெளியூர்களில் ஏறக் குறைய ஒரு மாதத்தில் 15 நாடகங்களை ஆடுவதென்றால் மிகவும் சிரமமான காரியம்; எனக்கோ வயதாகிறது; இனி இக்கஷ்டம் என்னால் சுமக்க முடியாதென்று நானே வேண்டாம் என்று சொல்லலாமென் றிருந்தேன். மற்றவர்களுக்கும் வேறு கண்டக்டரை நியமித்துக்கொள்ள அபிப்பிராயம் இருந்தால் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. "வியாதிக்காரன் விரும்பிய ஔஷதமும் பாலே, வயித்தியன் கொடுத்த ஔஷதமும் பாலே" என்கிற பழமொழிப்படி, நான் விரும்பியதும் அவர்கள் விரும்பியதும் ஒன்றே யாயது. மிகவும் நலமாயிற்று. எனக்கென்னவோ இப்பிரயாணம் சபைக்கு நஷ்டத்தையும் கஷ்டத்தையும்

கொண்டுவருமென்று மனதிற்படுகிறது. ஆகவே, இதனால் வரும் "நற் பெயரோ கெட்ட பெயரோ அவர்கள் பொறுப்பாக இருக்கட்டும். வெளியூர்களுக்குப் போய் நாடகங்கள் ஆடி, கீர்த்தியும் லாபமும் பெற்றுவருவதின் கஷ்டம் மற்றவர்களுக்கும் தெரிந்தால் தானே நல்லது," என்று நியாயங்கள் எடுத்துக்கூறி, அவர் மனத்தைத் திருப்பினேன். கடைசியில் உங்களுக்காக நான் ஒப்புக் கொள்ளுகிறேன், இதனால் பல கஷ்டங்கள் வருமென்று எனக்குத் தோன்றுகிறது என்று சொன்னார். அவர் வாக்கு எவ்வளவு தூரம் பலித்தது என்பதை இனி நான் எழுதப் போகிறதைப் படிப்பவர்கள் அறிவார்கள்.

சென்னையிலிருந்து சபை புறப்படுவதற்கு இரண்டு நாள் முன்பாக திடீரென்று என்கழுத்தும் முகமும் வீங்கி ஜுரமுண்டாயிற்று. இதென்ன விபரீதம் என்று எண்ணி, உடனே என் குடும்ப வைத்தியரை வரவழைத்து எப்படியாவது என்னை சுவஸ்தப்படுத்தி இரண்டு தினங்களுக்குள், திருநெல்வேலி போகும்படிச் செய்ய வேண்டும் என்று வேண்டினேன். அவர் சந்தேகப்பட்டு, மேஜர் எல்லிஸ் துரையை வரவழைத்து அவருடன் கலந்து பேசிப் பிறகு தான் எனக்குப் பதில் உரைக்க கூடுமென்றார். அவர் என் வியாதி, தீராத மிகவும் அபாயகரமான வியாதியாகிய பிளட் பாய்சனிங் (blood poisoning) ஆக இருக்கலாமோ என்று சந்தேகப்பட்டதாகப் பிறகு தான் என்னிடம் தெரிவித்தார். என்ன செலவானாலும் பெரிதல்ல; அந்தப் பெரிய ஆங்கில வயித்தியரை வரவழையுங்கள் என்று சொன்னேன். அதன்பேரில் மேஜர் எல்லிஸ் வந்து பார்த்து, இது அப்படிப்பட்ட அபாயகரமான வியாதியல்ல, மம்ப்ஸ் (Mumps) என்னும் வியாதி; இது நாலாநாள் சொஸ்தமாகும், சற்றும் பயப்பட வேண்டாம்; இதுகொஞ்சம் தொத்து வியாதியானபடியால், நாலாவது தினம்தான் பட்டணம் விட்டுப் போகலாம், என்று சொல்லி விட்டுப் போனார். அப்போது எனக்கு 104 டிக்ரிஜுரம் இருந்தது. உடனே என் தேகஸ்திதியை எழுதி டாக்டர்கள் இப்படிச் சொல்கிறார்கள் என்கிற விவரத்தைச் சபைக்குத் தெரிவித்தேன். உடனே சில அங்கத்தினர் அன்றிரவு என்னை வந்து பார்த்தார்கள். அவர்களில் சிலர்நான் ஏதோ சாக்குச் சொல்லுகிறேன் என்று சந்தேகித்த

னர்போலும். பிறகு உண்மையில் நான்மிகவும் அசௌக்கியமாயிருப் பதைக் கண்டறிந்தவர்களாய் என்ன செய்வது என்று என்னைக் கேட்டதற்கு, 'என்னால் சபைக்குத் தடங்கல் ஒன்றும் வேண்டாம். உங்களுக்கு எது யுக்தமாயிருக்கிறதோ அப்படியே செய்யுங்கள்' என்று சொன்னேன். அதன் பேரில் சத்தியமூர்த்தி ஐயர், முதல் நாடகமாக வைத்துக்கொண்ட லீலாவதி-சுலோசனாவை மாற்றி, 'நீ வராத மார்க்கண்டேயர் நாடகம் வைத்துக்கொள்கிறோம்' என்றார். 'அப்படியே செய்யுங்கள்' என்று பகர்ந்தேன். மறுநாள் நானும் ரங்கவடிவேலுவும் தவிர மற்றவர்களெல்லாம் புறப்பட்டுப் போயினர். அச்சமயம் ரங்கவடிவேலு திருக்கழுக்குன்றம் போயிருந்தார் ஏதோ காரணத்தினால். அங்கிருந்து செங்கல்பட்டுக்கு வந்து ரெயிலில் சபையோருடன் கலந்துகொண்டு திருநெல்வேலிக்குப் போகும்படியாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவர் எங்கு வருத்தப்படப் போகிறாரோ என்று என் தேகஸ்திதியைப்பற்றி நான் அவருக்கு எழுதவில்லை. ஆகவே, நானும் திருநெல்வேலிக்குப் புறப்பட்டுப் போக, செங்கல்பட்டில் வந்து சபையோர் இருந்த ரிசர்வெட் கம்பார்ட்மெண்டில் ஏறினபிறகு தான், அவருக்கு என் தேகஸ்திதியும் நான் அந்த வண்டியில் இல்லாததும் தெரிந்தது. "இதைக்கேட்டவுடன், நான் இடி விழுந்தவன்போல் ஆனேன்! இன்னது செய்வது என்று தெரியாது திகைத்து நின்றேன்" என்று பிறகு அவர் எனக்குக் கூறிய வார்த்தைகளை இங்கு எழுதுகிறேன். பிறகு, ஏற்றிய தன் சாமான்களையெல்லாம் இறக்கி, மற்றவர்களை யெல்லாம் வழியனுப்பி விட்டு, தான் உடனே சென்னைக்கு வந்து அன்றிரவு என்னைக் கண்டார். கண்டதும் என் தேக ஸ்திதியைப் பார்த்துத் துக்கித்தார். "இதற்குத் தமிழில் புட்டாளம்மை என்று சொல்லுவார்கள். இரண்டு மூன்று நாட்களுக்குள் இது இறங்கிவிடும், பிறகு நாம் திருநெல்வேலி போய்ச்சேரலாம்" என்று அவருக்குத் தைரியம் சொன்னேன். அப்படியே மூன்றும் நாள் அம்மை இறங்கவே வயித்தியர் அனுமதி பெற்று, ஒரு பெட்டி நிரம்ப நான் சாப்பிட வேண்டிய மருந்து முதலியவைகளுடனும் ரங்கவடிவேலுவுடனும் புறப்பட்டுப்போனேன் திருநெல்வேலிக்கு. மூன்று நாட்களாக மெல்

லின்ஸ்பூட் தவிர வேறு ஆகாரமில்லாமையால், மிகுந்த பல ஹீனமான ஸ்திதியிலிருந்தேன். ரெயிலிலும் இந்த ஆகாரம்தான். ஸ்டேஷனிலிருந்து புறப்படும்பொழுது என்னைக் கண்ட சில சிநே கிதர்கள், "என்ன சம்பந்தம், இந்த ஸ்திதியிலா, நீ திருநெல் வேலிக்குப் போய் நாடகம் ஆடப்போகிருய்!" என்று கேட்டார் கள். "ஸ்வாமியிருக்கிருர் என்னைக் காப்பாற்ற!" என்று நான் அவர்களுக்குத் தைரியம் சொல்லவேண்டியதாயிற்று. இப்பொ ழுதாவது ரெயில் கொஞ்சம் சீக்கிரமாகப் போகிறது. அப்பொ ழுது சென்னையிலிருந்து திருநெல்வேலிக்குப்போகச் சரியாக 24-மணி நேரம் பிடித்தது. என்னுடைய சுய நன்மையை மாத்தி ரம் நான் கவனித்திருப்பேனுயின், நான் அப் பிரயாணம் செய்தே இருக்கமாட்டேன். ஆயினும், எங்கள் சபைக்கு என்னுல் ஒரு கஷ்டமும் நேரிடக்கூடாதென்றும், எல்லா ஏற்பாடுகளும் செய்த பிறகு நான் நின்று விட்டால், ரங்கவடிவேலு தானும் போவதற் கில்லையேயென்று வருத்தப்படுவாரென்றும் கருதினவனுகி, என் தேகசிரமத்தைப் பாராமல் நான் பிரயாணம் செய்தேன். மறுநாள் சாயங்காலம் திருநெல்வேலி ஸ்டேஷனிற்போய் நான் இறங்கிய பொழுது, எனக்கு முன்பாக அங்கு போய்ச் சேர்ந்தவர்களுள், டி. வெங்கடரமணய்யாவும், டி. எல். ராஜகோபால ஐயரும் மாத்திரம் ஸ்டேஷனுக்கு வந்திருந்தனர். மற்றவர்களெல்லாம் சவுக்கியமாக இருக்கிருர்களா என்று நான் வினவியபொழுது, அவர்களுள் ஒரு வர், ஸ்டேஷனுக்கு வந்து என்னை வரவேற்க விரும்பிய மற்ற ஆக் டர்களை அப்படிச் செய்யவேண்டியதில்லை யென்று தடுத்ததாக இரகசியமாகத் தெரிவித்தார். இதைக் கேட்டவுடன் எனக்குக் கோபம் வரவில்லை. கொஞ்சம் துக்கம்தான் வந்தது—அதுவும் என் பொருட்டல்ல—"அந்தோ! இவ்வுலகில் யார் தப்புச் செய்தா லும் அதற்குத் தக்க பிராயச்சித்தம் அனுபவிக்க வேண்டி வருமே. இதை யறியாதிருக்கின்றனர் அநேகரே" என்றே எனக்குத் துயரம் தட்டியது. இம்மாதிரியான சந்தர்ப்பங்களிலெல்லாம், ஒரு மனி தனுடைய கடமையென்னவென்ருல், தன்மீது ஏதாவது தவறிருக் கிறதா என்று ஆய்ந்து பார்க்க வேண்டியது முதலில்; பிறகு தன் மீது தவறில்லை என்று கண்டறிந்தால், அத்தவறிழைத்தவர் மீது

கோபங்கொள்ளாது, அவர் பொருட்டுத் துக்கப்படுவதே நற்குண மெனும் உண்மையை என்னுடைய பால்யத்தில் அறியாது 50-வது வயதில் கண்டேன்! இவ்வாறு என் மனதைக் கோபத்தினின்றும் திருப்பி, நல்வழிக்குக்கொண்டுவந்தது எனக்கு மிகவும் நன்மை யளித்திருக்கிறது; அந்நன்மையை இதை வாசிக்கும் என் இளைய நண்பர்களும் பெறுவார்களாக என விரும்பியே இதை இங்கு எழுதலானேன். இச்சந்தர்ப்பத்தில் தெய்வப் புலமை வாய்ந்த பொய் யாமொழிப்புலவராகிய திருவள்ளுவர் எழுதிய குறள் எனக்கு நினைவிற்கு வருகிறது. "இன்னாசெய்தாரை யொறுத்தல், அவர் நாண நன்னயஞ் செய்து விடல்" என்பதின் உண்மையை என் சிறு வயதிலேயே யறியாமற் போனது என் குற்றமாம். இக்குற ளினடியில் பரிமேலழகர், "விடல்" என்கிற பதத்திற்கு மிகவும் அருமையாய் அர்த்தம் எழுதியிருக்கிறார். தமிழ் பாஷையில் விருப்பமுள்ள இதை வாசிக்கும் எனது நண்பர்கள் அவ்வுரையைப் பார்த்து அறிந்து கொள்வார்களாக.

ஸ்டேஷனிலிருந்து அருகாமையிலிருந்த எட்டயாபுரம் ஜமீன் தாருடையதான, எங்கள் விடுதிக்குப்போனவுடன், சந்தோஷமாகக் கலந்து பேசி, அவர்களையெல்லாம் சீக்கிரம் வேடம் பூணுவதற்காக நாடகசாலைக்குப் போகும்படித் தூண்டினேன். அப்பொழுது அவர்களுட் சிலர் ஏதோ ரகசியமாய்ப் பேசிக்கொண்டு, நீங்களிரு வரும் (நானும் ரங்கவடிவேலுவும்) நாடகசாலைக்கு இன்று கொஞ் சம் வந்து போகவேண்டும் என்று வற்புறுத்தினர். எனக்கு அசௌக்கியமான வுடம்புடன் பிரயாணம் செய்ததினால் மிகவும் இளைப்பாயிருக்கிறதெனச் சொல்லியும் அவர்கள் பலவந்திக்கவே இதில் ஏதோ சூட்சுமம் இருக்கிறதென, அவர்களுள் ஒருவரை ஒரு பக்கமாக அழைத்துக்கொண்டுபோய் என்ன சமாசாரம் என்று மெல்ல விசாரிக்க, அவர் கீழ்வருமாறு தெரிவித்தார்:— "இந்த ஊர் இரண்டு கட்சியாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது, பிராம் மணாள் கட்சியென்றும் பிராம்மணர் அல்லாதார் கட்சி யென்றும். இரண்டாவது கட்சியார், நீங்களெல்லாம் (என்னையும் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவையும் குறிப்பிட்டு) வருகிறீர்களென்று, கோயிலிலிருந்து யானை, வாத்தியம் முதலிய மரியாதைகளுடன்

உங்களையெல்லாம் ஸ்டேஷனிலிருந்து ஊர்வலமாக அழைத்துப் போகவேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார்கள். கடைசி நிமிஷத்தில் நீங்கள் இருவரும் வரவில்லையென்று கண்டறிந்து அந்த ஏற்பாடுகளையெல்லாம் ரத்து செய்து விட்டனர். இப்பொழுதும், அநேகர் நீங்கள் ஏதோ சபையின்மீது மனஸ்தாபப்பட்டு இவ்வூருக்கே வரவில்லை யென்று நினைத்துக் கொண்டிருக்கின்றனர். "அவர்கள் வராவிட்டால் நாங்கள் நாடகம் பார்ப்பதற்கு வரமாட்டோம்," என்று கட்டுப் பாடாயிருக்கிறார்களாம். ஆகவே, நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள் என்பது இந்நகர வாசிகளுக்குத் தெரிய வேண்டும். அதற்காகத்தான் உங்களை இன்றிரவு எப்படியாவது கஷ்டத்தைப் பாராமல் கொஞ்சநேரமாவது நாடகசாலைக்கு வந்து போகவேண்டும் என்று கட்டாயப் படுத்துகிறோம்" என்று தெரிவித்தார். இதென்ன தர்மசங்கடமாயிருக்கிறது! நானாவது சபையின்மீது மனஸ்தாபப்படுவதாவது! என்று எண்ணினவனாய், அப்படிபட்ட எண்ணத்தை நீக்கவேண்டியது என் கடமை என்று கருதி, என் தேக அசௌக்கியத்தையும் பாராமல், முற்றிலும் வாடாத முக வீக்கத்துடன், ஒரு சால்வையைப் போர்த்துக்கொண்டு நாடகசாலைக்குப் போய்ச் சேர்ந்தேன். என் நண்பருடன் காற்று அதிகமாய்ப் படாதபடி வேஷம் தரிக்கும் இடத்தில் நான் உட்கார்ந்திருக்க, "அது உதவாது, வெளியில் வந்து உட்காரவேண்டும்" என்று எனது நண்பர்கள் பலவந்திக்க நாடக ஆரம்பத்திற்குச் சில நிமிஷங்களுக்கு முன், நானும் ரங்கவடிவேலுவும், ஹாலில் வந்து உட்கார்ந்திருந்து, அங்கு நாங்கள் கண்ட எங்கள் பழய நண்பர்கள் சிலருடன் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுப் பிறகே எங்கள் ஜாகைக்குப் போனோம்.

நாங்கள் ஆடுவதற்கில்லாத படியால், எங்கள் சபை சாதாரணமாக வைத்துக்கொள்ளும் முதல் நாடமாகிய லீலாவதி-சுலோசனாவை மாற்றி, அன்று மார்க்கண்டேயர் நாடகம் வைத்துக்கொண்டார்கள். இந்த மார்க்கண்டேயர் நாடகத்திற்கு மிகவும் குறைந்த வரும்படி வந்தது. ஜனங்கள் உட்கார்ந்திருந்த நாற்காலிகளைவிட ஜனங்களில்லா நாற்காலிகள் அதிகமாயிருந்தன.

இதற்கு இரண்டாம் நாள் லீலாவதி-சுலோசனா நாடகத்தில் எனதுயிர் நண்பரும் நானும் ஆடினோம். இந்நாடகத்திற்கு, மார்க்கண்டேயர் நாடகத்திற்கு வந்ததைவிட மூன்று நான்கு பங்கு அதிகமாக ஜனங்கள் வந்தனர். இங்கு நடத்திய மற்ற நாடகங்கள் வள்ளி, சாரங்கதரன், நந்தனார், மனோஹரன். இந்நாடகங்களில், எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு ஆடிய நாடகங்களின் வரும்படியையும், அவர் ஆடாத நாடகங்களின் வரும்படியையும் ஒத்துப் பார்க்குமிடத்து அவர் ஒருவரால் எங்கள் சபைக்கு மிகவும் அதிக வரும்படி வந்தது என்று நான் ஒப்புக்கொள்ள வேண்டியவனாயிருக்கிறேன். இதனால் எங்கள் சபையின் சில ஆக்டர்களுக்கு அவர்மீது கொஞ்சம் பொறாமையுண்டாயிற்று என்று திருநெல்வேலியில் நேரிட்ட சில வியவஹாரங்களினால் ஊகிக்க வேண்டியவனா யிருக்கிறேன். அவைகளை இங்கு எழுதுவதானால், என்னுடைய சில நண்பர்களுக்கு வருத்தமுண்டாகுமேயொழிய இதைப் படிக்கும் எனது நண்பர்களுக்கு ஒரு பிரயோஜனமுண்டாகாதென நம்பி, அவைகளை இங்கு வரையாதொழித்தேன். இம்முறை திருநெல்வேலிக்குப் போயிருந்தபொழுது ஒருநாள் நாங்கள் எல்லோரும் திருச்செந்தூருக்குப் போய், சுப்பிரமணிய ஸ்வாமி தர்சனம் செய்து சந்தோஷமடைந்தது மிகவும் நன்றாய் என் மனதில் படிந்திருக்கிறது. அன்றியும் இவ்வூரிலிருந்தபொழுது எமது நண்பர்களாகிய கோமதி நாயகம் பிள்ளையவர்கள், கலியாண சுந்தரம் பிள்ளையவர்கள் பி. ஏ., பி. எல்., சாது கணபதி பந்துலு அவர்கள் பி. ஏ., பி. எல்., சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் பி. ஏ., பி. எல்., ஆகியவர்கள் எங்களுக்கு விருந்தளித்ததை நன்றியறிதலுடன் இங்கு எழுதுகிறேன்.

இச்சமயம் திருவாங்கூர் மஹாராஜாவுக்கு என் நண்பர் மகா-ள-ள-ஸ்ரீ திவான் பஹதூர் டி. ராகவையா என்பவர் மந்திரியாக இருந்தார். இவர் அநேக வருஷங்களாக எங்கள் சபையின் அங்கத்தினராக இருந்தவர்; எங்கள் காரியதரிசிகளிலொருவராகிய டி. வெங்கட ரமணையாவுக்கு பந்து; எனக்கு மிகவும் தெரிந்த நண்பர். இவருக்கு நாங்கள் முதலில் எழுதியபொழுது சபைக்கு வேண்டிய உதவியைச் செய்வதாக இவர் எங்களுக்குக் கூறிய

உறுதிமொழியே, எங்கள் சபை இவ்வூருக்குப்போய் நாடகமாட வேண்டுமென்று எங்களை உந்தியது.

திருவனந்தபுரத்தில் நாங்கள் ஆடவேண்டிய நாடகசாலைக்குப் பக்கத்திலேயே எங்களுக்கு இருப்பிடம் கிடைத்தது; இது எங்களுக்கு மிகவும் சவுகர்யமாயிருந்தது. இவ்வூரில் நாங்கள் ஆடிய நாடகங்கள் மொத்தம் பத்தாம்; ஒன்பது மேற்குறித்த நாடக சாலையிலும், ஒன்று மகாராஜாவின் அரண்மனையிலும். இங்கு முதல் நாடகமாக "லீலாவதி-சுலோசனை" என்பதை எங்கள் வழக்கம் போல் ஆடினோம். அதற்கு நாங்கள் எண்ணிய அளவு அதிக வசூலாகாவிட்டாலும் நல்ல வசூலே ஆயிற்று. இரண்டாவது நாடகமாகிய மார்க்கண்டேயர் நாடகத்திற்கு மிகவும் குறைந்த வசூலாயிற்று. மூன்றாவது நாடகமாகிய, "மிருச்சகடி" என்பதற்கு அது கூட இல்லை. இந்த மிருச்சகடி சம்ஸ்கிருதத்திலாடப்பட்டது. சென்னையிலிருந்து புறப்படுவதற்கு முன்பே, சமஸ்கிருதத்தில் இவ்விடம் நாடகம் வைத்துக்கொண்டால், ஜனங்கள் அதிகமாக வருவது சாத்தியமல்லவே என்று நான் சந்தேகப்பட்டேன். ஆயினும் சம்ஸ்கிருத நாடகத்தை ஆடவேண்டுமென்று இச்சை கொண்ட சிலர், திருவனந்தபுரத்தில் எல்லோருக்கும் சம்ஸ்கிருதம் நன்றாய்த் தெரியும் ஆகவே, சென்னையைவிட அங்கு அதிக ஜனங்கள் வருவார்கள் என்று கூறினார்கள். அவர்கள் கூறியது தவறாயிற்று, நான் எண்ணியது தான் சரியாயிற்று, என்று ரூபிப்பதற்காக இதை நான் எழுதவில்லை. இப்படிப்பட்ட விஷயகளிலெல்லாம் அனுபோகம் இல்லாதவர்கள் அனுபோகம் உள்ளவர்களுடைய அபிப்பிராயத்திற்குக் கொஞ்சம் கௌரவம் கொடுக்கவேண்டுமென்று என் இளைய நண்பர்கள் அறியும் பொருட்டே இதை எழுதலானேன்.

இதற்கடுத்த நாடகமாக ஹரிச்சந்திர நாடகம் ஆடப்பட்டது. இதற்கு வரும்படி மிகவும் குறைவாக வந்தது. இந்த நாடகத்தின் வரும்படியைப் பற்றி இவ்வளவு முக்கியமாக நான் குறிக்கவேண்டிய காரணம் இதை வாசிக்கும் எனது நண்பர்கள் சீக்கிரம் அறிவார்கள். இதற்கடுத்த நாடகம் "காலவரிஷி", இந்நாடகத்திற்குச் சுமாராக

வசூலாயிற்று. இங்கு குறிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால், முதல் நாடகமாகிய, "லீலாவதி-சுலோசன" வில் ஆடிய பிறகு எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு இதில்தான் ஆடினார். அதன்மீது எங்கள் நண்பர்களில் சிலர், ரங்கவடிவேலு ஆடினால்தான் வசூல் அதிகமாக ஆகிறாற்போலிருக்கிறது என்று பேசத் தலைப்பட்டனர். இது மற்றவர்களுக்குத் திருப்திகரமாயில்லையென்று நான் நினைக்க வேண்டியவனா யிருக்கிறேன். அவ்வாறு நான் எண்ணியது சரியோ தப்போ என்று பின் வருவதைப் படித்து இதை வாசிக்கும் எனது நண்பர்கள் தீர்மானிக்கலாம். இதற் கப்புறம் நடத்திய நாடகங்கள் பீஷ்மப் பிரதிக்ஞையும் நந்தனாருமாம். இவைக ளிரண்டிலும் எனதுயிர் நண்பர் ஒரு பாத்திரமும் எடுத்துக் கொள்ள வில்லை. பீஷ்மப் பிரதிக்ஞைக்கு இங்கு நடத்திய நாடகங்களு ளெல்லாம் மிகவும் குறைந்த வசூலாயிற்று. எனக்கு ஞாபக மிருக்கிறபடி நாற்பது ரூபாயோ நாற்பத்திரண்டு ரூபாயோ வந்தது. அன்றியும், இந் நாடகத்தில் ஒருவரும் சரியாகத் தங்கள் பாடங்களைப் படிக்காது மிகவும் ஆபாசமா யிருந்தது. எனதுயிர் நண்பர் ஜ்வரத்தினால் நாடக சாலைக்கு வராமலிருக்கவே, நான் நாடகம் ஆரம்ப மானவுடன் கொஞ்ச நேரம் இருந்துவிட்டு, அவரைக் கவனிக்க, எங்க ளிருப்பிடம் போய்ச் சேர்ந்தேன். நாடகம் முடிந்தவுடன் அந்நாடகாசிரியராகிய எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் என்னிடம் வந்து, தன்னுடைய நாடகமானது மிகவும் ஆபாசமாய் நடிக்கப் பட்டதென்று கண்ணீருடன் குறை கூறினார். இதை நான் இங்கு முக்கியமாகக் குறித்ததற்கு காரணம் நாடகாசிரியர்கள், தங்கள் நாடகங்களை மற்றவர்கள் ஆட உத்தரவு கொடுக்கும்போது, அந் நாடகங்களைச் சரியாக நடத்தும்படி வற்புறுத்த வேண்டு மென்பதை என் இளைய நண்பர்கள் அறியும் பொருட்டே.

அடுத்த நாடகமாகிய நந்தன் சரித்திரத்திற்கும் வரும்படி குறைவாக வந்தது. இது சென்னையில் எப்பொழுது ஆடிய போதிலும் நல்ல வசூலைக் கொடுக்கும்படியான நாடகம். ஆகவே இதிலாவது சபைக்கு லாபம் கிடைக்குமென எண்ணியிருந்த எங்கள் கோரிக்கை கைகூடாமற் போயிற்று. இதன்பேரில் எங்கள் சபையின் நிர்வாக சபையாரில் சிலர், (அவர்கள் பெயரை இங்கு எழுது

வதற்கு எனக் கிஷ்டமில்லை) அரண்மனையில் மகாராஜாவின் கட்டளைப்படி ஆடவேண்டிய ஒரு நாடகத்தை சீக்கிரம் முடித்துக் கொண்டு, இங்கு ஆடத் தீர்மானிக்கப் பட்டிருந்த கடைசி இரண்டு நாடகங்களையும் விட்டுவிட்டு சென்னைக்குத் திரும்பிப் போக வேண்டும் என்று பிரேரேபித்தார்கள். இதை யறிந்த எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு, அடங்காக் கோபமும் துயரமும் கொண்டவராய், "இவர்கள் வேண்டு மென்றே, என்மீதுள்ள பொறாமையினால் சொல்லுகிறார்கள். நான் இந்த நிர்வாக சபைக் கூட்டத்திற்கு வரமாட்டேன்!" என்று என்னிடம் கூறிவிட்டு, விலகிவிட்டார். அதன்பேரில் நான் "அவர்கள் அவ்வாறு பிரேரேபித்தால் பிரேரேபிக்கட்டும், நாம் சொல்ல வேண்டியதைச் சொல்லிப் பார்ப்போம், நம்முடைய கடமையை நாம் செய்வோம், பிறகு அவர்கள் அப்படித் தீர்மானித்தால் அவர்கள் பாடு" என்று எவ்வளவோ எடுத்துக் கூறியும் ஒரே பிடிவாதமாய் "நான் வரமாட்டேன், நீங்கள் வேண்டு மென்றால் உங்கள் தொண்டையைக் கிழித்துக் கொள்ளுங்கள். அவர்கள் ஒன்றும் உங்கள் பேச்சைக் கேட்கப் போகிறதில்லை! போய்வாருங்கள்" என்று மனங்கசிந்து கூறினார். இதில் முக்கியமாக அவருக்குக் கோபத்தையும் துக்கத்தையும் விளைவித்தது என்னவென்றால் இப்படி விட்டுவிட வேண்டு மென்று யோசிக்கப்பட்ட இரண்டு நாடகங்கள் மனோஹரனும் வள்ளி மணமுமாம். இதில் இரண்டிலும்தான் எங்க ளிருவருக்கும் முக்கியமான பாத்திரங்கள் இருந்தன. நான் உடனே இவ்வாறு யோசித்தேன். நான் இக் கடைசி இரண்டு நாடகங்களையும் இங்கு ஆடவேண்டு மென்பது எனது நண்பனது நன்மைக்காகவா? அல்லது எனது நன்மைக்காகவா? அல்லது இவ்விரண்டுமின்றி எங்கள் சபையின் நன்மைக்காகவா? முந்தியதாயிருந்தால் நான் மற்றவர்கள் சொல்லுகிறதை ஒப்புக்கொள்ள வேண்டும். பிந்தியதா யிருந்தால் என்னாலியன்ற அளவு அந்நாடகங்களைப் போடும்படி முயல வேண்டும். இந்த யோசனையில், அவ்விரண்டு நாடகங்களும் எப்படியும் சபைக்குப்பெயரையும் பணத்தையும் கொண்டுவரும் என்ற தீர்மானத்திற்கு வந்து, நிர்வாக சபையின் கூட்டத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். அக் கூட்டத்தில் கடைசி இரண்டு ஆட்டங்களையும் நிறுத்தி விடுவதுதான்

உசிதம் என்று பிரேரேபிக்கப்பட்டது. ஏறக் குறைய எல்லோரும் அதை ஆமோதித்தனர். அதன் பேரில் அவ்வாறு செய்யலாகாது, அந்த இரண்டு ஆட்டங்களுக்கும் நல்ல வசூலாகுமென்று எனக்கு தோன்றுகிற தெனக் கூறியபோது, எதிர்க் கட்சியைச் சேர்ந்த எனது நண்பர்களில் ஒருவர் "ஆமாம்! முப்பது முப்பத்தைந்து ரூபாய் வரப் போகிறது ஒவ்வொரு ஆட்டத்திற்கும், அதற்காக எங்களை யெல்லாம் இன்னும் நான்கைந்து நாட்கள் இங்கு இருக்கும் படிச் சொல்லுகிறாயா?" என்றார் அதன்மீது எனது நியாயங்களை யெல்லாம் எடுத்துக் கூறி முடிவில் இவ்வாறு கூறினேன். "மற்ற நியாயங்களெல்லாம் இருக்கட்டும். இதைச் சற்று யோசித்துப் பாருங்கள். நாமோ அமெசூர்ஸ்—வேடிக்கைக்காக நாடக மாடுப வர்கள். நாம் இந்த ஊரில் இன்னின்ன நாடகங்கள் ஆடுவது என்று தீர்மானித்து விளம்பரம் செய்தபின், கடைசி இரண்டாட்டங்களை யும் விட்டுவிட்டு ஊருக்குத் திரும்புவோமாயின், இவர்களுக்குப் பணம் வசூலாகவில்லை, பணம்தான் இவர்களுடைய முக்கிய கருத்து போலும், என்று நம்மைப் பார்த்து நான்கு பெயர் நகைக்க இடமுண் டாகும். இது நம்முடைய சபையின் நற்பெயருக்கு ஹீனமாகும். எனக்கென்னவோ இவ்விரண்டு நாடகங்களிலும் நல்ல வசூலாகு மென்று தோன்றுகிறது. அதற்குக் காரணத்தைக் கூறுகிறேன். நீங்கள் நான் சொல்வதைத் தவறாக எடுத்துக்கொண்டால், உங்கள் இஷ்டம், என் கடமையை நான் கழிக்கிறேன். நான் இங்கு வந்தது முதல், முதல் நாடக மானவுடன், 'இன்னும் மற்ற எந்தெந்த நாடகங்களில் ரங்கவடிவேலு நடிக்கப் போகிறார்'? என்று பலர் என்னைக் கேட்டிருக்கிறார்கள். ஆகவே, அவர் முக்கிய பாத்திர மாக நடிக்கும் இவ்விரண்டு நாடகங்களுக்கும் ஏராளமான கூட்டம் வரும் என்று எனக்குள் ஏதோ சொல்கிறது. இப்பொழுது இம்மா திரி ஏற்படுத்தப் பட்ட நாடகங்களை விடுவீர்களாயின், இன்னொரு முறை சென்னையிலிருந்து வெளியூருக்குப் போகவேண்டு மென்று பிரேரேபணை செய்வீர்களாகில், மற்ற ஆக்டர்கள் இம்மாதிரியாக நாம் வரும் நாடகங்களையும் விட்டு விட்டாலும் விடுவார்க ளல்லவா? ஆகவே நாம் கஷ்டம் எடுத்துக் கொண்டு வெளியூருக்கு இச்சபை யுடன் போவதில் என்ன பிரயோசனம்?" என்று யோசிக்க மாட்டார்

களா வென்று, ஆக்டர்களாகிய நீங்களே யோசித்துப் பாருங்கள். என் மனதிலிருப்பதைப் பகிரங்கமாகச் சொன்னேன். பிறகு உங்களிஷ்டம். நான் கூறியது உங்களுக்குச் சம்மதியானல் ஒப்புக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் எனக்கு விரோதமாகத் தீர்மானியுங்கள்" என்று கூறி முடித்தேன். அதன்பேரில், கடைசி இரண்டாட்டங்களையும் எப்படியாவது விட்டுவிட வேண்டு மென்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்த சிலர் தவிர, மற்றவர்கள் எல்லாம் ஒவ்வொருவராக என்பக்கம் திரும்பினார்கள். அப்படி யிருந்தும், ஒரு ஓட்டினால் என்பட்சம் தீர்மானிக்கப்பட்டு, கடைசி இரண்டு ஆட்டங்களையும் ஆடிவிட்டுத்தான் பட்டணம் திரும்பிப் போகவேண்டு மென்று தீர்மானிக்கப் பட்டது. இதுவும் தெய்வத்தின் கருணை யென்று எண்ணினவனாய், இச் சமாசாரத்தை எனதுயிர் நண்பரிடம் போய்ச் சொல்லி அவரைச் சமாதானப் படுத்தினேன்.

பிறகு மறுநாள் ஜுலை மாதம் முதல் தேதி மஹாராஜாவின் அரண்மனையில், அவர் எதிரில் "காலவ ரிஷி" என்னும் நாடகத்தை ஆடினேம். அதைப்பற்றி விவரமாய் பிறகு எழுதுகிறேன். முதலில் எங்கள் கடைசி இரண்டு நாடகங்கள் ஆடிய கோர்வையை முடிக் கிறேன்.

கடைசி இரண்டு நாடகங்களில் "மனோஹரன்" நாடகம் ஜுலை மாதம் மூன்றாம் தேதி வைக்கப்பட்டது. இதற்கு முந்திய நாள் எங்கள் சபையில் ஹார்மோனியம் வாசிக்கும் மாதவ ராவ் என்பவர் எங்களிடம் வந்து, இவ்வூரில் ஒருவர் இந்தக் கடைசி இரண்டாட்டங்களுக்கும் கண்டிராக்டாக 750 ரூபாய் கொடுக்கிறேன் என்கிறார்; ஒப்புக்கொள்ளுகிறீர்களா என்றார். அதைக் கேட்டவுடன் மிகவும் சந்தோஷத்துடன் எனதுயிர் நண்பர் உடனே ஒப்புக் கொள்ளலாம் என்றார். நான்மாத்திரம் அதற்கு ஆட்சேபித்தேன். எங்கள் சபையின் காரியதரிசி உட்பட அநேகர், இதை ஒப்புக்கொள்ளலாமே, இதைவிட இவ்விரண்டாட்டங்களுக்கு அதிகமாகவா வரப் போகிறது, என்று என்னிடம் வந்து வற்புறுத்தினர். நான் மாத்திரம் ஒரே பிடிவாதமாய் ஒப்பவில்லை. அதன்பேரில் மற்றவர்களெல்லாம், எனதுயிர் நண்பர் உட்பட, மெஜாரிடி ஆக இவ்வாறு

தீர்மானிக்கப் போகிறார்களென்று பயந்தவனாய் சில வருடங்களுக்கு முன், சபையின் பொதுக் கூட்டத்தார் உத்திரவின்றி, சபை ஆட்டங்களைக் கண்டிராக்டாக விடக் கூடாதென்று தீர்மானிக்கப் பட்டதை எடுத்துக்கூறி மறுக்கவே, அவர்கள் அதன் பேரில் ஒன்றும் செய்வதற் கில்லாமற் போயிற்று. ஆயினும், என்னுயிர் நண்பர் உட்பட, எல்லோரும் "இந்தப் பிடிவாதத்திற் கென்ன செய்வது!" என்று என்னைக் கடிந்து மொழிந்தனர். ரங்கவடிவேலு என்னிடம் தனியாய் "இதென்ன இது! எப்படி யிருக்குமோ? மழைகிழை வந்தால் என்னாகும்? ஒரு வேளை இவ்விரண்டு நாடகங்களுக்கும் 750 ரூபாய் வசூலாகாவிட்டால் என்ன செய்வது? அப்பொழுது எல்லோரும் நம்மைப் பரிகாசம் பண்ணமாட்டார்களா? எனக்காகவாவது உங்கள் பிடிவாதத்தை விடுங்கள்" என்று மன்றாடினார். "உனக்காகத்தான் இவ்வாறு பிடிவாதம் பிடிக்கிறேன், இதனுண்மையைப் பிறகு நீயறிவாய்!" என்று நான் பதில் சொல்ல, அவர் என்மீது கோபித்துக்கொண்டு இரண்டு மூன்று மணிநேரம் என்னுடன் பேசவும் இல்லை! எது எப்படி ஆனாலும், என் தீர்மானத்தினின்றும் மாறுவதில்லை "கிண்டாய நம:" என்று உட்கார்ந்தேன்.

நாடக தினம், எனதுயிர் நண்பர் எண்ணியபடி காலைமுதல் பெரும் மழை தொடங்கி, கொட்டு கொட்டென்று கொட்டியது. அன்று ஒரு பகலுக்குள்ளாக, பிறகு நான் வர்த்தமானப் பத்திரிகைகள் மூலமாக அறிந்தபடி 9½ அங்குலம் மழை பெய்தது! அந்த நகரவாசிகள் அநேகர் இம்மாதிரியான மழை இது வரையில் பெய்ததில்லை என்று கூறினர். இந்த மழையின் கொடுமையை அறிய வேண்டுமென்றால், இப்படிக் கணக்கிட்டுப் பார்க்கலாம். இதை வாசிக்கும் எனது நண்பர்கள் கொஞ்ச நாளைக்கு முன்பாக நாகப்பட்டணத்தில் பெரும் மழை பொழிந்து, அதிக பொருட் சேதமும், ஆடு மாடு முதலிய கால்நடைச் சேதமும் நேரிட்டதாகப் பத்திரிகைகளில் படித்திருக்கலாம்; அப்பெரும் மழையிலும், 24-மணிக்கு 15-அங்குல மழை பெய்ததாம்; இந்நாடக தினம் திருவநந்தபுரத்தில் 12-மணிக்குள்ளாக 9½ அங்குலம் மழை பெய்திருக்கிறது! என் ஜன்மத்தில் இம்மாதிரியான பெரும் மழை சென்னையில் பெய்ததில்லை. இவ்வாறு பெருமழை பொழியவே, என்னுடைய நண்பர்

கெல்லாம் 750-ரூபாய்க்கு இரண்டு நாடகங்களையும் கண்டிராக்ட்டாக விடாமற் போனோமே! இப்பொழுது இந்த லாபமும் போய்விட்டதே என்று வருத்தப்பட்டு என்னை நிந்திக்க ஆரம்பித்தனர். எனதாருயிர் நண்பர் வாய்திறந்து மற்றவர்களைப்போல் கூறவிட்டாலும், என்னை உற்றுப் பார்க்கும் பொழுதெல்லாம், தன் மனதில் என்னைக் கடிந்து கொண்டாரென்று நினைக்கிறேன். இந்த கடைசி இரண்டு நாடகங்களும் வேண்டாம் என்று கூறியவர்கள் எனக்குப் பின்னால் "என்னவோ அதிகமாக வசூலாகி விடுமென்று சம்பந்தம் சொன்னானே, இப்பொழுது என்ன சொல்லப் போகிறான், பார்ப்போம்!" என்று கூறியதாகக் கேள்விப்பட்டேன். இவற்றையெல்லாம் என் மனத்தில் அதிகமாய் உறுத்தியது, எனதுயிர் நண்பனின் முகவாட்டமே; அதன்மீது மனம்தாளாதவனாய் நான் அதுவரையில் செய்திராத காரிய மொன்றைச் செய்தேன். அந்நாள் வரையில் நான் எழுதிய நாடகமோ, அல்லது நாங்கள் ஆடும் நாடகமோ, ஆடும் தினம் வந்தால், "இன்று நாடகம் சரியாக ஆடப் படவேண்டும், ஒன்றும் குறைவாக இருக்கலாகாது, எல்லோருடைய மனதையும் திருப்திசெய்ய வேண்டும்" என்று பரமேச்வரனைக் குறித்துப் பிரார்த்திப்பது வழக்கம்; ஆயினும் பணம் வசூல் அதிகமாக ஆக வேண்டுமென்று பிரார்த்திப்பதில்லை. அவ்வாறு செய்யக் கூடாது என்னும் கோட்பாடு உடையவனாயிருந்தேன். (இப்பொழுதும் அதை உடையவனாயிருக்கிறேன்) அன்றைத்தினம் அதனின்றும் தவறினேன். அன்று போஜன மானவுடன் வழக்கம் போல், என் பாகத்தை ஒரு முறை படித்துவிட்டு, "எப்படியாவது இன்று நல்ல வசூலாக வேண்டும், ஏராளமான ஜனங்கள் வரவேண்டும்" என்று பரமேச்வரன் கருணையைப் பிரார்த்தித்தேன். பிறகு நமது பிரார்த்தனை ஈடேறுமோ என்னவோ என்னும் ஏக்கத்துடன் நாங்கள் குடியிருந்த வீட்டின் மேல் மாடியில் உலாவிக் கொண்டிருந்த பொழுது, கீழே இருக்கும் எனது நண்பர்களில் ஒருவர் யாரோ ஒரு கிழவன் உங்களைப் பார்க்க விரும்புகிறான் என்று தெரிவித்தார். வரச்சொல் என்று நான் விடை கொடுக்க, ஓர் வயோதிகன் மேல் மாடிக்கு வர, அவனை என்ன வேண்டும் என்று நான் வினவ, "உங்கள் நாடகத்தைப் பார்க்க வேண்டு மென்று ஆசையா

யிருக்கிறது" என்று அவன் கூறினான். நான் இருந்த மனோஸ்திதி யில் "யார் உன்னைப் பார்க்க வேண்டாம் என்றது?" என்று கடு கடுத்து மொழிந்தேன். அதன் பேரில் அவன் "என் கையில் காசில்லை. ஒரு அரை ரூபாய் டிக்கட்டு கொடுத்தீர்களானால், உங்களுக்கும் புண்ணியம் உண்டு" என்று விடைபகர்ந்தான். அதன் மீது மனமிரங்கினவனாய், எங்கள் காரியதரிசியிடம் சொல்லி, அவ னுக்கு என் கணக்கில் அரை ரூபாய் டிக்கட்டு ஒன்று வாங்கிக் கொடுத்தேன். இதை ஒரு பெரிய விஷயமாக இங்கு எழுதுகி றேனே என்று, இதை வாசிக்கும் எனது இளய நண்பர்கள் என்னை ஏளனம் செய்யாம லிருக்கும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இதை இங்கு எழுதியதற்கு இரண்டு முக்கிய காரணங்களுண்டு. முதலாவது, இதைச் செய்தவுடன், அந்த வயோதிகனுடைய முகத்தில் தோன்றிய சந்தோஷம், என்னுடைய ஹிருதயத்தில் இருந்த பெரும் பாரம் ஒன்றை நீக்கியது போல் எனக்கு உவகை யைத் தந்தது. என்னுடைய குணாகுணங்களைப் பற்றி நிஷ்பட்ச பாதமாய் நான் ஆராய்ந்து பார்க்குங்கால், என்னிடம் சுய நன்மையை நாடும் தீயகுணம் பெரும்பாலும் குடிகொண்டிருந்தது (இன்னும் குடிகொண்டிருக்கிறது) என்றே நான் சொல்லவேண்டும். அங்ஙன மிருக்க, மேற் சொன்னபடி, பிரதிப் பிரயோஜனம் ஒன்றையும் நாடாது மற்றவர்களுக்கு நான் ஏதேனும் சிறிது உதவி செய்யும் பொழுதெல்லாம், என் ஹிருதயத்தில் அது வரையில் இல்லாத ஒரு குளிர்ச்சி யுண்டாகி சந்தோஷப் பட் டிருக்கிறேன். என்னைப் போன்ற சுய நன்மையை நாடும் சிலர் இதைப் படிப்பவர்களுள் இருந்தாலும் இருக்கலாம். அவர்களுக்கு இந்த எனது அனுபவம் சிறிது பலனைத் தரக்கூடும் என்று எண்ணி னவனாய் இதை எழுதலானேன். •இரண்டாவது காரணம், அந்த வயோதிகன் போனவுடன் பெய்துகொண்டிருந்த மழை இன்னும் அதிகமாய்ப் பெய்ய ஆரம்பித்த போதிலும், என் மனதில் இன்றி ரவு நாடகத்திற்கு நல்ல பணம் வசூலாகுமென்று திடீரென்று தோன்றியது. நான் செய்த அல்ப காரியத்திற்கும், இதற்கும் என்ன சம்பந்தம் என்று, எனது நண்பர்கள் என்னைக் கேட்கலாம்; இந்த இரண்டிற்கும் முடி போடுவது வெறும் பயித்தியம் என்று

இதை வாசிக்கும் எனது நண்பர்களிற் சிலர் நகைக்கலாம். அப்படி நகைப்பவர்களின்மீது நான் குறை கூறமாட்டேன். அவர்கள், இவ்வாறு இவ்விரண்டிற்கும் ஏதோ சம்பந்த மிருக்கிறது என்று எண்ணுவதற்கு என்ன நியாயமுண்டு? என்று என்னைக் கேட்பார்களாயின், அவர்களுக்குத் தக்க பதில் உரைப்பதற்கு அசக்தனு யிருக்கிறேன். ஆயினும் இவ்விரண்டிற்கும் நான் காரணமறியாத சம்பந்தம் ஏதோ உண்டென்று உறுதியாய் நம்புகிறேன்.

அன்று சாயங்காலம் ஆறுமணிக்குக்கூட அப்படியே பெரு மழை பெய்துகொண்டிருந்தது. அருகிலுள்ள நாடகசாலைக்கு நான் போய்ப் பார்த்தபொழுது, நாடகமேடையின் பக்கத்தில் ஆர்மோனியம் வைக்கும் இடத்தில் மழை ஜலம் தேக்கிடையாயிருந்தது. அதை வெளிப்படுத்த ஒருவாய்க்கால் வெட்டி, அதன் மூலமாக அந்த ஜலத்தை ஒழித்தோம்! சுமார் 8½-மணிக்குக் கொஞ்சம் மழை நின்றது. மழை நின்று விட்டதென்று நாங்கள் சந்தோஷப் பட்டுக்கொண்டிருந்தபொழுது மறுபடியும் ½-மணி நேரத்திற்கெல்லாம் பெரும் மழை தொடங்கியது! ஆயினும் இந்த அரைமணி நேரத்திற்குள்ளாக கடைசி வகுப்பு தவிர, மற்ற வகுப்புகளெல்லாம் ஜனங்கள் நிரம்பி விட்டனர்! அன்றைத்தினம் நாடக ஆரம்பத்திற்கு முன் எங்கள் சபை வழக்கப்படி பிள்ளையார் பாட்டை பாடும் பொழுது என் வேண்டுகோளுக்கு கருணை கூர்ந்தனரே பகவான் என்று ஆநந்தக் கண்ணீருடன் அப்பாட்டைப் பாடினேன். அன்று எனக்கு ஞாபகமிருக்கிறபடி 850 ரூபாய்க்கு மேல் வசூலாயது. இதை யறிந்த எனதுயிர் நண்பர் அன்று நடித்ததுபோல் என்றும் நடிக்கவில்லையென்றே கூறுவேன். நானும் அன்று நடித்தது போல், சில சமயங்களில் தான் மிகுந்த குதூஹலத்துடன் நடித்திருக்கிறேன்.

நாடகம் முடிவதற்கு ஏறக்குறைய காலை 3-30 ஆச்சுது. வந்தவர்களில் ஒருவரும் அதுவரையில் தங்கள் இடத்தை விட்டுப் பெயர்ந்திலர். நாடக முடிவில் நடந்த ஒரு சிறு வேடிக்கை எனக்கு ஞாபகமிருக்கிறது. நாடகம் முடிந்தவுடன், அநேகர் எனக்குத் தெரிந்தவர்களும் தெரியாதவர்களுமாக வேஷம் தரிக்கும் இடத்

திற்கு வந்து, எங்களைக் கொண்டாடிப் பேசினர். அதில் ஒருவர், "என்ன சார், முதலியாரவாள், நாடகம் முடிந்தபிறகுதான், நீங்கள் இந்நாடகத்தில் ஒரு பாட்டும் பாடவில்லையென்று கண்டறிந்தோம்! ஏன் நீங்கள் பாடுகிறதில்லை?" என்று கேட்டார். இதை நான் ஆக்டு செய்ததற்கு, ஒரு முக்கியமான புகழாகக் கொள்ளுகிறேன். முதன்முறை இந்நாடகத்தில் நான் நடித்த பிறகு, இவ் வேடம் ஏறக்குறைய நாற்பது முறை நான் தரித்து ஆடும்பொழுதெல்லாம் ஒரு பாட்டும் பாடியதில்லை. அப்படியிருந்தும் இந்நாடகம் நன்றாகவில்லை யென்று ஒருவராவது சொன்னதாக எனக்கு ஞாபகமில்லை. நாடகமாடுவதென்றால் பாட்டு இல்லாமல் உதவாது என்று அபிப்பிராயப்படுவோர் இதைச் சிறிது கவனிப்பாராக.

அன்று நாடகம் முடிந்து எங்கள் வேஷங்களைக் கலைத்தவுடன், ஏதோ கொஞ்சம் ஆகாரம் கொண்டுவிட்டு, உடனே மோட்டார் வண்டியில், எனதுயிர் நண்பரும் நானும் கன்யாகுமரிக்குப் பிரயாணம் புறப்படும்படி நேரிட்டது. இதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. சில தினங்களுக்கு முன் எங்கள் சபையோர் கன்யாகுமரிக்குப் போய்வந்தபொழுது, எனதுயிர் நண்பர்கொஞ்சம் ஜ்வரத்துடன் இருந்தார்; ஜ்வரமாயிருந்தும் மறுபடியும் தனக்கு சமயம் வாய்க்குமோ என்னமோ எப்படியும் அவர்களுடன் போகவேண்டுமென்று நிர்ப்பந்தித்தார். அதன்பேரில், உன் உடம்பைப் பார்த்துக்கொள்; நான் உனக்கு உடம்பு சௌக்கியமானவுடன் எப்படியும் உன்னைக் கன்யாகுமரிக்கு அழைத்துக்கொண்டு போய் அம்மன் தரிசனம் செய்து வைக்கிறேன் என்று வாக்குக் கொடுத்திருந்தேன்; கடைசி இரண்டு நாடகங்களும் ஆனவுடன் சென்னைக்குப் புறப்பட ஏற்பாடாயிருந்தபடியால், அந்த மறு நாளைத் தவிர, கன்யாகுமரிக்கு நாங்கள் போக,எங்களுக்கு வேறு தினம் கிடைக்கவில்லை. ஆகவே, நாடகமாடிய சிரமத்தையும் கவனியாது, உடனே புறப்பட வேண்டியதாயிற்று. வழியெல்லாம் அம்மலைப்பிரதேசங்களின் தோற்றங்களின் அழகினையும் கவனியாது தூங்கிக்கொண்டே போனோம். எங்களை அழைத்துக்கொண்டு போன திருவனந்தபுரம் நண்பர், எங்களுக்கு வேண்டிய சவுகர்யங்களையெல்லாம் செய்திருந்தார். வழியில் ஓர்

அழகிய குளத்தில் ஸ்நானம் செய்துகொண்டு, சுசேந்திரம் என்னும் திவ்ய ஸ்தலத்தைத் தரிசித்துக்கொண்டு, கன்யாகுமரிக்குப் போய்ச் சேர, நடுப்பகலாய் விட்டது. அப்பொழுது கோயிலுக் போனால், மத்யான பூஜையாகிக் கோயில் கதவுகள் அடைக்கப்பட்டிருந்தன! நாங்கள் சாயங்காலமே திரும்பிவருவதாக எங்கள் சபை நண்பர்களுக்குத் தெரிவித்துவிட்டு வந்தோம். இவ்வளவு தூரம் கஷ்டப்பட்டுவந்தும், அம்மன் தரிசனம் செய்யாமல் திரும்பிப் போவதா, சாயங்காலம் தரிசனம் செய்துகொண்டு, ராத்திரி போய்ச் சேர்வோம் என்று தீர்மானித்தோம். அன்று இந்திய லட்சுமியின், பாதத்திலுள்ள கன்யாகுமரி முனையின் சமுத்திர கட்டத்தில் ஸ்நானம் செய்து போஜனம் கொண்டு, 12 மணி முதல் சாயங்காலம் ஆறு மணி வரையில் ஒரே தூக்கமாய்த் தூங்கினோம். பிறகு சாயங்காலம் கடற்கரையில் எங்கள் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு கோயிலுக்குப் போய் அம்மன் தரிசனம் செய்துகொண்டு திருவநந்தபுரம் போய்ச் சேரப் புறப்பட்டோம். இந்தக் கன்யாகுமரி க்ஷேத்திரமும் சமுத்திரக் கட்டமும், இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு மனிதனும் அவசியம் பார்க்க வேண்டியவை; இவற்றின் அழகையும் மேன்மையையும் பற்றி ஈச்வரன் கிருபையால், எனக்குச் சந்தர்ப்பம் வாய்க்குமாயின், பிறகு எனது நண்பர்களுக்குத் தெரிவிக்கலாமென்றிருக்கிறேன். இவ்வூரைவிட்டுத் திருவநந்தபுரம் வரும்பொழுது, பாதி வழியில் எங்கள் மோட்டார் வண்டியின் டயர் (Tyre) வெடித்துப்போய் விட்டது திடீரென்று! வண்டிக்காரன் மிகுந்த புத்திசாலித்தனமாய் எவ்வளவோ அதை மராமத்து செய்து பார்த்தான்; பிரயோஜனப்பட வில்லை. என்ன காரணத்தினாலோ, வேறு டயர் கொண்டு வரவில்லை! இரவு எட்டு மணியாகிவிட்டது; பாதையில் ஜன சந்தடியும் அற்றுப்போய் விட்டது! என்ன செய்வது? நாங்கள் பட்ட துயரத்தை விட எங்களை அழைத்து வந்த நண்பர், இவர்களுக்கு இவ்வளவு கஷ்டம் கொடுக்கிறோமே என்று அதிகத்துயரப்பட்டார். பிறகு வண்டியை வண்டிக்காரன் வசம் விட்டு விட்டு, சுமார் இரண்டு மயில் நடந்து ஒரு குக்கிராமம் போய்ச் சேர்ந்தோம்' அதன் பெயரும் எனக்கு ஞாபகமில்லை, இதற்குள் ஒன்பது மணியாகி விட்டது. எங்களுக்குப் பசி

அதிகமாய் விட்டது. அந்தச் சிறுகிராமத்திலிருந்தவீடுகளெல்லாம் மூடப்பட்டிருந்தன. பிறகு அங்கு ஒரு சத்திரத்திற்குப் போய் அச்சத்திரப் பிராம்மணனை, கதவைத் தட்டியெழுப்பி, ஏதாவது உணவு கிடைக்குமா என்று கேட்க, அப்பிராம்மணன், "ஐயோ! இப்பொழுது வந்தீர்களே! எல்லாம் சாப்பிட்டாய் விட்டதே! கடைகளும் மூடப்பட்டனவே! வேண்டுமென்றால் சாதம் வடித்துக்கொடுக்கிறேன். வீட்டில் கொஞ்சம் மோர் இருக்கிறது சாப்பிடுகள்" என்று சொன்னார். அவ்வளவாவது சொன்னாரே என்று அவரை வாழ்த்திப் பிறகு மோர்சாதம் சாப்பிட்டு அன்றிரவு அந்தச் சத்திரத்தின் மேல் மாடியில் கழித்தோம். காலை எழுந்து திருவநந்தபுரம் போகும் பஸ் வண்டி வரும், அதில் போகலாமென்று தீர்மானித்தோம். நாங்கள் திரும்பி வரவில்லையே யென்று எங்கள் சபை நண்பர்களெல்லாம் வருந்தப்படுவார்களே யென்று, எண்ணமிட்டுக்கொண்டே அன்றிரவு தூங்கினேன்.

மறுநாள் காலையிலெழுந்து திருவநந்தபுரம் போகும் பஸ் ஒன்றில் ஏறி, நாங்கள் குடியிருந்த வீட்டிற்குப் போய், முன் நாள் இரவு வராததற்குக் காரணத்தை என் நண்பர்களுக்குக் கூறினோம். அன்றிரவு வள்ளித்திருமணம் என்னும் நாடகத்தை ஆடினோம். கடைசி இரண்டு நாடகங்களையும் விட்டுவிடவேண்டுமென்று பிரயத்தனம் செய்த எனது நண்பரிற் சிலர், "மனோஹரன்" நாடகத்திற்குத்தான் ரூபாய் அதிகமாக வந்தது; அதற்குக்காரணம் மனோஹர நாடகம் மிகவும் பிரசித்தி பெற்றிருப்பதாம்; இந்த வள்ளி நாடகத்திற்கு என்ன வரப்போகிறது? பார்ப்போம், என்று என் காதில் விழும்படியாகப் பேசிக்கொண்டிருந்தனர். இதைக் கேட்டும், எல்லாம் ஈச்வரன் பாரம், நாம் இதற்குப்பதில் கூறுவானேன், என்று சும்மா இருந்து விட்டேன். அன்றைத்தினம் மழை ஒன்றும் இல்லாதிருந்தது. இந்த நாடகத்திற்கு ஒரு மணிக்கு முன்பாக நான் வேஷம் போட்டுக்கொண்டிருந்த பொழுது, நாடக சபைக்குள் ஜனங்கள் சேரும் தொனியினால் அன்றைக்கும் அதிகமாக ஜனங்கள் வருகிறார்கள் என்பதை அறிந்தேன். ஆயினும், எனதாருயிர் நண்பருக்கு எதிர்க்கட்சியைச் சேர்ந்த எனது நண்பர்களில் ஒருவர் டிராப்படுதாவில் இதற்கென்று செய்து வைக்கப்பட்டிருந்த ஒரு

துவாரத்தின் வழியாக நாடகசாலையில் வந்திருக்கும் ஜனங்களைப் பார்த்துவிட்டு, நாங்களிருவரும் (ரங்கவடிவேலுவும் நானும்) கேட்கும்படியாக, "ஒரு ஐம்பது ரூபாய் வசூலாயிராது; ஜனங்களின் கூச்சல் மாத்திரம் அதிகமாயிருக்கிறது!" என்று கூறினார். அதைக் கேட்டு கொஞ்சம் புன்சிரிப்புடையவனாய் என் வேஷத்தின்மீது கவனமாயிருந்தேன். அதன் பேரில் ரங்கவடிவேலு என்னருகில் வந்து "என்ன! இவர் (அவர் பெயரைச் சொன்னார். அதை இங்கு எழுத என் மனம் இடங்கொடுக்கவில்லை) இப்படிச் சொல்லுகிறாரே! இன்றைக்கு நல்ல வரும்படி வருமா?" என்றார். அதற்கு "அவசரப்படாதே, நீ கேட்ட கேள்விக்குப் பதில், நாடகம் ஆரம்பமானவுடன் சொல்லுகிறேன். அதுவரையில் உன் தலையை நீட்டி ஹாலில் எத்தனை பெயர் வந்திருக்கிறார்கள் என்று எண்ணவேண்டாம்! நீ ஒன்றுக்கும் பயப்படாதே!" என்று பதில் உரைத்தேன். அன்றைத்தினம் நாடக ஆரம்பத்திற்கு முன் 750 ரூபாய்க்கு மேல் வசூலாயது. இதைக் கேள்வியுற்ற எனதுயிர் நண்பர் என்னிடம் ஓடி வந்து சந்தோஷததுடன், "எழுநூற்றைம்பது ரூபாய் வசூலாய் விட்டதாம்!" என்று கூறினார். அதற்குநான், "இது ஒன்றும் எனக்கு ஆச்சரியத்தைத் தரவில்லை; இப்படி வசூலாகுமென்று முன்பே எனக்குத் தெரியும்; இதிருக்கட்டும்; இந்த சந்தோஷத்தை ஒரு புறம் ஒதுக்கிவைத்துவிட்டு, நீ நன்றாய் வள்ளியின் பாகத்தை நடித்து வந்திருப்பவர்களின், மனதைத் திருப்திசெய்யும் விதத்தைப் பார்!" என்று சொல்லி, அவரை முதற் காட்சியில் மேடையின்மீது அனுப்பினேன். அன்று எனதுயிர் நண்பர் மிகவும் குதூஹலத்துடன் நடித்தனர் என்று நான் இங்கு எழுத வேண்டியதில்லை. இதில் முக்கியமான அம்சம் என்னவென்றால் அவர் நடிக்காத, இங்கு எங்கள் சபை ஆடிய நாடகங்கள் ஐந்தின் வரும்படியைச் சேர்த்தாலும், அவர் ஆடிய இக்கடைசி நாடகங்களில் ஒவ்வொன்றிலும் வந்த வரும்படிக்கு ஈடாகவில்லை! இந்நிகழ்ச்சியால் நான் அறிந்த நீதி இரண்டாம். ஒன்று 'கடவுளை நம்பினவர்கள் கைவிடப்படமாட்டார்கள்' என்பதும், இரண்டாவது, மற்றவர்கள் நமக்குக் கெடுதி நினைத்தாலும் நாம் அதை ஒரு பொருட்டாகப் பாவியாது பிரதிசெய்யாது, மறந்துவிடவேண்டு

மென்பதுமாம். இதை வாசிக்கும் எனது இளைய நண்பர்கள் இந் நீதிகளைக் கடைப்பிடித்து நடப்பார்களாயின், அவர்களுக்குப் பலன் உண்டாகும் என்று நம்பி, இதை இங்கு விவரமாய் எழுதலானேன்.

இனி, திருவாங்கூர் மகாராஜாவின் முன்னிலையில் எங்கள் சபையோர் ஆடிய நாடகத்தைப்பற்றி எழுதுகிறேன். எங்கள் சபை இவ்வூருக்கு வந்ததும் எங்கள் சபையின் அங்கத் தினரில் ஒருவரும், இவ்விடம் எங்கள் சபைக்கு மிகவும் உதவி புரிந்தவருமாகிய, திருவாங்கூர் சமஸ்தானத்தின் திவான்ஜி (மந்திரி) யாகவிருந்த திவான் பஹதூர் ராகவையாவின் மூலமாக, மஹாராஜா அவர்களுக்கு எங்கள் சபை அவரது முன் னிலையில் ஒரு நாடகம் ஆட விரும்புவதைத் தெரிவித்தோம். அதன் பேரில் அவர் எங்கள் சபையைப் பற்றி எல்லாம் விசாரித்து, தமது அரண்மனையில் ஒரு நாடகம் ஆடவேண்டுமென்று ஆக்ஞா பித்தார். அதன்மீது என்ன நாடகம் ஆடுவதென்கிற கேள்வி வந்தபொழுது, நாங்கள் ஆடக்கூடிய நாடகங்களின் கதைகளின் சுருக்கங்களை யெல்லாம் திவான் மூலமாக அனுப்ப, அவர், 'காலவ ரிஷி' சரித்திரம் புராணக் கதையாயிருப்பதால், அந்தப்புரத்து ஸ்திரீ களும் அறியக்கூடியதாயிருப்பதால், அதை ஆடவேண்டுமென்று தெரிவித்தார். அதை ஆடுவதாக ஒப்புக்கொண்டு தக்க ஏற்பாடு கள் செய்து அரண்மனையிலே ஓர் மண்டபத்தில் இதற்கு வேண்டிய திரைகளையெல்லாம் அனுப்பி, ரங்கமொன்று ஏற்படுத்தினோம். இங்கு இந்நாடகம் நடத்தியது கொஞ்சம் விந்தையானதால், அதைச் சற்று விவரமாக எழுதவிரும்புகிறேன்.

அரண்மனையில், 'காலவரிஷி' ஆடவேண்டும் என்று தீர்மானிக் கப்பட்ட பிறகு, அரண்மனையிலிருந்து இன்னின்னபடி நடக்க வேண்டும் என்று எங்களுக்குச் சில நிபந்தனைகள் சொல்லி அனுப் பப்பட்டன ; 8 மணிக்கு ஆரம்பமாகி, நாடகம் $10\frac{1}{2}$-மணிக்குள்ளாக முடியவேண்டுமென்றும், ரங்கத்தின் மீதிருக்கும் வெளிச்சங்கள் மஹாராஜா உட்கார்ந்திருக்கு மிடத்தில் பிரகாசிக்கக் கூடாதென் றும், ஆக்டர்கள் மஹாராஜா உட்கார்ந்திருக்குமிடத்தை நேராகப் பார்க்கக் கூடாதென்றும், ஆக்டர்களும் பக்கவாத்தியக்காரர்களும்

தவிர மற்றொருவரும் அங்கு வரலாகாதென்றும், இம்மாதிரியான சில நிபந்தனைகள் சொல்லியனுப்பப்பட்டன; அவைகளுக்கு ஒப்புக் கொண்டு அவ்வாறே ஏற்பாடுகள் செய்தோம். எட்டுமணிக்கெல்லாம் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறதே யென்று சாயங்காலம் 3 மணிக்கெல்லாம் அரண்மனைக்குப் போய் வேஷம்தரிக்க ஆரம்பித்தோம். ஆக்டர்கள் தவிர மற்றவர்ககள் வரவேண்டியதில்லை என்று உத்தரவானதின் பேரில், எங்கள் சபையுடன் வந்த ஏறக்குறைய எல்லா அங்கத்தினரும் ஆக்டர்களாக மாறிவிட்டார்கள்! நாடகம் நடக்கும்பொழுது பக்கத்திலிருந்து யாரும் பார்க்கக் கூடாதென்று கேட்கப்பட்டபடியால், புராம்டர் வேண்டாமென்று தீர்மானித்து, ஆக்டர்களுடைய புஸ்தகங்களை யெல்லாம் வீட்டில் கட்டிப் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டு வந்தோம். அன்றிரவு நாடகமுழுவதும் கொஞ்சமேனும் புராம்டிங் இல்லாமலே நடந்தது! தற்காலம் சில நாடகங்கள் நடக்கும் பொழுது நான்கு பக்கம் நான்கு புராம்டர்களும், அவர்கள் மத்தியில் பாட்டுகளை ப்ராம்ட் பண்ணுவதற்குச் சிலரும், ஏற்பாடுசெய்யும் ஆக்டர்களும் கண்டக்டர்களும் இதைக் கவனிப்பார்களாக.

8-மணிக்கு நாடகம் ஆரம்பிக்கவேண்டுமென்று சொல்லியனுப்பிய மஹாராஜா அவர்கள், 7½-மணிக்கெல்லாம் போஜனம் முடித்தாயது; உடனே ஆரம்பிக்க முடியுமா? என்று கேட்டனுப்பினார்! நாங்கள் எல்லோரும் முன்பே ஆயத்தமாயிருந்தபடியால், ‘இன்னும் ஐந்து நிமிஷத்தில் ஆரம்பிக்கிறோம்’ என்று சொல்லியனுப்பி, பிள்ளையார் துதி, சரஸ்வதி துதியை உடனே பாடி, நாடகத்தை ஆரம்பித்தோம். இது மகாராஜா அவர்களுக்கு மிகவும் திருப்தியைக் கொடுத்ததெனப் பிறகு கேள்விப்பட்டேன். முதல் காட்சியில் எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு, இந்திரன் சபையில் நர்த்தனம் செய்தது மிகவும் புகழப்பட்டதெனவும் அறிந்தேன். நர்த்தனம் செய்யும் பொழுது, சம்ஸ்கிருதத்தில் மஹாராஜாவின் மீது கட்டப்பட்ட ஒரு சுலோகத்தைப் பாடி நர்த்தனம் செய்தார். நாடக ஆரம்பத்தின் முன் எமது ஆக்டர்களெல்லாம், ஒரே ஒருவர் முன்னிலையில் நாடகமாடுவதென்றால், அது எப்படி இருக்கும் என்று கூச்சப்பட்டுக் கொண்டிருந்தனர். ஆயினும், இந்தச் சந்தேகம் டிராப்படுதா மேலே போனவுடன், நிவர்த்தியாகி

விட்டது. மஹாராஜா அவர்கள் ஒரு பக்கமாக உட்கார்ந்திருக்க, மற்றொரு புறம் அவரது இரண்டு மனைவியரும் பிள்ளைகள் முதலியோரும் உட்கார்ந்திருக்க, இரண்டு பக்கங்களிலும் பின்புறத்திலும், அரண்மனையிலிருந்த ஏறக்குறைய அனைவரும் நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர்! நாடகமானது ஒரு தடையுமின்றி, காட்சிக்குக் காட்சி இடைக்காலம் ஏதுமின்றிப் பரபரவென்று நடந்தேறியது. ஆக்டர்களனைவரும் மிகவும் நன்றாக நடித்தார்களென்றே சொல்லவேண்டும். சாதாரணமாக நான்கு மணிநேரம் பிடிக்கும் இந்நாடகம், 2½-மணி நேரத்திற்குள் முடிந்து விட்டது! நாடகம் முடிந்ததும் நாங்கள் வழக்கப்படி சபை மங்களம்பாடி முடிந்தவுடன், மகாராஜா அவர்கள் தன் ஆசனத்தை விட்டெழுந்து நின்று, ஆங்கிலத்தில், நாடகமானது மிகவும் நன்றாயிருந்ததென்றும் தாம் மிகவும் சந்தோஷப்பட்டதாகவும் கூறி, எங்கள் சபைக்கு வந்தனம் அளித்தனர். பிறகு திவான் அவர்கள், "மஹாராஜா அவர்கள் இம்மாதிரியாக ஒரு சபையையும் புகழ்ந்து வந்தனம் சொன்னதில்லை. உங்கள் பாடு அதிர்ஷ்டம்தான்" என்று மறுநாள் என்னிடம் கூறினார். மஹாராஜாவின் மனதை இவ்வாறு சந்தோஷிக்கச் செய்தோமே என்று நான் மிகவும் சந்தோஷப்பட்டேன். மஹாராஜா அவர்களும், அவரது மனைவிகளும், நாடகத்தை நன்கு மதித்தனர் என்பதற்கு முக்கியமான அத்தாட்சி மறுநாள் இன்னொரு நாள் நாடகம் ஆட முடியுமாவென்று எங்களைக் கேட்டனுப்பியதேயாம். நாங்கள் சீக்கிரம் திருவனந்தபுரத்தை விட்டுப் போகத் தீர்மானித்தபடியால், எங்களை மன்னிக்க வேண்டுமென்று சொல்லி யனுப்ப வேண்டியதாயிற்று.

திருவனந்தபுரத்திலிருந்த பொழுது, மஹாராஜா அவர்கள் அரண்மனையிலேயே எங்களுக்கு ஒரு பெரும் விருந்தளித்தனர். இஃதன்றி திவான் பஹதூர் டி. ராகவையா அவர்களும் விஸ்வநாதக் கோனார் அவர்களும், வக்கீல் சங்கர சுப்பையர் அவர்களும், டாக்டர் ஆர். சங்கர சுப்பையர் அவர்களும் எங்கள் சபையோருக்கு விருந்தளித்தனர். இவர்களுக்கெல்லாம் என் வந்தனத்தை இதன் மூலமாகச் செலுத்துகிறேன். முக்கியமாகக் காலஞ்சென்ற திரு

வாங்கூர் மஹாராஜா இச்சமயம் எங்கள் சபையின் கட்டிட பண்டிற்கு ரூ. 2500 அளித்து எங்கள் சபைக்குச் செய்த கௌரவத்தையும் உபகாரத்தையும் நான் என்றும் மறக்க முடியாது.

இம்முறை சென்னையை விட்டு வெளியூர்களுக்குப் போய் வந்ததினால், சபைக்கு மொத்த வரும்படியை விடச் செலவு அதிகம்; மொத்த நஷ்டம் 3,057-4-10 ஏற்பட்டது. நாங்கள் திருவநந்தபுரத்தில் கடைசி இரண்டு நாடகங்கள் ஆடாதிருந்தால், இந்த நஷ்டமானது, ஏறக்குறைய 5000 ரூபாயாயிருக்கும். இவ்வாறு சபைக்குப் பெரும் நஷ்டம் வந்ததின் பலன் என்னவென்றால், இது முதல் நான்கைந்து வருடங்கள் வரைக்கும் சபையானது வெளியே போய் நாடகமாடலாம் என்னும் பிரஸ்தாபமே யில்லாமற் போயிற்று.

இவ்வருஷம் எனது நண்பர் ச. ராகவாசாரியார் சம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்த "வேணீ சம்ஹாரம்" எனும் நாடகம் முதன் முறை ஆடப்பட்டது. இதில் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு பானுமதியாக நடிக்க, நான் துர்யோதனனாய் நடிக்கவேண்டி வந்தது. நான் இதுவரையில் ஆடிய அநேக நாடக பாத்திரங்களில், மனதில் திருப்தியில்லாமல் நடித்த வெகு சிலவாகிய வேடங்களில் இது ஒன்றாம். ரங்கவடிவேலு பானுமதி வேடம் பூண்டமையால், நான் இவ்வேடத்தைத் தரித்தேனேயொழிய இல்லாவிடில் ஒப்புக்கொண்டிருக்கமாட்டேன். சிறு வயதில் மஹாபாரதத்தை நான் தமிழில் படித்தது முதல், இந்தத் துர்யோதனனை, நான் மிகவும் வெறுத்து வந்தேன். அப்படியிருக்க அவ்வேடத்தை நான் எவ்வாறு நன்றாய் ஆட முடியும்?

இவ்வருஷம் சில அங்கத்தினரின் பிரேரேபணையின்படிச் சபையில் சங்கீதக் கச்சேரிகள் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று யோசித்து ஸ்ரீமான் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் அவர்கள் கச்சேரி ஒன்று ஏற்பாடு செய்தோம். இப் பிரயத்னமானது பிறகு சரிவராது கைவிடப்பட்டது.

எங்கள் சபையின் சரித்திரத்தில் இவ்வருஷம் நடந்த நிகழ்ச்சிகளுள் முக்கியமானது சென்னைக் கவர்ன்மெண்டார் மூலமாக எங்

கள் சபைக்கு நேபியர் பார்க் என்னும் இடத்தில் 22 மனை 2,199 சதுர அடியுள்ள நிலம் எங்கள் நாடகசாலையும் இருப்பிடமும் கட்டக் கிடைத்ததேயாம். இவ்வருஷ முடிவில் கட்டட பண்டாக எங்களிடம் 66,683-14-7 இருந்தது.

1922-ஆம் வருஷம் இன்னொரு புதுப் பிரயத்னம் செய்து பார்த்தோம். "அசந்துஷ்டோத் விஜோ நஷ்ட: சந்துஷ்டஸ் சைவ பார்த்திவ:" என்று ஒரு சம்ஸ்கிருத ஸ்லோகம் உண்டு; அதன் பொருள் "கிடைத்தது போதாது என்றிருக்கும் பிராம்மணனும், கிடைத்தது போதுமென்றிருக்கும் அரசனும், நஷ்ட மடைவார்கள்" என்பதாம். ஆகவே, எனது பால்ய நண்பர் எப்பொழுதும் எனக்கு ஞாபக மூட்டுகிறபடி, எங்கள் சபையில் ஏதாவது புதிய பிரயத்னம் செய்து கொண்டே இருக்கவேண்டும் என்பது, எங்களிருவருடைய கொள்கை. அதன்படி இவ்வருஷம் முக்கோடி ஏகாதசி தினம், ஒரே நாளில் இரண்டு நாடகங்கள் போட்டுப்பார்த்தோம். சாயங்காலம் $5\frac{1}{2}$-மணி முதல் "வேதாள உலகம்" என்னும் தமிழ் நாடகமும், பிறகு $8\frac{1}{2}$-மணி முதல் இரவு $2\frac{1}{2}$-மணி வரையில் 'பிரஹ்லாதன்' என்னும் தெலுங்கு நாடகமும். இதைப் பற்றி நான் எங்கள் நிர்வாக சபையில் முதலில் பிரேரேபித்த பொழுது, சில தெலுங்கு அங்கத்தினர் சாயங்காலம் போடும் தமிழ் நாடகத்திற்கு ஒருவரும் வரமாட்டார்கள் என்று ஆட்சேபித்தனர். இரண்டு நாடகங்களுக்கும் நல்ல வசூலாயிற்று; தமிழ் நாடகத்திற்கு 333-4-0 ரூபாயும் தெலுங்கு நாடகத்திற்கு 760-12-0 ரூபாயும்; ஆகமொத்தம் ஒரே நாளில் சபைக்கு நாடக வாயிலாக 1,094-0-0 ரூபாய் வசூலாயிற்று. இதை யறிந்தபின் சாயங்கால நாடகத்திற்கு ஒன்றும் வராது என்று சொன்னவர்கள், கம் என்று இருந்து விட்டார்கள்; நானும் என் கோட்பாட்டின் படி, அவர்களை 'நீங்கள் சொன்னீர்களே, என்னவாயிற்று?' என்று கேட்காமலிருந்து விட்டேன். இதை இங்கு எடுத்து எழுதியதற்கு முக்கிய காரணம், நாம் எதையும் பிரயத்னம் செய்து பார்க்க வேண்டுமென்று என் இளைய நண்பர்கள் அறியும்பொருட்டே. இச்சந்தர்ப்பத்தில், உலகிலெல்லாம் மிகுந்த தனவந்தன் என்று பெயர்பெற்ற ஹென்றி போர்ட் என்பவர் ஒரு முறை கூறியது

ஞாபகம் வருகிறது. "எந்தப் பிரயத்னத்திலும் தோல்வி என்பது கிடையாது. ஒரு பிரயத்னத்தில் நாம் கோருவது கைகூடா விட்டால், அதையே பிறகு வெற்றியடைய நமக்கு அனுபவமாகக் கொள்ளவேண்டும்" என்பதாம்.

இவ்வருஷம் எங்கள் சபையானது மிகுந்த உன்னத ஸ்திதியை யடைந்தது என்று ஒரு விதத்தில் சொல்லவேண்டும். இவ்வரு ஷத்திய மொத்த வரும்படி ரூ. 52,607-8-7 மொத்தச் செலவு ரூ. 51,364-16-3 இத்தொகைகள் பிறகு எப்பொழுதும் கிட்டிய தில்லை. டிசம்பர் விடுமுறையில் நடித்த நாடகங்களில் மாத்திரம் ஏறக்குறைய 6,000 ரூபாய் வரும்படி பெற்றோம். இவ்வருஷம் எங்கள் சபை 49 நாடகங்கள் நடித்தது.



# 25-ஆவது அத்யாயம்



இனி 1923-ஆம் ஆண்டில் நடந்த விஷயங்களைப்பற்றி எழுது கிறேன். நான் எந்த வருஷத்தை மறந்தாலும் இந்த வருஷத்தை மறக்க முடியாது. இவ்வருஷம் இருபத்தெட்டு வருடங்களாக என்னுடன் நாடகமேடையில் நடித்த எனதுயிர் நண்பர், என் பூர்வ பாபவசத்தால் என்னை விட்டு விண்ணுலகஞ் சென்றனர். இதைப்பற்றி நான் எழுதும்பொழுது ஆங்கிலத்தில் ஒரு கவி எழு திய இரண்டடிகள் ஞாபகம் வருகின்றன. அவைகளின் தமிழ் அமைப்பு "நகைத்தையேல், உலகம் நகைத்திடும் உன்னுடன்; அழு தையேல், நீ தான் அழவேண்டும் தனியே!" என்பதாம். இவ்வுண் மையைக் கருதினவனாய், நினைக்குந்தோறும் அதி துக்கத்தை விளக்கும் இவ்விஷயத்தைப்பற்றி மேல் ஒன்றும் எழுதாது விடுத் தேன்.

எனதுயிர் நண்பர் மடிந்ததைக் கேட்டு எங்கள் சபையில் மனமுருகாத அங்கத்தினர் ஒருவருமில்லை. அவரை மேடைமீது ஒரு முறை பார்த்தவர்களுள் கூட ஒருவராவது அவர் இறந்த

தைப்பற்றி விசனப்படாதவர் இல்லையென்றே கூறவேண்டும். அவர் மடிந்த பிறகு மறுபடி சபைக்குப் போவதா என்றிருந்தேன். ஆயினும் போகவேண்டியதாயிற்று; புருஷனைப் பறிகொடுத்த கைம் பெண், தன் தாயார் வீட்டிற்குப் போகும் மனதுடன் போய்ச் சேர்ந்தேன்! இனி நாடகமேடை ஏறுவதில்லை என்று உறுதியாய்த் தீர்மானித்தேன். அத்தீர்மானத்தினின்றும் மாறவேண்டி வந்த கதையைப் பிறகு எழுதுகிறேன்.

அவரது பிரேதத்தைச் சம்ஸ்காரம் செய்த தினம் எங்கள் சபை மூடப்பட்டது. சில தினங்களுக்குள் ஒரு பொதுக்கூட்டம் கூட்டப்பட்டுச் சபையோர்கள் அவர் இறந்ததினால் சபைக்கு நேரிட்ட துக்கத்தைத் தெரிவித்தனர். அன்று அவர் 28 வருஷ காலமாகச் சபையில் முக்கிய வேஷம் தரித்து நடித்ததைப்பற்றி யும், சபையில் பொக்கிஷதாராகவும் ஸ்டேஜ் டைரக்டராவும் காரி யதரிசியாகவும், கண்டக்டராகவும், கடைசியில் வைஸ்பிரசிடெண்டு களில் ஒருவராகவும் இருந்ததைப்பற்றியும் எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார், சேஷகிரி ஐயர் அவர்கள் முதலியோர் பேசினர். அச்சமயம் நான் வாயற்றுப்போய் ஒரு மூலையில் உட் கார்ந்துகொண்டு, கண்ணீர் விட்டுக்கொண்டிருந்ததுதான் எனக்கு இப்பொழுது ஞாபகமிருக்கிறது. சபையோர் இவர் ஞாபகச்சின் னமாக இவரது உருவப்படமொன்றைச் சபையில் வைக்கவேண்டு மென்று தீர்மானித்ததுடன், இவரது ஞாபகார்த்தமாக ஏதாவது செய்ய ஒரு பண்டு ஏற்படுத்தவேண்டுமென்றும் தீர்மானித்தனர். அப்பண்டிற்கு அநேகர் பணம் அனுப்பினர். கொழும்பு முதலிய தூர தேசத்திலிருந்தும் சிலர் பணம் அனுப்பினர். இந்தப் பண் டில் தற்காலம் சுமார் 1,000 ரூபாய் சேர்ந்திருக்கிறது, எங்கள் சபையார் இதை எப்படி உபயோகிப்பது என்று இன்னும் தீர்மா னம் செய்யவில்லை.

இவர் உயிர் துறந்ததைக் கேட்ட எனது நண்பர் டாக்டர் ஸ்ரீனிவாசராகவாசாரியார் "ரங்கவடிவேலுடன் சபையின் லட்சுமி யும் போய்விட்டாள்" என்று தனது பிறிவாற்றாமையாற் கூறினர். அவ்வாக்குப் பலித்தது போல் இவ்வருஷம் முதல் எங்கள் சபை

கொஞ்சம் க்ஷீணித்துக்கொண்டே வருகிறதென நான் கூறவேண்டும். இவ்வாக்கியம் எங்கள் சபையில் இருக்கும் சில இளைய அங்கத்தினருக்குத் திருப்திகரமாயில்லாதிருக்கலாம்.

இவ்வருஷம் ஷேக்ஸ்பியர் கொண்டாட்டமும் கொண்டாடவில்லை, எங்கள் சபையின் வருஷாந்தர மஹோற்சவமும் கொண்டாடப்படவில்லை; வெளியூருக்கும் எங்கள் சபை போகவில்லை.

இவ்வருஷத்தின் ஆரம்பத்தில் ஜனவரிமாதத்தில் மூன்று தினங்களில் சாயங்காலம், விக்டோரியா ஹால் மேல்மாடியில், ஆங்கிலேயர் ஏற்படுத்தும் பேன்சிபேட் (Fancy Fete) மாதிரி சபையின் கட்டட பண்டிற்காக ஏற்படுத்தினேன். அதன் மூலமாகச் செலவுபோக ரூபாய் 485-11-9 கட்டட பண்டிற்குச் சேர்த்தேன். இதில் எனது நண்பரும் நானும் வேடங்கள் தரித்தது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது.

எனதாருயிர் நண்பர் மரித்த பொழுது இனி நாம் நாடகமேடையேறுவதில்லை நாடகங்களும் எழுதுவதில்லை என்று தீர்மானித்தேன். அச்சமயம் யாராவது இத்தீர்மானத்தினின்றும் நீ மாறப்போகிறாய் என்று என்னிடம் கூறி யிருப்பார்களாயின், அவர்களுக்குப் பித்தம் பிடித்திருக்கிறதெனச் சொல்லியிருப்பேன்; இருந்தும் ஒரு வருஷத்திற்குள்ளாக அத்தீர்மானத்தினின்றும் தவறினேன்! கேவலம் மனிதனுடைய மனோதிடமும் தீர்மானங்களும் இத்தகைத்தே! இது நான் பெருமை பாராட்ட வேண்டியதற்கு நேர்விரோதமான விஷயமாயிருந்தபோதிலும், என்னுடைய நாடகமேடை அனுபவங்கள் யாவற்றையும் ஒன்றுவிடாமலும், ஒளியாமலும் எழுத நிச்சயித்திருக்கிறபடியால், இதையும் இங்கு எழுதுகிறேன்.

எனதாருயிர் நண்பர் ஞாபகம் கொஞ்ச நேரமாவது வராமலிருக்கும்படி, இடைவிடாது புஸ்தகங்களைப் படித்துப் பார்த்தேன். எனது சிநேகிதர்களுடன் சீட்டு, பில்லியர்ட்ஸ், முதலியன ஆடிப் பார்த்தேன்; கடற் கரைக்குச் சென்று உலாவிப் பார்த்தேன். என் மனதிற்குத் தோன்றிய யுக்திகளை யெல்லாம் செய்து பார்த்

தேன். எதிலும் கொஞ்சமேனும் பயன்படாமற் போயிற்று. உடம்பின் வெளியில் தைத்த முள்ளை எப்படியாவது பிடுங்கி எறியலாம், ஹிருதயத்தில் தைத்த முள்ளை எப்படிப் பிடுங்கி எறிவது? சாரங்கதரனைப் பற்றிச் சுமந்திரன் கூறியதாக நான் எழுதியது போல, நான் எங்கு சென்றாலும் யாரைப் பார்த்தாலும் அவரது ஞாபகமே எனக்கு வந்துகொண்டிருந்தது. என் தகப்பனார் மடிந்த காலை அத் துயரத்தை மறந்திருக்க வேண்டி மனோஹரன் நாடகத்தை எழுதிப் பூர்த்தி செய்ததுபோல இச்சமயம் ஏதாவது எழுதலாமா என்று யோசனை பிறந்தது. அதன்மீது மஹாபாரதத்திலிருந்து பீஷ்மரது சரித்திரத்தை நாடக ரூபமாக எழுதலாமா என்று யோசித்து அதைத் தொடங்கினேன் இவ்வருஷம். இச்சந்தர்ப்பத்தில் என் சிறு வயதில் நான் கேட்ட ஒரு சிறு கதை ஞாபகம் வருகிறது. தீராத வியாதியால் பீடிக்கப்பட்ட ஒரு அரசன், தன் குடும்ப வயித்தியர் கொடுத்த மாத்திரைகளினால் ஒன்றும் குணமாகவில்லை என்று அவர்மீது கடிந்துகொள்ள, அந்த வயித்தியர் யுக்திசெய்து, குரங்கை நினைத்துக்கொள்ளாமல் இந்த மாத்திரையைப் புசித்தால் உங்களுக்கு உடம்பு சௌக்யமாகும் என்று சொன்னாராம்; அதன் பிறகு அந்த அரசன் அம் மாத்திரையைப் புசிக்கக் கையி லெடுக்கும் போதெல்லாம், வைத்தியர் குரங்கை நினைத்துக் கொள்ளக் கூடாதென்று சொன்னாரல்லவா என்று ஞாபகம் வந்ததாம்! அம்மாதிரியாக இந்த பீஷ்ம சரித்திரத்தை நாடகமாக எழுத ஆரம்பிக்க உட்காரும் போதெல்லாம் எனதுயிர் நண்பர் ஞாபகம் வராம லிருக்கும்படி இதை எழுதத் தீர்மானித்தோ மல்லவா என்கிற ஞாபகம் வரத் தலைப்பட்டது! அதன்பேரில் அவரைப்பற்றி மறக்க முயல்வதையும் விட்டேன்! அந்நாடகத்தில் முதல் அங்கம் முதற் காட்சி என்று ஆரம்பித்து சில வரிகள் எழுதி அப்படியே விட்டிருக்கும் காகிதம் என்னிடம் இன்னு மிருக்கிறது. இதை நான் எழுதி முடிப்பேனோ என்னவோ ஈசனுக்குத் தான் தெரியும். இதை வாசிக்கும் எனது நண்பர்கள் யாருக்காவது ஜோஸ்யம் தெரிந்தால், எனக்குத் தெரிவித்தால் நலமா யிருக்கும்.

பிறகு கொஞ்ச காலம் பொறுத்து கர்ணவதத்தை நாடகமாக எழுத ஆரம்பித்தேன். அதுவரையில் முப்பத்திரண்டு வருடங்க

ளாக நாடகங்கள் எழுதிய கையானது சும்மா இருக்க முடியவில்லை! இதுதான் இனிமேல் நாடகங்கள் எழுதுவதில்லை என்று நான் தீர்மானித்த தீர்மானத்தின் முடிவாகும்! இனி நாடகமேடை யேறுவதில்லை என்ற தீர்மானத்தின் முடிவைக் கூறுகிறேன்.

இவ்வருஷத்தின் ஆரம்பத்தில் சபையின் பொதுக் கூட்டத்தில் எனது நண்பராகிய துரைசாமி ஐயங்கார் தமிழ் கண்டக்டராக நியமிக்கப்பட்டார். அவர் ஏதோ காரணத்தினால், கிருஸ்த்மஸ் விடுமுறையில் வழக்கப்படிப் பத்து பதினைந்து நாடகங்கள் ஆடவேண்டுமென்று தீர்மானித்து, ஹாலுக்குப் பணம் கட்டிய பின் தமிழ் கண்டக்டர் வேலையை ராஜிநாமா கொடுத்தார். திடீரென்று அச்சமயம் வேறொருவரும் அந்த வேலையை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்றார்கள். அச்சமயம் இத்தனை வருஷங்களாகப் பாடுபட்ட சபைக்கு நான் கைகொடுக்க வேண்டியதாயிற்று. அதன் பேரில் நான் மறுபடியும் தமிழ் கண்டக்டராக இருக்க ஒப்புக் கொண்டேன். கண்டக்டராகத்தானே இருக்க ஒப்புக்கொண்டோம்; நாம் மேடைமீது நடிக்கப் போகிறதில்லையே என்று என் மனதைத் தேற்றிக் கொண்டேன். தமிழ் நாடகங்களுக் கெல்லாம் ஒத்திகை நடத்தினேன். அச்சமயம் அவற்றுள் முதல் தமிழ் நாடகமாகிய "பொன் விலங்குகள்" என்னும் எனது நாடகத்திற்கு ஒத்திகை நடத்திக் கொண்டு வந்த பொழுது, "பங்கஜவல்லி நாடக பாத்திரத்திற்கு, இந்தச் சந்தர்ப்பத்தில் ரங்கவடிவேலு இப்படி நடிப்பார்" என்று சொல்ல ஆரம்பித்தவன், என் பூர்வ ஞாபகமெல்லாம் வரவே வாய் குளறிக் கண்ணீர் ததும்ப, ஒத்திகையை நிறுத்த வேண்டியவனாயினேன். பிறகு என் மனதைத் தேற்றிக் கொண்டு ஒருவாறு ஒத்திகையை முடித்தேன். இச்சமயம் எங்கள் சபை ஆடிய மற்றொரு நாடகம் எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் இயற்றிய சபலை என்னும் நாடகம். இதில் நான் எப்பொழுதும் சுவர்ணகிரி ஜமீன்தார் வேஷம் தரிப்பது வழக்கம். இம்முறை அங்ஙனம் செய்ய முடியாதென்று அப்பாத்திரத்தை வேறொரு ஆக்டருக்கு கொடுத் திருந்தேன். அவர் நாடக தினம் சமீபித்த பிறகு, ஏதோ காரணத்தினால் தன்னால் அதை ஆட முடியாதென்று திருப்பிக் கொடுத்துவிட்டார். வேறொரு ஆக்டரை

நாடக தினத்துக்குள் தயார் செய்வது அசாத்தியமா யிருந்தது. அந்நாடகத்தையாவது விடவேண்டும், அல்லது நானாவது அந்த வேடம் தரிக்கவேண்டும் என்னும் தர்ம சங்கடத்தில் நின்றேன்! இதுவரையில் நான் உழைத்து வந்த சபையின் நலத்தைக் கருதின வனாய், என் மனதை ஒருவாறு திடப் படுத்திக்கொண்டு அந்தப் பாத்திரத்தை நான் மேடையின் பேரில் நடித்தேன். இப்பாத்தி ரம் ஒரே காட்சியில் வருவதாயினும் இதை நடிப்பது சுலபமல்ல; அந்த வேஷம் புனையும்பொழுது எனது மற்ற சினேகிதர்கள் மத் தியில் ஏதோ பராக்கா யிருந்து விட்டேன்; பிறகு நான் வரவேண் டிய காட்சி ஆரம்பித்தவுடன் பக்கப் படுதாவின் அருகிலிருந்து மேடைக்கு நான் வரவேண்டிய காலத்தை எதிர்பார்த்து நின்று கொண் டிருந்தபொழுது, என் ஹிருதயத்திலிருந்த மாறாத வடு, "உதிரம் சொரிய ஆரம்பித்தது!" எனது உடம்பு நடுங்கியது, கால் கள் தள்ளாடின. பிறகு கண்மூடி, ஈசனை தியானித்தவனாய், மன தை தேற்றிக்கொண்டு, கண்ணீரை அடக்கி, இனி கால் வைப்ப தில்லை என்று தீர்மானித்த ரங்கத்தின்மீது காலை வைத்து, என் பாகத்தை நடிக்க ஆரம்பித்தேன். நான் வாயை திறந்து முதலில் பேசவேண்டிய வார்த்தைகளைப் பேசுமுன் ஹாலில் வந்திருந்த ஏறக்குறைய அனைவரும் பெருங் கரகோஷம் செய்தனர். இனி சம்பந்தம் நாடகமேடை ஏறப் போகிறதில்லை யென்று நினைத்தி ருந்த எனது நண்பர்கள், மறுபடியும் தெய்வாதீனத்தால் நாடக மேடை ஏறிவிட்டானே என்னும் சந்தோஷத்தினால் அவ்வாறு செய்தனர் என்று முகஸ்துதியால் என் ஆன்மாவை நானே திருப்தி செய்துகொண்டு அன்று நடித்தேன். என்ன காரணத்தி னாலோ அன்று அவ் வேடத்தில் நான் நடித்தது போல் அப்பாத்தி ரத்தை அதற்கு முன்னும் நான் அவ்வளவு உருக்கமாக நடித்த தில்லை, பிறகும் நடித்ததில்லை. எனது பாகத்தை முடித்துக் கொண்டு ரங்கத்தைவிட்டு நான் திரும்பிப் போகும்போதும், எங் கள் சபை அங்கத்தினரும் மற்றவரும் பெருங் கரகோஷம் செய் தனர். அம்மாதிரியான கரகோஷம் எங்கள் சபை அங்கத்தினரிட மிருந்து இதற்கு முன்பும் நான் பெற்றதில்லை; பிறகும் பெற்றதில்லை. அப்பொழுது என் மனதில் தோன்றிய எண்ணத்தை வெளிப்

படையா யிங்கு எழுதுகிறேன். "நம்முடைய இத்தனை நண்பர்கள், நாம் நடிப்பதை இன்னும் ஏதோ பார்க்க வேண்டுமென்று விரும்புகிறாற் போலிருக்கிறதே! நம்முடைய சுய இச்சையைக் கருதிச் சும்மா இருப்பதா? அல்லது நமக்கு எவ்வளவு மனவருத்த மிருப்பினும் இவர்கள் மனதைத் திருப்தி செய்வதா?" என்னும் கேள்வியேயாம்.

மறு தினம் சாயங்காலம் எங்கள் சபையோர் எனது பழய நாடகமாகிய "லீலாவதி-சுலோசனா"வை நடத்தினார்கள். அதைப் பற்றிப் பிறகு எனது நண்பராகிய சுந்தரவரத அய்யங்கார், 'எவ்வரிமான்ஸ் ரெவ்யு' என்னும் பத்திரிகையில் ஆங்கிலத்தில் எழுதியதை இங்கு தமிழில் மொழிபெயர்த்து எழுதுகிறேன். "இதுவரையில் இந்நாடகத்தில் சாதாரணமாக நடித்து வந்த இரண்டு முக்கிய ஆக்டர்கள், இன்று இல்லாமையானது குறிக்கப்பட்டது; அவர்களுள் ஒருவர் மீண்டும் திரும்பி வராத இடத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டார்! மற்றொருவர், தன் கடமைப்படி, ரங்கத்தின் மீதிருந்தார், ஆயினும் ஆக்டர்கள் ஆடும் இடத்திலில்லை; பக்கப் படுதாவின் பக்கத்தில், கண்டக்டராகத் தன் ஆயுளை எந்த வேலைக்காக அர்ப்பணம் செய்தாரோ, அந்த வேலையைப் பார்த்துக் கொண்டு!" இம்முறை நான் கண்டக்டராகப் புஸ்தகத்தைக் கையில் வைத்துக்கொண்டு, ஆக்டர்கள் மறந்துபோகும் இடத்தில் அவர்கள் பாகங்களை எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த பொழுது, இதற்கு முன்பாக திருநெல்வேலியில் இந்நாடகம் ஆடினபொழுது அனுபவித்த துயரத்தைவிட, நூறு பங்குத் துயரம் அதிகமாய் அனுபவித்தேன்; திருநெல்வேலியில் மறுபடி எனதுயிர் நண்பரை இவ்வுலகில் சீக்கிரம் காண்பேன் என்னும் ஆறுதல் இருந்தது; இம்முறை அந்த ஆறுதலும் ஆசையும் அடியுடன் அற்றவனாயிருந்தேன்!

இம்முறை டிசம்பர் விடுமுறை காலத்தில் எங்கள் சபை எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு ஆடிய பாத்திரங்களுள்ள நாடகங்கள் ஆடுவதில் நேர்ந்த முக்கியமான கஷ்டமென்ன வென்றால், அப்பாத்திரங்களை எடுத்துக் கொள்ள மற்ற ஆக்டர்கள் பெரும்

பாலும் அஞ்சினர்—அவர் நன்றாய் நடித்த பாகங்களை நாம் அவரைப்போல் நடிக்காவிட்டால், சபையோர் எல்லாம் அப்படியில்லை என்று குறை கூறுவார்களே யென்று; நாடகங்களைப் பார்க்க வந்த சபையோர்களும் அப்படியே சொல்லித் தீர்த்தனர். முன்பு கூறிய எனது நண்பர் சுந்தரவரத ஐயங்கார் மேற்சொன்ன பத்திரிகையில் "காலவரிஷி" யென்னும் நாடகத்தைப் பற்றி எழுதிய பொழுது அடியில் வருமாறு வரைந்தனர்:—"இம்முறை சுபத்திரை வேடம் பூண்ட எம். ராமகிருஷ்ண ஐயர், தௌர்ப் பாக்கியத்தால் சிறு வயதிலேயே மரணமடைந்த சி. ரங்கவடிவேலு மிகவும் விமரிசையாய் இப்பாத்திரத்தை நடித்தபடி, தானும் முயன்று பார்க்க வேண்டியதாயிற்று; அன்று சபையில் வந்திருந்தவர்களுள் ஒருவராவது அவர் நடிப்பதற் கில்லாமல் போயிற்றே என்று வருந்தாமல் இல்லை!" என்று எழுதினர்.

1924-ஆம் வருஷம் நடந்த எங்கள் சபையின் நிகழ்ச்சிகளுள், சில துக்ககரமானவை, சில சந்தோஷகரமானவை. இவ்வருஷம் எங்கள் சபையின் பேட்ரன் ஆக இருந்த சர். சுப்பிரமணிய ஐயர் காலமாயினர். அன்றியும் எனது பழய நண்பரான டி. வி. கோபாலசாமி முதலியாரும் காலமாயினர். பிறகு எனது நாடகமாகிய "பொன் விலங்குகள்" என்பது நடிக்கப்படும் பொழுதெல்லாம், இவர் 'பிஸ்தாக் கொட்டைசாமி'யாராக நடித்ததை பார்த்தவர்கள் அவரைப்பற்றி நினையாத சமயம் கிடையாது. சாரங்கதர நாடகத்தில், இவர் மதுரகவியாக நடித்ததும் மிகவும் மெச்சத்தக்கதாயிருந்தது. இவர் நடுவயதிலேயே மறித்ததினுல் எங்கள் சபை ஒரு ஹாஸ்ய பாத்திரம் ஆடும் ஆக்டரையும் நான் எனது அத்யந்த நண்பர்களுள் ஒருவரையும், இழந்தோம்.

இவ்வருஷம் ஏப்ரல் மாதம் சென்னை கவர்ன்மெண்டார் என்னை ஸ்மால்காஸ் கோர்ட் ஜட்ஜாக நியமித்தனர். எனது நண்பராகிய சர். சி. பி. ராமசாமி ஐயர் என்னை அழைத்து இவ்வேலையை ஒப்புக் கொள்ளும்படிக் கேட்டபொழுது, நான் அதற்கிசைந்ததற்கு முக்கிய காரணம், வக்கீலாக வேலை பார்த்துக் கொண்டிருந்தால், எந்நேரமும் என்னுடன் ஜூனியர் வக்கீலாகப்

பல வருஷங்கள் கோர்ட்டில் பழகிய எனதாருயிர் நண்பர் சி. ரங்க வடிவேலுவின் ஞாபகத்தை மறக்க முடியாது, ஜட்ஜாகப் போனால், கொஞ்சம் மறந்திருக்க முடியு மென்பதேயாம். நான் இந்த வேலையை ஒப்புக்கொண்ட பொழுது அனேக நண்பர்கள், இனி நான் நாடகமேடையில் தோன்றமாட்டேன் என்று உறுதியாய் நம்பினார்கள்; என்னிடம் தங்களுடைய அந்த அபிப்பிராயத்தையும் தெரிவித்தார்கள். அவர்களுக்கு நான் அடியிற் கண்டபடி பதில் சொன்னேன்:—“இதற்கும் அதற்கும் ஒரு சம்பந்தமுமில்லை, அப்படி ஏதாவது சம்பந்த மிருந்து இவ்விரண்டி லொன்றை நான் விட வேண்டியிருந்தால், நான் நாடகமேடையை விடமாட்டேன் என்று உறுதியாய் நம்புங்கள்” என்று கூறினேன். பிறகு ஒரு சமயம் என்னைச் சென்னையிலிருந்து வெளியூருக்கு டிஸ்டிரிக்ட் ஜட்ஜாக மாற்றுவதாக ஒரு வதந்தி பிறந்தபோது, ஒரு முக்கிய கவர்ன்மெண்ட் உத்யோகஸ்தரிடம், அப்படிச் செய்வதினால், எனது ராஜினாமைவப் பெற்றுக்கொள்ள வேண்டிவரும், என்று தெரிவித்தது எனக்கு இப்பொழுது ஞாபகம் வருகிறது. எனக்கு இந்த ஜட்ஜ் வேலை கிடைத்த பொழுது, என்னைப்பற்றிப் பத்திரிகைகளிலும் கூட்டங்களிலும், ஏதோ கொஞ்சம் புகழ்ந்து பேசியவர்களெல்லாம் நான் ஒரு நாடக ஆசிரியன் என்பதைப் பற்றிக் குறிப்பிடாதவர் இல்லை. இதுவே எனக்கு மிகவும் சந்தோஷத்தைத் தந்தது.

எங்கள் சபையார் இவ்வருஷம் ஏப்ரல் மாதம் 26-ம் தேதி எனக்கு ஒரு உபசார விருந்து செய்தனர். அன்று நடந்த மற்ற விஷயங்களைப்பற்றி எனக்கு இங்கு எழுத இஷ்டமில்லை. அப்பொழுது நடந்த ஒரு வேடிக்கையான சமாசாரத்தை மட்டும் இங்கு எழுதுகிறேன். விருந்தின் ஆரம்பத்தில், விக்டோரியா ஹாலில் வரவழைக்கப் பட்டவர்களெல்லாம் உட்கார்ந்த பிறகு, எங்கள் சபையின் வழக்கப்படி, ஸ்டேஜுக் குள்ளாக, வினயகர் துதியை எனது ஆக்டர் நண்பர்கள் ஆரம்பித்தனர். உடனே ஹாலில் உட்கார்ந்திருந்த நான், ஸ்டேஜுக்கு உள்ளே விரைந்து சென்று கண்ணை மூடிக்கொண்டு, என் வழக்கம்போல் எனது நண்பர்களுடன் விநாயகர் துதி, சரஸ்வதி துதி, பாடல்களைப் பாடினேன். பாடி முடிந்தவுடன், என் அருகிலிருந்த நண்பர்கள் சிரித்தபொழுது

தான், என்னைக் கௌரவப் படுத்த வேண்டி அந்த சபை கூட்டப் பட்டது என்பது எனக்கு ஞாபகம் வந்தது! வயது சென்ற ஒரு கோமுட்டிக்குக் கலியாணச் சடங்கிற்காக வாத்தியம் வாசிக்க ஆரம்பித்த பொழுது, அவன் "எனக்கா கலியாணம்?" என்று கேட்டதாக ஒரு வேடிக்கைக் கதையுண்டு; அக்கதையை நினைத்து நகைத்துக் கொண்டு வெட்கத்துடன் மறுபடி ஹாலில் போய், எனக்கு ஏற்படுத்தி யிருந்த ஸ்தானத்தில் உட்கார்ந்தேன்! "பழக்கம் பொல்லாது பாறைமேற் கோழி சீக்கும்" என்னும் பழமொழிப்படி, அனேக வருடங்களாக அப்பாட்டுகளை எனது நண்பர்களுடன் கூடிச் சேர்ந்து பாடிவந்தபடியால், இப்பொழுதும் அப்பாட்டுகள் மேடையின் மீதோ, அல்லது ஒத்திகை அறையிலோ, ஆரம்பிக்கப்பட்டால், என்னையுமறியாதபடி என்ன வேலையிலிருந்த போதிலும் அதை நிறுத்திவிட்டுப் பாடுமிடத்திற்கே போய் மற்றவர்களுடன் அப்பாட்டுகளைப் பாடுகிறேன். இதே மாதிரியாக எங்கள் சபையில் இந்த நாற்பத்தைந்து வருடங்களாகத் தமிழ் நாடகங்கள் ஆடும் பொழுதெல்லாம் நாடகம் முடிந்தவுடன், ராமலிங்க ஸ்வாமி பாடலில் "கல்லார்க்கும் கற்றவர்க்கும்" என்னும் திவ்யமான பாடலைப் பாடி மங்களம் பாடுவது வழக்கம்; இந்தப் பாட்டை யாராவது தெருவில் பாடும் பிச்சைக்காரன் பாடிக் கொண்டு போனாலும் உடனே எழுந்திருந்து கைகூப்பி வணங்குகிற வழக்கம் எனக்குச் சுபாவமாய் விட்டது.

மேற் சொன்ன உபசார விருந்தின் முடிவில் நான் என்னைக் கௌரவப்படுத்திய சபையோருக்கு வந்தனமளிக்கவேண்டிய சமயம் வந்தபொழுது, 'நீங்கள் எனக்குச் செய்த உபசாரத்தால் என் மனம் சந்தோஷமடைந்திருக்கிறது. ஆயினும் என் மனம் பூரணமாகத் திருப்தி அடையவில்லை; என் மனதில் ஒரு குறை யிருக்கிறது ; அக்குறை தீர்ந்தால் தான் எனக்குப் பூரண உவகையுண்டாகும். அது என்னவெனில், எனக்கு ஸ்மால்காஸ் கோர்ட் ஜட்ஜ் வேலையானதுபோல், எனது பால்ய நண்பராகிய வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காருக்கு ஹைகோர்ட்டு ஜட்ஜ் வேலையாகி, அவருக்கு நாம் எல்லோரும் இதுபோன்ற விருந்து செய்ய வேண்டுமென்பதே" என்று கூறினேன். என் வேண்டுகோளுக்கிணங்கி, ஈசன் அருளி

யது போல் இரண்டு மூன்று மாதங்களுக்குள் அவருக்கு அப்படியே ஹைகோர்ட் ஜட்ஜ் வேலையாச்சுது! நான் கோரியபடியே, அவருக்கு எங்கள் சபையார் இவ்வருஷம் ஜூலை மாதம் 26-ஆம் தேதி உபசார விருந்தளித்தனர்.

எங்களிருவருடைய நட்பைப்பற்றி, இதை வாசிக்கும் நண்பர்களுடைய அனுமதியின் மீது, ஒரு விந்தையான சமாசாரத்தை இங்கெழுத விரும்புகிறேன். நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் 1882-ஆம் வருஷம் முதல் முறை பச்சையப்பன் கலாசாலையின் கீழ்ப்பிரிவாகிய கோவிந்தப்ப நாயகர் பள்ளியில் சந்தித்தோம். அது முதல் மிகுந்த அன்யோன்ய ஸ்நேகிதர்களாகி, தெய்வகடாட்சத்தால் ஐம்பது வருஷத்துக்கு மேல் கழித்தோம். இதைக் கொண்டாடவேண்டி எங்கள் சபை ஆக்டர்களுள் முக்கியமானவர்களையெல்லாம் வரவழைத்து எனது பால்ய நண்பர் இதை நான் எழுதிய வருஷமாகிய 1932-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நான் பிறந்த தேதியில் எனக்கு ஒரு சிறந்த விருந்தளித்தார். நாங்களிருவரும் மேற் சொன்னபடி பள்ளிக்கூடத்தில் ஒன்றாய்ப் படித்தோம். பிறகு லா காலேஜில் ஒன்றாய்ப் படித்தோம். லா பரீட்சையில் ஒன்றாய் தேறினோம். ஒரே வருஷத்தில் வக்கீல்களானோம். பிறகு ஒரே வருஷத்தில் மேற் சொன்னபடி ஜட்ஜுகளானோம்! இதைவிட இன்னும் விசேஷமான சமாசாரம் என்னவெனில், நாங்களிருவரும் ஒரே வருஷத்தில் ஜட்ஜ் வேலையினின்று விலகினோம்! 1928-ஆம் வருஷம் எனக்கு 55-வயது பூர்த்தியானபடியால், கவர்ன்மெண்ட் சட்டப்படி விலகினேன். அவர் அதே வருஷம் தனக்கு ஹைகோர்ட்டு ஜட்ஜ் வேலை இனி வேண்டாமென ராஜிநாமாக் கொடுத்து விட்டார்! அன்றியும் நாடகமேடையிலும் ஏறக்குறைய 45 வருடமாக ஒன்றாய் உழைத்து வருகிறோம். இவ்வாறு இவரது இணைபிரியா நட்பை இந்த 50 வருட காலமாக நான் பெற்றது என் முன்னோர்கள் செய்த பூஜாபலனேயென்று உறுதியாய் நம்புகிறேன். இவரை எனது நண்பனாகவும் குருவாகவும் ஆத்ம பந்துவாகவும் அடைந்து நான் பெற்ற பலனை என்னால் எடுத்துரைக்க இயலாது. அதைப்பற்றி நான் நினைக்கும்பொழுது மாணிக்க வாசக ஸ்வாமிகள் திருவாசகத்தில்,

"தந்தனுன்றன்னை கொண்ட தென்றன்னைச் சங்கராவார்
வார்கொலோ சதுரர்
அந்தமொன்றில்லா வானந்தம் பெற்றேனியாது நீ பெற்ற
தென்றென் பால்?"

என்று திருவாய் மலர்ந்தருளியது எனக்கு ஞாபகத்திற்கு வரு கிறது.

ஈசன் தன் கருணையினுல் இவ்வுலகில் எனக்களித்த நண்பர் களுள் இவரை முதலாகவும், காலஞ்சென்ற ரங்கவடிவேலுவை இரண்டாவதாகவும், தற்காலம் என்னுடன் நாடக மேடையில் நடித்துவரும் கே. நாகரத்தினம் ஐயரை மூன்ருவதாகவும் மதிக் கிறேன்.

இனி இக்கிளைக் கதையை விட்டு மூலக் கதைக்குப் போகி றேன். இந்த 1924-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 19-ஆம் தேதி எனது தமிழ் ஆசிரியராகக் கொள்ளும் ம-ா-ா-ஸ்ரீ, மஹாமஹோ பாத்யாயர் வே. சாமிநாத ஐயர் அவர்கள் எங்கள் சபையில், "நாட கத் தமிழ்" என்பதைப்பற்றி ஒரு உபன்யாசம் செய்தார். இவர் அன்று எடுத்துக் கூறிய விஷயங்களை ஆதாரமாகக் கொண்டே சில வருடங்களுக்குப் பிறகு, சென்னை சர்வகலா சங்கத்தார் ஆதரவின் கீழ், நாடகத் தமிழைப்பற்றி மூன்று உபன்யாசங்கள் பச்சையப் பன் கலாசாலையில் நான் செய்தேன். இது அச்சிட்டு வெளிப்படுத் தப்பட்டு இருக்கிறது.

இனி இவ்வருடம், நாடகமேடையின்மீது மறுபடியும் கதா நாயகன் வேடம் பூணுவதில்லை என்று தீர்மானித்த நான், அத் தீர்மானத்தினின்றும் வழுவி, மறுபடியும் முக்கிய வேடம் பூண்ட கதையை எழுதுகிறேன்.

இவ்வருஷம் நவம்பர் மாதம் 23-ஆம் தேதி அதிவிருஷ்டியினுல் தென் இந்தியாவின் சில பிரதேசங்களில் ஜனங்கள் அடைந்த மிகுந்த கஷ்டத்தை நிவாரணம் செய்வதற்காக ஏற்படுத்திய பண்டிற் காக எங்கள் சபையில் ஒரு நாடகம் நடத்தி, அதன் வரும்படியை அந்த பண்டிற்குக் கொடுக்கவேண்டுமென்று தீர்மானித்தோம்.

அதற்காக ஒரு தெலுங்கு நாடகம் நடத்த வேண்டுமென்றும் அதன் பொருட்டு பல்லாரியிலிருந்து எனது நண்பராகிய ராகவாசார்லு அவர்களை வரவழைக்க வேண்டுமென்றும் ஏற்பாடு செய்தோம். அந் நாடகத்தைச் சென்னை கவர்னர் அவர்கள் ஆதரவிலும் முன்னிலையிலும் நடத்தவேண்டுமென்று அவரைக் கேட்க அவரும் இசைந்தார். இவ்வாறு எல்லா ஏற்பாடுகளும் செய்தான பிறகு, திடீரென்று எட்டு பத்து தினங்களுக்கு முன்பாக பல்லாரியிலிருந்து ராகவாசார்லு அவர்கள் தான் அந்த நவம்பர் மாதம் 23-ஆம் தேதி சென்னைக்கு வந்து நாடகமாட ஏதோ அசந்தர்ப்பத்தினால் முடியாதென்று தெரிவித்தார். அந்த சமாசாரத்தைக் கேட்டவுடன் எங்கள் சபையின் அங்கத்தினர் மிகவும் மனங்கலங்கினர்; அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை யென்றே நான் சொல்லவேண்டும். ராகவாசார்லுவின் மீது நான் குற்றங் கூறவில்லை. ஏதோ மிகுந்த அசந்தர்ப்பமாயிருந்தபடியால் தான் வருவதற்கில்லையென்று தெரிவித்திருக்கிறார்; ஆயினும் அவர் ஒருவர் வர முடியாதபடியால், நம்முடைய சபை ஏற்றுக்கொண்ட தர்ம கைங்கர்யத்தையே கைவிடவேண்டியிருக்கிறதல்லவா? என்று துக்கித்தேன். எனதாருயிர் நண்பர் உயிருடனிருந்தால், மறுநாளே வேண்டினும் ஏதாவது தமிழ் நாடகம் ஆடியிருக்கக் கூடுமல்லவா என்று வருத்தப்பட்டேன். "கிட்டாதாயின் வெட்டென மற" எனும் ஔவையாரின் வாக்கியம் ஞாபகம் வர, போனது போகட்டும், இப்பொழுது நமது சபையைக் கரையேற்றுவதெப்படி என்று பலவாறு யோசித்து ஒரு வழியும் காணாதவனாய்க் கடைசியில் ஈசனைப் பிரார்த்தித்து, நீர் விட்டவழியாகிறது, என்று உறங்கினேன். காலையில் எழுந்தவுடன், எனதாருயிர் நண்பர் போனவுடன், வேறொருவருடனும் நாடகமேடையில் நான் நடிப்பதில்லை என்ற தீர்மானத்தினின்றும், மாறித்தான் ஆகவேண்டும்; இவ்வாறு நாம் செய்வது என் சுய நன்மையைக் கருதிச் செய்ய வில்லை; சபையின் பொது நன்மைக்காகத்தானே செய்கிறோம்; எனதுயிர் நண்பர், தானிருக்குமிடத்திலிருந்து இதைத் தவறாக எண்ணமாட்டார், என்று என் மனதில் தோன்றியது; உடனே இது தான் ஜகதீசன் நமக்குக் காட்டிய வழி என்று உறுதி

யாய் நம்பினவனாய், அன்று சாயங்காலம் எங்கள் சபையின் நிர்வாகச் சபைக் கூட்டத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். அக்கூட்டத்தில் ராகவாசார்லு அவர்கள் வரமுடியாதென்று தெரிவித்த விஷயத்தைக் காரியதரிசிகள் தெரிவிக்க, அப்படியாயின் வேறு தக்க நாடகம் நடிக்க நம்மால் ஏலாதென்று 23-ம் தேதி நாடகத்தை நிறுத்தத்தான் வேண்டுமென்று தீர்மானிக்க ஆரம்பித்தார்கள்; அதன் பேரில் என் நாருமுற காலையில் நான் செய்த தீர்மானத்தைத் தெரிவித்தேன். அதன்பேரில் அங்கிருந்த எனது நண்பர்களெல்லாம் மிகவும் சந்தோஷப்பட்டனரென்றே நான் உண்மையை எழுத வேண்டியவனாயிருக்கிறேன். அதன்பேரில் தமிழில் என்ன நாடகம் ஆடலாம் என்கிற பேச்சு வந்தவுடன், நமக்குப் பணம் அதிகமாய் வருகிற நாடகமாயிருக்கவேண்டும், அன்றியும் கவர்னர் வரப்போகிறபடியால் அவர் எளிதில் அறியக்கூடிய நாடகமாயுமிருக்க வேண்டும், என்று கூறி ஷேக்ஸ்பியர் மகா நாடகக் கவியின் பிரசித்தி பெற்ற நாடகமாகிய "ஹாம்லெட்" என்னும் நாடகத்தின் தமிழ் மொழி பெயர்ப்பாகிய "அமலாதித்யன்" என்பதை நடத்தலாமென்று தெரிவித்தேன். அதை எனது நண்பர்கள் குதூஹலத்துடன் ஒப்புக்கொண்டு, "அது சரிதான். இந்த நாடகத்தில் யார் அபலைவேஷம் போட்டுக்கொள்வது?" என்று கேட்டனர். இந்த அபலை வேஷத்தில் எனதுயிர் நண்பர் மிகவும் சிறந்த பெயர் பெற்றிருந்ததைப்பற்றி முன்பே நான் இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். ஆகவே காலையில் நான் இந் நாடகத்தை ஆடவேண்டுமென்கிற தீர்மானத்திற்கு வந்தவுடன் இதைப்பற்றி யோசித்து வைத்திருந்தேன். எங்கள் சபையில் ஸ்திரீவேடம் தரிக்கும் ஒவ்வொரு ஆக்டரைப் பற்றியும் யோசித்துப் பார்த்து, இக்கஷ்டமான பாத்திரத்தை எடுத்துக்கொள்ளத் தக்கவர்கள் யார் என்று ஆலோசித்து, கே. நாகரத்தினம் ஐயர் தான் இருப்பவர்களுக்குள் இதற்கு ஏற்றவர் என்கிற தீர்மானத்திற்கு வந்திருந்தேன். இவர் இதுவரையில் எங்கள் சபையில் ஸ்திரீவேடம் பூண்டு நடித்தபொழுது, எல்லாப் புதிய ஆக்டர்களையும் கவனிப்பதுபோல் இவரையும் கவனித்திருந்தேன், ஸ்திரீ வேஷத்திற்குத் தக்க மிகுந்த ரூபலாவண்ய முடையவர், சங்கீதத்

திலும் நல்ல பயிற்சியுடையவர், ராகமும் தாளமும் தவறாதபடி மன முருகப்பாடுவார்; ஆக்டு செய்வதில் மாத்திரம் கொஞ்சம் போதாம லிருந்தது அச்சமயம்; அன்றியும் உரக்கப் பேசமாட்டார்; கடைசி யிற் கண்ட இவ்விரண்டு குற்றங்களையும் நாம் சரிப்படுத்தி விடலா மென்கிற முடிவுக்கு வந்தேன். ஆகவே நிர்வாக சபை நண்பர்கள் யாருக்கு அபலை வேஷம் கொடுக்கப்போகிறாய் என்று என்னைக் கேட்டபோது 'கே. நாகரத்தினம் ஐயருக்குக் கொடுக்கலா மென்றி ருக்கிறேன், அவர் ஒப்புக்கொண்டால்' என்று தெரிவித்தேன். அதன்பேரில் அப்பொழுது எங்கள் நிர்வாக சபையில் ஒரு அங்கத் தினராக இருந்த அவர் 'அந்தப் பாத்திரத்தை எப்படி ஆக்டு செய் வது என்று நீங்கள் சொல்லிக் கொடுப்பதானால் எனக்கு ஆட்சே பனை யில்லை' யென்று ஒப்புக்கொண்டார். அதன்பேரில் எங்கள் நிர் வாக சபையார், 23-ஆம் தேதி, அந்த நாடகத்தைப் போடவேண்டு மென்று தீர்மானித்து, கவர்னர் அவர்களுக்கும் தெரிவித்து எல்லா ஏற்பாடுகளும் செய்தனர். அந்நாடகத்தில் மற்ற ஆக்டர்களெல் லாம் பழய ஆக்டர்கள். அவர்களுக்கு நான் புதிதாய் ஒன்றும் சொல்லிக்கொடுக்கவேண்டியதில்லை யென்று தீர்மானித்து இடை யிலிருந்த நான்கைந்து நாட்களும், கே. நாகரத்தினம் ஐயருக்கு அந்த அபலை வேடமாட ஒத்திகை செய்து வைத்தேன். முதலில் இதை, ரங்கவடிவேலுவைப்போல் அவ்வளவு விமரிசையாய் ஆக்டு செய்வாரோ என்னவோ என்று எனக்குச் சந்தேகமிருந்தபோதிலும், இரண்டு மூன்று ஒத்திகைகளுக்குப் பிறகு, சுமாராக நடிப்பார் என்கிற தீர்மானத்திற்கு வந்தேன். ஆனால் 23-ஆம் தேதி இந்த நாடகமானது மேடையின் பேரில் நடிக்கப்பட்டபொழுது அதிக விமரிசையாய் நடித்து என்னையே ஆச்சர்யப்படும்படிச் செய்தார் என்று நான் கூறவேண்டும். கவர்னர் அவர்கள் உட்பட வந்திருந்த வர்களெல்லாம், இவர் அபலையாக, பயித்தியக்காரிக் காட்சியில் நடித்ததை மிகவும் மெச்சினர். நான் சொல்லிக் கொடுத்ததை விட மேலாகவும், ரங்கவடிவேலுவைவிட அதிக விமரிசையாகவும் இக்காட்சியில் நடித்தார். இதற்குமுன் எனதுயிர் நண்பர் இந்த அபலை வேடம் தரித்துப் பன்முறை நடித்ததைப் பார்த்திருந்த பல நண்பர்கள், இந்த வேடத்தில் ரங்கவடிவேலுவை விட நாகரத்

தினம் மிகவும் நன்முக நடிக்கிறார் என்று பன்முறைக் கூறக்கேட் டிருக்கிறேன். என்னுடைய அபிப்பிராயமும் அதுவே. என்னு டன் ரங்கவடிவேலு இருபத்தெட்டு வருடங்களாக நடித்த வேடங் களிலெல்லாம், நாகரத்தினமய்யர் இந்த அபலை வேடத்தில் அவரை விட மேலாக நடித்திருக்கிறார் என்று கூறுவது மிகையாகாது. அவர் இதற்குப் பிறகு இந்த எட்டு வருடங்களாக, ரங்கவடிவேலு நடித்த நாடக பாத்திரங்களுக்குள், பத்துப் பன்னிரண்டு, என்னுடன் ஆக்டு செய்திருக்கிறார் இது வரையில்.

இந்த அமலாதித்யன் நாடக முடிவில் மாட்சிமை தங்கிய சென்னை கவர்னர் அவர்கள் நாடகமேடைக்குள் வந்து நாகரத் தினம் ஐயரையும் என்னையும் மிகவும் நன்முக நடித்ததற்காக சற்று புகழ்ந்துகொண்டாடினார். அவர் போன பிறகு, எங்கள் சபை பிரசிடென்டாகிய சேஷகிரி ஐயர் அவர்கள் 'சம்பந்தம்! அம்மட்டும் இந்த நாடகத்தை சரியாக ஆடி முடித்தாயே! சந்தோஷம். எங்கு இடையில், ரங்கவடிவேலுவை நினைத்துக் கொண்டு, உன் பாகத் தைச் சரியாக ஆடாது விடுகிறாயோ என்று பயந்து கொண்டே இருந்தேன்.' என்று தெரிவித்தார்.

மேற்சொன்ன அமலாதித்ய நாடகத்தின் செலவு போக, ரூபாய் 300, அதிவிருஷ்டி நஷ்ட பண்டிற்கு அனுப்பினோம். இந் நாடகம் ஆடின மறுமாசம் எங்கள் சபையின் வழக்கப்படி டிசம்பர் மாதத்தில் பத்துப் பதினைந்து நாடகங்கள் ஆடவேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டது.

அந் நாடகங்களுக்குள் மூன்று நாடகங்களில் நான் முக்கிய மான பாத்திரங்களை எடுத்துக் கொள்ளத் தீர்மானித்தேன்; அதா வது, ரத்னாவளியிலும், லீலாவதி-சுலோசனாவிலும், மனோகரனிலும். இந்நாடகங்களில் என்னுடன் நடிக்கவேண்டிய முக்கிய ஸ்திரீ பாகங்களை அச்சமயம் எங்கள் சபையில் ஸ்திரீ வேடங்களில் நன் றாய் நடிக்க வல்லமை வாய்ந்திருந்த, மூன்று முக்கிய ஆக்டர்களுக் குக் கொடுத்தேன். அதாவது ரத்னாவளியில் வாசவதத்தை வேடத்தை எனது நண்பர் ஈ. கிருஷ்ண ஐயர் பி. ஏ., பி. எல்.

வுக்கும், விஜயாள் வேடத்தை சாமிநாத ஐயருக்கும், சுலோசனை வேடத்தை கே. நாகரத்தின ஐயருக்கும்; இவ்வாறு நான் பகிர்ந்து கொடுத்தற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. இனி நாடக மேடையில் முக்கியமான பாத்திரங்களைப் பூணுவதில்லை என்கிற தீர்மானத்தினின்றும், குரங்கானது கிருத்திகை விரதம் அனுஷ்டித் ததுபோல், கொஞ்சம் கொஞ்சமாக மாறி மறுபடியும் ஆடும்படியாக ஆய்விட்டது ; இவர்கள் மூவரில் யார் என் மனதிற்குத் திருப்திகர மாய் மேடையின் மீது நடிக்கிறார்கள் எனக் கண்டறிந்து, அவர் களுடனேயே இனி நடிக்க வேண்டும், என்பதேயாம். இப்பரீட்சை யில் தேறினவர், இதுமுதல் தற்காலம் வரை என்னுடன் முக்கிய ஸ்திரீ வேடம் பூண்டு நடித்துவரும் எனது பிரிய நண்பர் கே. நாக ரத்தினம் ஐயரே. இவர் சுலோசனையாக நடித்தது மிகவும் நன்றா யிருந்ததெனச் சபையோரெல்லாம் புகழ்ந்தனர். எனக்கும் அப் படித்தானிருந்ததெனத் தோன்றியது ; மற்ற இருவரும் நன்றாய் நடிக்கவில்லை என்று நான் சொல்லவில்லை ; ஆயினும் இவர் நடித் தது மற்றிருவர் நடித்ததைவிட நன்றாயிருந்ததெனச் சொல்ல வேண்டியவனாயிருக்கிறேன்.

இவ்வருடம் "நமது நாடகங்களை அபிவிர்த்தி செய்வது எப் படி" என்கிற விஷயத்தைப் பற்றி எங்கள் சபையில் நான் ஒரு உபன்யாசம் செய்தேன். அச்சமயம் எனது பால்ய நண்பராகிய வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் அக்கிராசனம் வகித்தார்.



# 26-ஆவது அத்யாயம்



இனி 1925-ஆம் வருஷத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி எழுது கிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபையின் வைஸ்-பிரஸிடெண்டுகளில் ஒருவராயிருந்த சி. பி. ராமஸ்வாமி ஐயருக்கு நைட் பட்டம் வந் ததற்காக, ஒரு விருந்து கொடுத்தோம்.

பிப்ரவரி மாதம் 20-ஆம் தேதியிலும், ஏப்ரல் மாதம் 26-ஆம்தேதியிலும், சபையின் அங்கத்தினரைக் கொண்டே இரண்டு சங்கீதக் கச்சேரிகள் ஏற்பாடு செய்து பார்த்தோம். அவை அத்தனை நன்றாக இல்லை என்பது என் எண்ணம். சபையோர்களுக்கு இது அவ்வளவாக ருசிக்காதபடியால் இவ் வழக்கத்தை விட்டோம்.

"தமிழ் நாடகமும் திருக்குறளும்" என்ற விஷயத்தைப் பற்றி தமிழ் வித்துவான் எஸ். குப்புசாமி முதலியாரைக் கொண்டு ஒரு உபன்னியாசம் செய்வித்தோம். இத்தகைய உபன்யாசங்கள் அங்கத்தினர் மனதை அவ்வளவாக கவரவில்லை என்பது என் தீர்மானம்.

இவ்வருஷம் சபாபதி மூன்றும் பாகம் அல்லது "ஒரு ஒத்திகை" என்னும் சிறு நாடகத்தை, கோர்ட்டு விடுமுறை காலத்தில் எழுதி முடித்தேன். இச்சிறு நாடகத்தில், எனது நண்பர்களுக்கு நகைப்பை உண்டாக்கத் தக்க ஒரு விஷயமுண்டு; அதாவது இதன் நாடக பாத்திரங்களுக்குள், என்னையே ஒரு நாடக பாத்திரமாகச் சேர்த்து எழுதியுள்ளேன். இந்நூலை வாசித்திருக்கும் எனது நண்பர்கள், அந்நாடக பாத்திரங்களின் குறிப்பில் "சம்பந்தமுதலியார்-ஓர் நாடகாசிரியர்" என்பதைப் பார்த்து நகைத்திருக்கலாம்! இது இவ்வருஷத்திய தசராவின் முதல் நாளில் நடிக்கப்பட்ட பொழுது, நான் சாதாரணமாக அணியும் தலை குட்டை, கோட்டு முதலியன அணிவித்து, ஒரு ஆக்டரை எனது நண்பர் வெங்கடாசல ஐயர், என்னைப்போ லிருக்கும்படி முகத்தில் வர்ணம் முதலியன தீட்டி, மேடையின்மீது ஏற்றுவித்தார். இதைக்கண்டு சபையோர்களெல்லாம் மிகவும் சிரித்தபொழுது, அவர்களுள் ஒருவனாக உட்கார்ந்து நானும் சிரித்தேன். ஒரு நாடகாசிரியர் தன்னையே ஒரு நாடக பாத்திரமாக வைத்து ஒரு நாடக மெழுதியதாக இதுவரையில் நான் கேள்வி பட்டதில்லை. அப்படி யின்றி இதை வாசிக்கும் நண்பர்கள், அப்படிப்பட்ட உதாரணத்தை எனக்கெடுத்துக் கூறுவார்களாயின் என் அபிப்பிராயத்தைத் திருத்திக் கொள்ளத் தடை யில்லை.

இவ்வருஷம் நடந்த மற்றொரு நிகழ்ச்சி என்னவெனில் ஸ்ரீ கிருஷ்ண விநோத சபையின் தலைவராகிய கன்னையா, எங்கள்

சபையின் ஆதரவின் கீழ், ஒரு நாள் தனது "தசாவதாரம்" என்னும் நாடகத்தை நடத்தினர். இந் நாடகத்தைப் பற்றியும், கன்னையாவைப் பற்றியும், நாடக கம்பெனிகளைப் பற்றி என்னுடைய அபிப்பிராயத்தை எழுதும் பொழுது, எழுதலாமென்றிருக்கிறேன்.

இவ்வருட ஆரம்பத்தில் நடந்த மற்றொரு நிகழ்ச்சியைப் பற்றி எழுத மறந்தேன்; அதாவது இவ் வருஷம் ஜனவரி மாதம் 31-ஆம் தேதி, பேபியர் பார்க்கில், எங்கள் நாடக சாலையும் இருப்பிடமும் கட்ட அஸ்திவாரக்கல் எங்கள் சபையின் பிரசிடெண்டாகிய டி. வி. சேஷகிரி ஐயர் அவர்களால் போடப் பட்டதேயாம். இந்த வைபவமானது எல்லாம் மங்களமாய் முடிந்த போதிலும், என் மனதில் மாத்திரம் என்னையு மறியாதபடி ஏதோ குறையாயிருந்தது. அக்கல்லானது சரியாக அமைக்கப் பட்டபிறகு, எல்லோரும் தங்களிருப்பிடம் போகப் புறப்பட்ட பொழுது, நானும் அதைப் பார்த்து விட்டுத் திரும்புங்கால், "இக்கட்டடம் முடிந்த பிறகு எத்தனை வருடங்களாவது பொறுத்து ஒரு நாள், 'நெடு நிலை மாடம் கால்சாய்ந்துற்றுக் கழுதை மேய்பாழாயினுமாகும்' என்கிற வாக்கியப்படி, இது பாழாகி, இக்கல் பெயர்க்கப்பட்டு, அதனுள் நாம் இன்று வைத்த நவரத்தினங்கள், பொன் முதலிய நாணயங்கள் யார் கண்ணுக்காவது புலப்படுமல்லவா!" என்கிற யோசனையானது எக்காரணத்தினாலோ பிறந்தது அச்சமயம். சில வருடங்களுக்குள் அதைப் பெயர்த்து எடுத்துப் பார்க்கும் அபாக்கியம், எனக்கே கிட்டுமென நான் கனவிலும் நினைத்தவனன்று! இது நடந்த மூன்று வருடங்களுக்கெல்லாம், பேபியர் பார்க் நிலம் கட்டடத்திற்குத் தக்க தன்று என்று நாங்கள் கண்டறிந்து, கவர்ன்மெண்டாருக்கு அதை மறுபடியும் திருப்பிக் கொடுக்க நேரிட்ட பொழுது, இரண்டொரு கொல்லர்களுடன் போய் அக்கல்லைப் பெயர்த்து எடுத்து, அதனுள் வைத்த பொருள்களையும், காகிதங்கள் முதலியவற்றையும், வாடிய மனத்துடன் எங்கள் சபைக்குக் கொண்டுவந்து சேர்த்தேன்! அப்பொழுது ஸ்காட்லண்டு தேசத்துக் கவியொருவர் எழுதிய இரண்டடிகள் என் நினைவிற்கு வந்தன. அதை இங்கு தமிழில் ஒருவாறு மொழி பெயர்த்து எழுதுகிறேன்.

"மனிதர்களும் மற்றும் அற்பப் பிராணிகளும் மண் மீது செய்யும் பிரயத்தனங்கள் எத்தனை முறை மாறி அழிகின்றன!" என்பதே யாம்.



# 27-வது அத்யாயம்



இதற்கு மறு வருடமாகிய 1926-ம் ஆண்டில் எனது "புத்தாவதாரம்" எனும் நாடகமானது எங்கள் சபையில் நடிக்கப்பட்டது. இது நான் எழுதியவற்றுள்ளும் நடித்தவற்றுள்ளும் ஒரு முக்கியமான நாடகம் என்று நான் மதிக்கிறபடியால் இதைப்பற்றிச் சற்று விரிவாக எழுதவேண்டியவனாயிருக்கிறேன். 1908-ம் ஆண்டில் நான் லங்கைக்குப் போனது முதல், புத்தருடைய ஜீவிய சரிதை என் மனதைக் கவர்ந்தது. அம்முறை அவர் பிறந்த தினமாகிய விசாக பௌர்ணமி அன்று, அவர் பிறந்த தினக்கொண்டாட்டத்தைக் கொழும்பிலுள்ள பௌத்த மதத்தினரெல்லாம் நடத்தியது என் மனதை மிகவும் கவர்ந்தது. அதன் பிறகு அம்மஹானுடைய சரித்திரத்தை நாடகமாக எழுதவேண்டுமென்று தீர்மானித்து, அவரது சரித்திர சம்பந்தமாக, எனக்குக் கிடைக்கக்கூடிய புஸ்தகங்களை யெல்லாம் படித்து வந்தேன். அதன் பிறகு மூன்று முறை லங்கைக்கு எங்கள் சபை போன போதெல்லாம் புத்த மதஸ்தர்களுடன் பேசி அநேக விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். அங்குள்ள புத்தாலயங்களை யெல்லாம் தரிசித்து வந்தேன். பிறகே அக் கதையை நாடகரூபமாக எழுத ஆரம்பித்தேன். அங்ஙனம் நாடக ரூபமாக எழுதியதில் எனக்கு நேரிட்ட கஷ்டமென்னவென்றால், அவரது சரித்திரத்தில் எந்தப் பாகங்களைச் சுருக்கி, நான்கு மணி நேரத்திற்குள் ஆடத்தக்க நாடகமாய் எழுதுவது என்பதேயாம். அதன் மீது அவரது சரித்திரத்தில் முக்கியமான அம்சங்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு அவைகளை நாடகம் பார்க்கும் ஜனங்கள் ரமிக்கத் தக்க வழியில் காட்சிகளாகப் பிரித்து என் சிற்றறிவிற்குத் தோன்றியபடி ஒருவாறு 1918-ம்

வருஷத்தில் எழுதி முடித்தேன். நான் எழுதிய நாடகங்களுக்கு ளெல்லாம் அமலாதித்தியனுக்குப் பிறகு, இந்த புத்த அவதாரம் எனும் நாடகம் தான் எனக்கு மிகவும் சிரமம் கொடுத்தது. ஆயி னும் அந்தச் 'சிரமத்தின் பலனைப்பெற்றேன் என்றே நான் கூற வேண்டும். இதனால் நான் அடைந்த முக்கியமான பலன் என்ன வென்றால், அப்புஸ்தகத்தின் முகவுரையில், ஆங்கிலத்தில் நான் எழுதியபடி, இப்பெரியாரது சரித்திரத்தில் பல விஷயங்களை ஆராய்ந்தறிந்ததினால், அவை என் குணத்தையே மாற்றின என்று நான் கூறவேண்டும்; அதற்கு முன் என்னிடம் பரவியிருந்த, கோபம், சுயநன்மையை நாடுந்தன்மை, பொறாமை, பேராசை முத லிய பல துர்க்குணங்களைப் பெரிதும் போக்கவழி கற்றேன். மேற் சொன்ன துர்க்குணங்கள் முதலாயின முற்றிலும் என்னை விட் டகன்றன என்று இங்கெழுத எனக்கு வல்லமையில்லை; ஆயினும் அவைகளெல்லாம் பெரும்பாலும் நீங்கின என்று உறுதியாய்க் கூறு வேன். இதைப்பற்றி இதை வாசிக்கும் எனது நண்பர்கள் யாருக் காவது, சந்தேகமிருக்குமாயின் அவர்களை இது செய்யும்படி வேண் டுவேன். அதாவது "ஆசியாக் கண்டத்தின் ஜோதி" என்று ஸர் எட்வின் ஆர்னல்ட் என்பவர் அவரைப்பற்றிக் கூறிய சரித்திரத்தை முற்றிலும் படித்து விட்டுப் பிறகு, அதனால் அவர்களுடைய மன மானது முன்பில்லாத, தூய்மையையும் சாந்தியையும் கொஞ்சமா வது பெற்றதா இல்லையா என்று எனக்குச் சொல்லட்டும் என்பதே யாம்.

மேற்கண்ட வாக்கியத்தை எழுதுங்கால் புத்தரைப்பற்றி ஒரு நினைவு எனக்கு ஞாபகம் வருகிறது. ஸர் எட்வின் ஆர்னல்ட் என் பவர், மேற்சொன்னபடி அவர் சரித்திரத்தை "ஆசியாக் கண்டத்து ஜோதி" என்று பெயரிட்டு அச்சிட்டபொழுது, சில இதர மதஸ் தர்கள், "ஆசியாக் கண்டத்தில், அவரைவிடப் பெரிய மஹான்கள் உதிக்கவில்லையா, இவரை மாத்திரம் ஆசியாக்கண்டத்து ஜோதி என்று புகழ்ந்து கூறியது சரியல்ல" என்று கடிந்துகொண்டார் களாம். இவ்விஷயத்தைப் பற்றி என் அபிப்பிராயத்தை வெளி யிடும் வண்ணம் இப்புத்தாவதார நாடகத்திற்கு, ஆங்கிலத்தில் "லார்ட் புத்தா, ஆர் லைட் ஆப் தி யூனிவர்ஸ்" என்று பெயரிட்

டேன். இம் மஹானுடைய பெருமையைச் சில வாக்கியங்களில் எழுத விரும்புகிறேன். இவரது கோட்பாடுகளை, உலகில் ஐந்தில் ஒரு பங்கு ஜனங்கள் இப்பொழுதும் பின்பற்றி வருகின்றனர்; இவரது ஜனன பூமியாகிய இந்தியாவில் இவரது மதம் நிலைக்காவிட்டாலும் இத் தேசத்தின் முக்கிய மதமாகிய ஹிந்து மதத்தையே மிகவும் மாறச் செய்திருக்கிறது. "அஹிம்சையே பரம தர்மம்" என்பதைக் கடைப்பிடிக்கச் செய்து இவர்காலத்துக்கு முன் சாதாரணமாக மாம்சபட்சணம் செய்து கொண்டிருந்த பிராம்மணர்களையும் அதை விடும்படிச் செய்தது. இவரது அவதாரத்தை, மஹாவிஷ்ணுவின் அவதாரங்களிலொன்றாகச் சேர்த்துக்கொள்ளும்படிச் செய்தது. தற்காலம் மஹாத்மா காந்தி அவர்கள் மேற்பூண்டு ஒழுகும் அஹிம்சா தர்மமானது புத்தரிடமிருந்து வந்ததேயாம் என்பதற்குக் கொஞ்சமேனும் சந்தேகமில்லை. இதனுண்மையை அறிய வேண்டின் புத்தரது நூற்றுக்கணக்கான ஜாதகக் கதைகளைப் படித்தால் ஸ்பஷ்டமாகும். "நீ அச்சிட்டிருக்கும் புஸ்தகங்களுள், எதை வாங்கச் சொல்லுகிறாய்?" என்று என்னை யாராவது கேட்பார்களாயின், "இந்த புத்தாவதாரத்தை வாங்குங்கள்" என்பேன்.

இப் புத்தகத்தை நான் எழுதியபொழுது காட்சி காட்சியாக அப்போதைக்கப்போது வாசித்து வந்த எனதாருயிர் நண்பராகிய சி. ரங்கவடிவேலு யாது காரணம் பற்றியோ, அதில் தான் நடிக்க மனமில்லாததாக எனக்குத் தெரிவித்தார். நான் என்ன சொல்லியும் கேட்கவில்லை. அதன்பேரில் அச்சிடுமுன் நடிக்கவேண்டும் என்னும் என் வழக்கத்தையும் ஆசையையும் விட்டேன். அதன் பிறகு நான் அதை 1918-ம் வருடம் அச்சிட்டேன். மேற் கூறியபடி, அவர் உயிருடன் இருந்தவரையில் அவர் மனங் கோணாதபடி அதில் நடிக்கும்படி நான் நிர்ப்பந்திக்கவில்லை. பிறகு 1925-ல் இதைப்பற்றி எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயருடன் பேசிக்கொண்டிருந்த பொழுது அவர் தான் யசோதரையாக நடிக்க இஷ்டப்படுவதாகக் கூறினார். அதன்பேரில் எங்கள் நிர்வாக சபையில் இதை ஆடலாமெனப் பிரேரேபித்தேன்; அச்சபையார் அப்படியே ஆடவேண்டுமெனத் தீர்மானித்தார்கள்; ஒன்றிரண்டு பெயர்கள் மாத்திரம் இந்நாடகம் மதவிஷமாயிருக்கிறதே யொழிய, நாடக

மேடையில் ஜனங்களை ரமிக்கச் செய்யுமா என்று சந்தேகப்பட்ட னர்; அவர்களுக்கு, "ஆடிப்பார்க்கலாம், பிறகு நீங்கள் கூறுவது சரியோ நான் கூறுவது சரியோ, என்று தீர்மானிக்கலாம்" என்று பதில் உரைத்தேன். பிறகு 1925-ம் வருஷம் ஒத்திகைகள் ஆரம் பித்து, டிசம்பர் விடுமுறை தவிர, சற்றேறக்குறைய ஆறுமாதங்கள் இடைவிடாது நடத்தினேன். என்னுடைய நண்பர்களாகிய ஆக் டர்களை நான் மிகவும் கசக்கியது, அமலாதித்யன் நாடகத்திற்குப் பிறகு இதில் தான். இதில் முக்கியமான கஷ்டம் ஒன்று என்ன வென்றால் யசோதரை வேடம் பூண்ட நாகரத்தினத்திற்கு நர்த்த னம் செய்யக் கற்பிக்கவேண்டி யிருந்தது. இன்னும் எட்டு ஸ்திரீ வேஷதாரிகளுக்கு, ஒன்றாய்ச் சேர்த்து, சித்தார்த்தன் (புத்தர்) முன்பாக நர்த்தனம் செய்யக் கற்பிக்கவேண்டியிருந்தது. இதற்காக அக்கலையில் வல்லவனாகிய ஒரு ஆசிரியனை கொண்டு, பலநாள் நர்த் தனம் செய்யக் கற்பித்தேன். மூன்று மாதங்கள் இடைவிடாது ஒத்திகை செய்தானவுடன், நிர்வாக சபையார் 1925-ம் வருஷம் டிசம்பர் மாதத்திலேயே இதை ஆடவேண்டுமென்று தீர்மானித் தனர். என் மனத்திற்குத் திருப்திகரமாயில்லை, இப்பொழுது வேண்டாம் என்று ஆட்சேபித்து அதை நிறுத்தி வைத்தேன். அச்சமயம் எனது நண்பர் திவான் பஹதூர் எஸ். பவாநந்தம் பிள்ளை அவர்கள் ஒரு முறை எனக்குக் கூறிய பழமொழி எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. அது "அறை குறையான வேலையை ஆசா னுக்குங் காட்டலாகாது" என்பதேயாம்.

இச் சந்தர்ப்பத்தில்தான் நாகரத்தினம் ஐயர் நர்த்தனம் செய்யக் கற்றுக்கொண்டார்; ரங்கவடிவேலுவுக்குப் பிறகு இவர் தான் எங்கள் சபையில் நர்த்தனம் செய்யக் கற்றுக்கொண்டது. இவர் இக்கலையைக் கற்க கொஞ்ச காலம் பிடித்தது; இவர் இதில் பூரணத் தேர்ச்சியடையும் வரையில், எனக்கு இந்நாடகத்தை ஆடு வதற்கிஷ்டமில்லை. புதிய நாடகங்களைச் சீக்கிரம் ஆடவேண்டு மென்று அவசரப்பட்டு ஒத்திகைகள் எல்லாம் நன்றாய் திருப்திகர மாக இல்லாத சமயத்தில் அவைகளை ஆடி, சிலர் அவைகளைக் கெடுத் திருக்கின்றனர். ஒரு புதிய நாடகமானது முதன் முறை ஆடப்படும் பொழுது ஜனங்களுடைய மனதை ரமிக்கச் செய்யா விட்டால்

பிறகு அதைக்கொண்டு அவ்வாறு செய்வது மிகவும் கடினமாகும். இதை நாடகங்களை நடத்தும் கண்டக்டர்களும், புதிய நாடகங்களை எழுதும் நாடகக்கர்த்தாக்களும், கவனிப்பார்களாயின் நலமாயிருக்குமென எனக்குத் தோன்றுகிறது.

இந் நாடகத்திற்காக, நாங்கள் எடுத்துக்கொள்ள வேண்டிவந்த இன்னொரு கஷ்டம் என்னவென்றால், இது சரித்திர சம்பந்தமான நாடகமாகையால், அக் காலத்திற்குத் தக்கபடி புதிய உடைகள் காட்சிகள் முதலியன சித்தம் செய்யவேண்டிவந்தது. கௌதம புத்தர் இன்றைக்கு சுமார் 2500 வருடங்களுக்குமுன் உயிர் வாழ்ந்ததாக சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் பெரும்பாலும் ஒப்புக்கொள்ளுகின்றனர். அக்காலத்தில் ஸ்திரீ புருஷர்கள் எப்படி உடை தரித்தனர், அரண்மனைகள் முதலிய கட்டடங்கள் எப்படியிருந்தன; அக்காலத்து ஜனங்கள் உபயோகித்த பாத்திரங்கள், ஆயுதங்கள், ஆப்ரணங்கள் முதலியன எப்படியிருந்தன, இன்னும் இப்படிப்பட்ட அநேக விஷயங்களை ஆராய்ந்தறிந்து அதன்படி எல்லாவற்றையும் ஏற்பாடு செய்ய வேண்டி வந்தது. இதற்காகப் புஸ்தகங்களைக் கொண்டு நான் அறிந்தது போதாமல், சென்னை மியூஜியம் சென்று, அங்குள்ள அமராவதி சிற்பங்களையெல்லாம் பலநாள் சிரமப்பட்டுப் பரிசோதித்து வந்தேன் ; அன்றியும்: கன்னிமாரா புஸ்தகசாலையிலிருக்கும், அஜென்டா படங்களைப் பார்த்துப் பல விஷயங்களை அறிந்தேன்; அன்றியும் எங்கள் சபைக்கு அச்சமயம் படுதாக்களை எழுதி வந்த சித்திரம் வரைவோனை அழைத்துக்கொண்டுபோய், ஒவ்வொன்றுய்க் காட்டி, எனக்கு வேண்டிய திரைகள் முதலிய வற்றிற்கெல்லாம், ஸ்கெட்ச் (sketch) எடுத்துக்கொள்ளச் செய்தேன். பிறகே அவனைக்கொண்டு இந்நாடகத்திற்கு வேண்டிய திரைகள் முதலியனவெல்லாம் எழுதி வைத்தேன். அக்காலத்திற்கு ஏற்றபடி, ஆசனங்கள், ஆபரணங்கள், ஆலவட்டம் முதலிய சின்னங்கள், உடைகள், முதலியன வெல்லாம் புதியதாய்ச் சித்தம் செய்ய வேண்டியதாயிற்று, இதற்கெல்லாம் சில மாதங்கள் பிடித்ததுமன்றி, பணமும் அதிகமாய்ப் பிடித்தது. இதற்கெல்லாம் நிர்வாக சபையார் யாதொரு ஆட்சேபணையுமின்றிப்பொருள் கொடுத்தது என் பாக்கியமே.

சாதாரணமாகத் தமிழ் நாடகமேடையில் ஆநெக்ரோனிசம், (anachionism) அதாவது நாடக நிகழ்ச்சி காலத்திற்குப் பொருத்தமின்மை, அதிகம் என்பது அனைவரும் அறிந்தவிஷயமே. நானே இதைப்பற்றி இதற்கு முன்பாக எழுதியிருக்கிறேன், பாரதக்கதை நடிக்கும்பொழுது துர்யோதனன் உட்கார, 1896-ஆம் வருஷத்திய பென்ட்வுட் நாற்காலிகளை உபயோகிப்பதுபோன்ற ஆபாசங்களைக் கண்டித்து; எங்கள் சபையிலும் இதற்கு முன்பாகப் பல நாடகங்களில் இம்மாதிரியான ஆபாசங்கள் இல்லாமற்போகவில்லை; இனிமேலாவது இப்படிப்பட்ட ரசாபாசங்கள் கூடாதென்று தீர்மானித்து, இந்நாடகத்திற்காக மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டோம். சுத்தோதனராஜன் சிம்மாசனத்தில் உட்கார்ந்தபொழுது, தன் பாதங்களை வைத்துக் கொள்ள எப்படிப்பட்ட சார்மணைகள் அக்காலத்தில் உபயோக்கபட்டன என்பதைகூட ஆராய்ந்து, அப்படிப்பட்டதைச் செய்து வைத்தோம். சற்றேறக்குறைய மேற்சொன்ன ஆநெக்ரோனிசம் இல்லாமல் நடத்திய நாடகம் எங்கள் சபையில் இதுதான் முதலானது என்று கூறக்கூடும்.

இந் நாடகம் நடத்துவதில் இன்னொருகஷ்டம் எங்களுக்கு ஏற்பட்டது. கௌதமருடைய சிஷ்யர்களாகப் பலர் வரவேண்டியிருந்தது; அவர்களையெல்லாம் தலை மொட்டையடித்துக்கொள்ளச் சொல்ல முடியுமா? ஆகவே, தீர்க்காலோசனை செய்து, தலையில், ரோமம் அதிகமாக இல்லாதவர்களாகப் பார்த்து அவர்களுக்கெல்லாம், தலை மொட்டையாயிருந்தால் எப்படியிருக்குமோ அப்படித் தோன்றும் படியான தொப்பிகள் மாதிரிச செய்து போட்டு பத்துப்பன்னிரண்டு சிஷ்யர்களைத் தயார் செய்யவேண்டி வந்தது.

இந்நாடகத்தில் வேண்டிய பாட்டுகளுக்காக, கதை வடக்குப் பிரதேசத்தில் நடப்பதால், தக்க இந்துஸ்தானி வர்ண மெட்டுகளாகப் பிடித்து அம் மெட்டுகளில், காலஞ்சென்ற எனது நண்பராகிய ம. முருகேச முதலியாரைக் கொண்டு சாஹித்தியங்கள் செய்து கொடுத்தேன். அன்றியும் இப் பாட்டுகளெல்லாம் சந்தர்ப்பதிற்குத் தக்கபடி இருக்கின்றனவா என்று எனது

நண்பர்களாகிய வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், டபிள்யூ துரைசாமி ஐயங்கார் முதலியோரைக் கொண்டு பரீட்சிக்கச் செய்து, அவர்கள் கூறிய சில குறிப்புகளின்படிச் சில பாட்டுகளை மாற்றினேன்.

இந் நாடகத்திற்கென்றே திரைகள் முதலியெனவெல்லாம் காலத்திற்குத் தக்கபடிப் புதிதாகத் தயார் செய்ததை முன்பே தெரிவித்திருக்கிறேன். ஒரு நாள் விக்டோரியா ஹால் மேடையின் மீதே முழு ஒத்திகை வைத்துக்கொண்டு, அத்திரைகள் முதலியன வெல்லாம் சரியா யிருக்கின்றனவா என்று போட்டுப் பார்த்தோம். எங்களுக்கு தயார்செய்த புதிய உடைகளையும் அணிந்து பார்த்தோம். அன்றுதான் எங்களுக்கு ஒரு புது கஷ்டம் தோன்றியது! பௌத்த சன்யாசிகளுக்குத் துவர் (காவி) ஆடைகளை யெல்லாம் சித்தம் செய்தோம் தக்கபடி; ஆயினும் அவைகளை அணியும் விதம் எங்களுக்குத் தெரியவில்லை! அதன்பேரில், எனது நண்பராகிய பாலசுந்தர முதலியார் சிரமம் எடுத்துக்கொண்டு, ஒரு பௌத்த சன்யாசியிடம் போய் அதை எப்படி அணிவது என்று கற்றுக்கொண்டு வந்து மற்ற ஆக்டர்களுக்கெல்லாம் கற்பித்தார்! இந்நாடகத்திற்கு முன்பாக முழு ஒத்திகை வைத்துக் கொண்டிராவிட்டால், இக்குறையை நாடக தினம்தான் கண்டு பிடித்துத் திகைத் திருப்போம்! ஆகவே, ஒவ்வொரு புதிய நாடகத்திற்கும் டிரஸ் ரிஹர்சல் "உடுப்புடன் ஒத்திகை" பார்க்க வேண்டியது அதிக அவசியம் என்பது என் முடிவான தீர்மானம். எங்கள் சபையின் ஆரம்பத்தில் சில வருஷங்கள் இவ்வாறு செய்துவந்தோம். பிறகு சோம்பேறித் தனத்தினாலோ, அலலது கர்வத்தினாலோ இந்த வழக்கத்தைச் சில வருடங்கள் விட்டிருந்தோம். இதன் பிறகு கட்டாயமாய் அப்படிச் செய்துதான் தீர வேண்டுமென்று எங்கள் சபையின் பொதுக் கூட்டத்தில் ஒரு சட்டம் ஏற்படுத்திக் கொண்டோம்.

இனி இந்நாடகத்தை முதன் முறை ஆடிய கதையை எழுதுகிறேன்.

இதைப் பஹிரங்கமாக ஆடவேண்டுமென்று தீர்மானித்த பொழுது, எனது பாலிய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார்,

இவ்வளவு கஷ்டமெடுத்துக்கொண்டு சித்தம் செய்த நாடகத்தை, ஒரு வாரத்திற்குள் மூன்று நான்கு முறையாவது ஆடவேண்டும் என்று வற்புறுத்தினர்; அவர் இவ்வாறு கூறியபொழுது அது அவ்வளவு உசிதமாக எனக்குத் தோன்றவில்லை. நான் அதற்கு ஆட்சேபம் செய்தும் எங்கள் நிர்வாக சபையார், மூன்று முறை போடவேண்டும் என்று தீர்மானித்தார்கள். இதுதான் முதன் முறை எங்கள் சபையானது, மதரூஸ் டிராமாடிக் சொசைடியாரைப்போல் ஒரு நாடகத்தை எடுத்துக்கொண்டு ஒரு வாரத்திற்குள் அதை மூன்று நான்கு முறை ஆடத் தீர்மானித்தது. அங்ஙனமே இவ்வருடம், மூன்று முறை ஆடியபிறகு எனது நண்பர் உத்தேசித்ததே சரி, நான் அதற்கு ஆட்சேபித்தது தவறு என்று கண்டேன். அவருடைய அபிப்பிராயத்தினின்றும் மாறுபட்டு, பிறகு அவர் கூறியதே சரியென்று நான் கண்ட பல விஷயங்களில் இது ஒன்றும். இம்மாதிரி ஒரு நாடகத்தை எடுத்துக்கொண்டு, அதைப் பன்முறை ஆடுவதில் சில பெரும் நன்மைகளுண்டு. அவற்றைப் பிறகு குறிக்கிறேன்.

இந்த "புத்தாவதாரம்" முதன் முறை ஆடிய பொழுது மேன்மை தங்கிய சென்னை கவர்னர் அவர்கள் வரவேண்டு மென்று கேட்டுக் கொண்டோம். அவரும் அதற்கிசைந்தார். முதன் முறை ஆடிய பொழுது அறுபத்துநான்கோ அறுபத்தைந்தோ ஆக்டர்கள் மேடையின்பேரில் வரவேண்டி வந்தது. இத்தனை ஆக்டர்களுக்கும், வேஷம் தரித்தாக வேண்டுமே யென்று, அத்தனை ஆக்டர்களையும் காலையிலேயே விக்டோரியா பப்ளிக் ஹாலுக்கு வரும்படிச் செய்து, கடைசியாக மேடையின்மீது அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய விஷயங்களை யெல்லாம் சொல்லிக் கொடுத்து, பதினொரு மணிக்கெல்லாம் (என் செலவில்) அவர்களைப் போஜனம் செய்யச் சொல்லி உடனே வேஷம் பூண ஆரம்பம் செய்தேன். அவ்வளவு சீக்கிரம் ஆரம்பித்தும் வேஷங்களெல்லாம் சரியாக $5\frac{1}{2}$ மணிக்குத்தான் முடிந்தன. மேற்சொன்னபடி செய்திராது வழக்கம்போல் இரண்டு அல்லது மூன்று மணிக்கு ஆரம்பித்திருந்தால், நாடக ஆரம்பத்திற்கு ஏற்படுத்திய தவணை கடந்து இரண்டு மணிக்குப் பிறகே நாடகம் ஆரம்பித்திருப்போம்! கவர்னர்

அவர்களும் சரியாக 5½ மணிக்கெல்லாம் வர, உடனே மணிப்பிர காரம் ஆரம்பித்தோம்.

நாடகம் மிகவும் நன்று யிருந்ததென, கவர்னர் அவர்கள் உட்பட எல்லோரும் மெச்சினர். அதைப்பற்றி நான் இங்கு எழுதப் போகிறதில்லை. அதிலுள்ள குற்றங் குறைகளை மாத்திரம் எடுத்து எழுதுகிறேன். முதலில் ஐந்தரை மணிக்கு ஆரம்பித்த நாடகமானது பத்தரை மணிக்கு முடிந்தது! இது பெரும் தவறாகும். சாதாரணமாக ஒவ்வொரு புதிய நாடகத்தை நான் எடுத்துக்கொள்ளும் பொழுதும், கடைசி ஒத்திகைகளில், ஒவ்வொரு காட்சியும், இத்தனை நிமிஷம் பிடிக்கிறது என்று குறித்துக்கொண்டு போய், மொத்தத்தில் நாடகமானது இத்தனை மணி பிடிக்கும் என்று தீர் மானிப்பது வழக்கம். சில நாடகங்களை ஆக்டர்கள் வளர்த்தி விடுகிறார்களென்று, நான்குமணி நேரத்திற்குமேல் சாயங்கால ஆட்டங்கள் செல்லக் கூடாதென்று எங்கள் சபையில் ஒரு சட்டமும் ஏற் படுத்தினோம். இதைக் கடந்து இதற்குமேல் ஒரு மணி சாகவாசம் பிடித்தது இந்நாடகம். கவர்னர் அவர்கள், பொறுமையுடன், நான்கு மணி நேரம் அதாவது இரவு 9½ மணிவரையில் இருந்து பார்த்து கொண்டிருந்தார். அதற்கு மேல் இருப்பது கஷ்டமா யிருக்கிறதென நாடகத்தைப் பற்றி ஏதோ புகழ்ச்சியாக, எங்கள் சபையின் பிரசிடெண்டவர்களிடம் சொல்லிவிட்டு விடை பெற்றுப் போனார். அதற்குக் கொஞ்சம் முன்பாக எங்கள் சபையின் வைஸ் பிரசிடெண்டாகிய எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரிடம் வேடிக்கையாக "நாடகத்தின் முடிவைப் பார்ப்பதற்கு, நான் வீட்டிற்குப்போய் சாப்பிட்டுவிட்டு வரலாம் போலிருக்கிறதே!" என்று சொன்னாராம்! இவ்வளவு நேரம் இந் நாடகத்தை நீடிக்கச் செய்தது பெரும் தவறாகும். இரண்டாம் முறை இந் நாடகத்தை ஆடியபொழுது குறைக்க வேண்டிய பாகங்களை யெல்லாம் குறைத்து 4-மணி நேரத்திற்குள் முடியும்படிச் செய்தேன். முதன் முறை இந் நாடகம் அவ்வளவு நீடித்ததற்குக் காரணம் காட்சிக்கும் காட்சிக்கும் இடையில் இண்டர்வல் அதிகமானதே யாம். ஒவ்வொரு காட்சியும் இத்தனை நிமிஷம்தான் பிடிக்கும் என்று கணக்குப் போட்டவன், இந்த இண்டர்வல்களை கவனிக்க

மறந்தேன். இரண்டு மூன்று முறை உடனே ஆடியபடியால், முதன் முறை நேர்ந்த இக் குறையைத் தீர்த்துக் கொள்ள மிகவும் அனுகூலமாயிருந்தது.

இம்முறை இந் நாடகத்தை ஆடியதில் இன்னொரு முக்கிய குறை என்னவென்றால், காட்சிகளுக்கு எல்லாம் தக்கபடி திரைகள் முதலியன ஏற்படுத்தியும், ஒவ்வொரு காட்சிக்கும் இன்னின்னபடி வெளிச்சம் இருக்க வேண்டுமென்று நாங்கள் ஏற்பாடு செய்யாமற் போனதே. இதைக் கண்டுபிடித்து எனக்கு அறிவித்தவர், மதராஸ் டிராமாடிக் சொசைடியின் அங்கத்தினரும் எனது நண்பருமான மிஸ்டர் லெஸ்லி கோல்ஸ் என்பவரே. இவர் தனது சொசைடியிலிருந்து என் வேண்டுகோளின்படி எங்களுக்கு ஸ்டேஜ் லைட்களை உதவி யிருந்தார். அவரையும் அவரது மனைவியாரையும் நாடகத்திற்கு வரும்படி இரண்டு டிக்கெட்டுகள் வாங்கி அனுப்பியிருந்தேன்; அவர்களிருவரும் வந்திருந்து நாடகம் பார்த்தனர். மறுதினம் மிஸ்டர் லெஸ்லி கோல்ஸ், எனக்குத் தான் பார்த்ததைப் பற்றி, ஏதோ சிலாக்கியமாக எழுதினார். அக்கடிதத்திலுள்ள ஒரு வாக்கியத்தை மாத்திரம் இங்கு மொழி பெயர்த்து எழுதுகிறேன். “நீர் நாடகத்தை எழுதி ஒத்திகை செய்து, முக்கிய பாகத்தை ஆக்டு செய்து, ஸ்டேஜ் மானேஜராக விருந்து, எல்லாக் காரியங்களையும் பார்த்துக்கொண்டு, இவ்வாறு பல காரியங்களையும் ஒருவனாக வஹித்தது, எனக்கு மிகவும் ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் தருகிறது” என்று எழுதினார். அக்கடிதத்தில் கடைசியாக “மற்றெல்லாம் மெச்சதக்கதா யிருந்தபோதிலும் ஒவ்வொரு காட்சிக்கும் நீங்கள் வெளிச்சம் ஏற்பாடு செய்தது மட்டும் எனக்குத் திருப்திகரமா யில்லை” என்று எங்கள் சபையில் அதுவரையிலிருந்த ஒரு முக்கியமான குறையை எடுத்துக் காட்டினார். இவ் விஷயம் மற்ற சபைகளுக்கும் நாடகக் கம்பெனிகளுக்கும் மிகவும் உபயோகப்படும் என்று எனக்குப் படுகிறபடியால் இதைப் பற்றிச் சற்று விவரமாக இங்கு எழுத அனுமதி கேட்கிறேன்.

எங்கள் சபை நாடகங்கள் ஆட ஆரம்பித்த பிறகு அநேக வருஷங்கள் வரை எல்லாக் காட்சிகளுக்கும் ஒரே மாதிரியான

வெளிச்சங்கள் தான் உபயோகித்து வந்தோம். தற்காலமும் அநேக சபைகளிலும், நாடகக் கம்பெனிகளிலும், அம்மாதிரிச் செய்து வருகிறார்கள். இதைப்பற்றிச் சற்று யோசித்துப் பார்த்தால், இது தவறு என்பது ஸ்பஷ்டமாகத் தெரியும். ஒரு காட்சி காலையிலிருக்கலாம்; மற்றொரு காட்சி நன்றாய்வெயிற்காயும் நடுப்பகலிலிருக்கலாம்; இன்னும் மற்றொரு காட்சி நடுநிசியிலிருக்கலாம்; இவைகளை நாடகமேடையின் மீது காட்டும் பொழுது, ஒரே வெளிச்சம் இருப்பது தவறல்லவா? அன்றியும் சில காட்சிகள் ஒரே காலத்தில் நடப்பனவாயினும், நடக்கும் இடம் வேறுபட்டிருக்கலாம்; உதாரணமாக, காட்சி நடக்கும் காலம் நடுப்பகலாயிருக்கலாம்; ஆயினும் நடக்கும் இடம் வெவ்வேறாயிருக்கலாம்; ஒன்று வெட்டவெளியிலிருக்கலாம், மற்றொன்று இருண்ட குகையிலிருக்கலாம்; ஒன்று அரசனது கொலுவிலிருக்கலாம், மற்றொன்று அடர்ந்த காட்டிலிருக்கலாம்; இவைகளுக்கெல்லாம் ஒரே மாதிரியான வெளிச்சம் இருக்கச் செய்வது தவறல்லவா? ஆகவே ஒவ்வொரு காட்சிக்கும் வெளிச்சம் எப்படியிருக்க வேண்டுமென்று தீர்மானிக்கும்போது, முதலில் அது நடக்கும் காலத்தைக் கருதிப் பிறகு அது நடக்கும் இடத்தையும் கருதியே, இப்படிப் பட்ட வெளிச்சம் இருக்க வேண்டுமென ஏற்படுத்த வேண்டும். மற்றவிஷயங்களையும் கருதவேண்டும். இதற்கொரு உதாரணம் கூறுகிறேன்; ஒரு காட்சி பகல் பொழுதில் ஒரு தோட்டத்திலிருக்கலாம்; ஆயினும் அக்காட்சி நடக்கும் சமயத்தில் பெரும் மழை பொழிவதாக இருக்கலாம். பகலில் நடக்கிற காட்சியாயிற்றே என்று அதிக வெளிச்சத்தில் நடக்கும்படிச் செய்யலாமா? ஆகவே ஒரு நாடகத்தை நடிக்கும்பொழுது, ஒவ்வொரு காட்சிக்கும், இப்படிப்பட்ட வெளிச்சம் இருக்கவேண்டுமென்று பல சந்தர்ப்பங்களையும் யோசித்தே முடிவு செய்யவேண்டும். இவ்வுண்மை நான் பலவருடங்கள் அறியாதிருந்தேன். முதல் முதல் என் சிற்றறிவிற்கு இது பட்டது நான் ஒரு முறை மதராஸ் டிராமாடிக் சொஸைடியார் நாடகம் ஒன்றைப் பார்த்த பொழுதே. அந்நாடகம் மூன்று கட்சிகள் தான் அடங்கியது. ஒரே இடத்தில் அம் மூன்று காட்சிகளும் நடந்தன; ஆயினும் ஒரு காட்சி காலையிலும், இரண்டாவது காட்சி பகலிலும், மூன்றாவது

காட்சி இரவிலும் நடப்பதாக நாடக கர்த்தா எழுதியிருந்தார்; இதற்கேற்றபடி ஒவ்வொரு காட்சியிலும் வெளிச்சத்தை மாற்றினர்; காலையில் நடக்கும் காட்சிக்குக் கொஞ்சம் வெளிச்சம் இருந்தது, பகலில் நடக்கும் காட்சிக்கு அதிக வெளிச்சத்தை உபயோகித்தனர், இரவில் நடக்கும் காட்சிக்கு வெளிச்சங்களையெல்லாம் மிகவும் குறைத்து, இரவில் விளக்குகள் ஏற்றி வைத்திருந்தால் எவ்வளவு வெளிச்சம் இருக்குமோ, அப்படியே காண்பித்தனர். இது மிகவும் சரியென என் மனதிற்குப் பட்டது. இதன் பிறகுதான் இவைகளையெல்லாம் அச்சபையார்க்குச் சாதாரணமாக ஏற்பாடு செய்யும் ஐரோப்பிய கனவானுகிய மிஸ்டர் லெஸ்லி கோல்ஸ் என்பவரைப் பரிசயம் செய்து கொண்டு, அவரை இந்த "புத்தாவதாரம்" என்னும் நாடகத்திற்கு வந்து பார்க்கச் செய்தேன். இவரிடமிருந்து இன்னின்ன காட்சிகளுக்கு இன்னின்ன மாதிரி வெளிச்சம் ஏற்படுத்தவேண்டுமென்னும் பல விஷயங்களைக் கற்றேன். மேலும் திருவனந்த புரத்தில் தற்கால மிருக்கும் எமிலிஹாட்ச் என்னும் துரைசானியார் சென்னைக்கு வந்திருந்த பொழுது, இது விஷயமாகப் பல நுட்பங்களை எனக்குக் கற்பித்தனர்; அவர்களிருவருக்கும் இதன் மூலமாக எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

இந்நாடகத்திற்குப் பிறகுதான் எங்கள் சபையில் காட்சிகளுக்குத் தக்கபடி வெளிச்சத்தை ஏற்பாடு செய்யவேண்டுமென்கிற விஷயத்தைக் கொஞ்சம் கவனித்து வருகிறோம். இதை இதர நாடக சபையோர்களும், நாடகக் கம்பெனியார்களும் முக்கியமாகக் கவனிப்பார்களாக. இங்கிலாந்து, ஜர்மனி, அமெரிக்கா, முதலிய பிரதேசங்களில் நாடகங்களில் இதற்காக ஏராளமான பணம் செலவு செய்து ஒவ்வொரு காட்சியிலும் இயற்கையில் எப்படியிருக்குமோ, அப்படிச் செய்து வருவதாகப் படித்திருக்கிறேன். அவர்களைப் போல் பணம் செலவழித்து ஏற்பாடு செய்ய ஏழைகளாகிய நமக்கு முடியாமற் போனாலும், கூடியவரையில் இதைக் கவனிக்க வேண்டுமென்பது என் அபிப்பிராயம். இந்தச் சமாசாரத்தை விட்டு அகலுமுன், நாடக மேடைகளில் 'லைம் லைட்' என்னும் அதிகப் பிரகாசமான வெளிச்சத்தை உபயோகிக்கும் விதத்

தைப் பற்றிச் சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன். நாடக மேடை ஏறியிருக்கும் ஒவ்வொரு ஆக்டருக்கும் இது இன்ன தென்று தெரியும்; ஆயினும் இதைப் படிக்கும் சிலருக்கு அது இன்னதென்று தெரியாதிருக்கக் கூடுமாகையால், அது இன்ன தென்று இங்கு விவரிக்கிறேன்; அது ஒருபெருஞ் ஜோதியைப் போன்ற வெளிச்சத்தை நாடகமேடையின் பேரிலாவது அல்லது அங்கிருக்கும் சில ஆக்டர்கள் மீதாவது, விழும்படிச் செய்யும் ஒரு ஏற்பாடாம். இது ஒரு வேடிக்கையாயிருக்கிறதென்று பல நாடக சபைகளிலும், கம்பெனிகளிலும், சமயமில்லாத சமயங்களி லும் உபயோகிப்பதை நான் பார்த்திருக்கிறேன். இது பெருந் தவறாகும். இதை நமது தமிழ் நாடகமேடையில் தேவதைகள் வரும்படியான காட்சிகளில் தான் உபயோகிக்க வேண்டுமென்பது என் அபிப்பிராயம். உதாரணமாக வள்ளி திருமணத்தில் சுப்பிர மணியர் தன் சுயரூபத்துடன் வள்ளிக்குக் காட்சி கொடுக்கும் காட்சியிலும், ராமதாஸ் நாடகத்தில் ஸ்ரீராமர் முதலியோர் நவாப் புக்கும் ராமதாஸுக்கும் சுயரூபத்துடன் காட்சி கொடுக்கும் பொழுதும், சிறுத்தொண்டர் நாடகக் காட்சியில் பரமேஸ்வரன் பார்வதி சமேதராய் ரிஷபவாஹனரூடராய், சிறுத்தொண்டருக் குக் காட்சிகொடுக்கும் சமயத்திலும், இந்த லைம் லைட்டை உபயோ கிக்க வேண்டியது அவசியம் தான். "லீலாவதி சுலோசனா" நாடகத் தில் ஸ்ரீ தத்தனும் சுலோசனாவும் இரவில் கதளிக் கிரஹத்தில் பேசிக்கொண்டிருக்கும் பொழுது இதை ஏன் உபயோகிக்கவேண் டும்? இனியாவது கண்டக்டர்கள், ஆக்டர் விரும்புகிறார்களே என்று இதை உபயோகியாமல், சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி இந்த லைம் லைட்டை உபயோகிப்பார்களாக.

இதற்கு ஒரு உதாரணமாக இந்த "புத்தாவதாரம்" என்னும் நாடகத்தில் ஒரு முக்கியமான காட்சியையே எடுத்துக்கொள்ளு கிறேன். இதில் ஒரு மிகவும் முக்கியமான காட்சி கௌதம புத்தர் போதி விருட்சத்தின் அடியில் மெய்ஞ்ஞானத்தை அடையும் காட்சி யாம்; இக்காட்சியின் ஆரம்பத்தில் களைத்த கௌதமர், சாயங்காலத் தில் சுஜாதையின் கரத்தினின்றும் உணவை உட்கொள்ளுகிறார். அச் சமயம் சாயங்கால வெயிலிருப்பதுபோல், மேடையில் வெளிச்சத்

தைக் குறைத்துக்காட்டவேண்டும். பிறகு புத்தர் போதி விருட்சத்தின் அடியிற் போய் தீர்மானத்துடன் உட்கார்ந்ததும், சந்திரன் எழுவதுபோல சந்திர வெளிச்சத்தைக் காட்டவேண்டும். அதன் பிறகு மாரன் மங்கையர் அவரை மயக்க முயலும்போதும் நர்த்தனம் செய்யும்போதும் சந்திர ஒளியை அதிகப்படுத்திக் காட்டவேண்டும். பிறகு அவர்கள் ஜம்பம் சாயாமற் போனபின், சந்திரன் மேகங்களால் மறைவுறுவதுபோல், வெளிச்சத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக்கொண்டே போகவேண்டும். பிறகு குரோதம், மாச்சரியம், லோபம், அகங்காரம், அவித்யை, அவா முதலியன கோர ரூபங்களுடன் அவரை அதட்ட வரும்போது, ஏறக்குறைய இருண்டிருக்கவேண்டும். கடைசியாக அவைகள் மறைந்தவுடன் சில வினாடி வரைக்கும் நாடகமேடை முற்றிலும் இருள் சூழ்ந்தே இருக்கவேண்டும். திடீரென்று கௌதமருக்கு ஞானம் உதித்தது போல் அவர் நெற்றியின் மத்தியில் ஒரு வெளிச்சம் தோன்றவேண்டும். பிறகு அந்த ஞானம் பரவியது போல் முதலில் முகத்திலும் பிறகு உடல் முழுவதிலும் ஜோதி தோன்றவேண்டும். இந்த ஒரு காட்சிக்கு வெளிச்சத்திற்கு இவ்வளவு ஏற்பாடுகள் செய்யவேண்டியிருந்தது. மற்றவைகளையெல்லாம் சுலபமாக ஏற்பாடு செய்து பார்த்தோம் எங்கள் கடைசி ஒத்திகைகளில்; ஆயினும், கௌதமருடைய நெற்றியில் பிரகாசம் தோன்றும்படிச் செய்வது எங்ஙனம் என்று ஏக்கமுற்ற பொழுது, இதிலெல்லாம் மிகவும் புத்தி சாதுர்யமுடைய எனது நண்பர் தாமோதர முதலியார் அவர்கள் என் உதவிக்கு வந்தார். ஒரு மின்சார பாட்டரியை (battery) என் உடைக்குள் மறைத்துவைத்து அதன் கம்பியை என் தலையில் அணிந்திருந்த டோபாவுக்குள் கொண்டு போய், நெற்றிக்கெதிராகத் தொங்கும்படியாக, அதன் முனையில் ஒரு சிறு மின்சார பல்ப் (bulb) ஏற்பாடு செய்தார். மறைவாக இருந்த அந்த பாட்டரியை முடுக்கினல், அந்த வெளிச்சம் தோன்றும்படி ஏற்பாடு செய்தார். இக்காட்சி நடக்கும் பொழுது, எல்லாம் இருட்டியவுடன், இவ்விசையை நான் முடுக்க, என் நெற்றியில் இரு கண்களுக்கு மத்தியில் இந்த எலெக்டிரிக் வெளிச்சம் தோன்றியபோது, ஹாலிலுள்ள ஜனங்களெல்லாம் இதைக் கண்டு ஆச்சரியமும் சந்தோஷமு முற்றவராய் கரகோஷம்

செய்தனர். அச்சமயம் அக்கரகோஷம் என்னைச்சார்ந்ததல்ல; எனது நண்பர் தமோதர முதலியார் புத்தி சாதுர்யத்தைச் சார்ந்த தென்று அவருக்கு அதை என் மனதில் அர்ப்பணம் செய்தேன். உடனே லைம் லைட்டைக் கொண்டு முதலில் முகத்திலும், பிறகு எனது உடல் முழுவதும் ஜோதி யுண்டானதுபோல், செய்யப்பட்டது. இப்புத்தாவதார நாடகத்தில் இக்காட்சியானது மிகவும் நன்றாயிருந்ததென எல்லோரும் புகழ்ந்தது என் நினைவிற்கு வந்து, இப்பொழுதும், எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது.

ஜனங்கள் இந்நாடகத்தில் பலரும் மெச்சிய மற்றொரு காட்சி, கௌதமர் முன்பாக நடன மாதர் நடனஞ் செய்யுங்கால், திடீரென்று பலகணியோரம் வைத்திருந்த யாழின் மூலமாகத் தேவர்கள் அவருக்கு அவர் இவ்வுலகில் அவதாரம் செய்த வேலையைக் கவனிக்கும்படி சங்கீதத்தின் மூலமாகத் தெரிவிக்கின்ற காட்சியாகும். இந்த காட்சிதான் ஒத்திகைகளில் எனக்கு மிகவும் கஷ்டத்தைக் கொடுத்தது. இக் காட்சியில் நடனமும் சரியாயிருக்கவேண்டும், சங்கீதமும் சரியா யிருக்கவேண்டும், ஆக்டிங்கும் சரியாயிருக்கவேண்டும். இம் மூன்றையும் தக்கபடிச் சரிப்படுத்த இக் காட்சியை எத்தனை முறை ஒத்திகை செய்து பார்த்தேன் என்று என்னால் கணக்கிட்டுச் சொல்லமுடியாது.

ஆயினும் எனக்கு நடிப்பதற்கு மிகவும் கஷ்டத்தைக்கொடுத்த காக்ஷி நான் கௌதமராக போதி விருட்சத்தின் அடியில் ஏறக்குறைய முக்கால்மணி நேரம் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டிவந்த காட்சியே! இந்த முக்கால்மணி நேரமும் மௌனமாய் அசையாதபடி உட்கார்ந்திருப்பது தான் எனக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. அதுவும் கண்களை மூடிக்கொண்டிருப்பதென்றாலும் ஒரு வகையாக இருந்து விடலாம்; நான் கண்களைத் திறந்து கொண்டிருக்கவேண்டி வந்தது! சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பது ஒரு கஷ்டமா என்று இதை வாசிக்கும் எனது இளைய நண்பர்கள் கேட்கலாம். பத்து நிமிஷம் அசையாது உட்கார்ந்து பாருங்கள்; பிறகு இந்தக் கேள்விக்கு நீங்களே பதில் சொல்லி விடுவீர்கள் என்று, அவர்களுக்கு நான் பதில் உரைப்பேன். நாடகமேடை

யின்பேரில் நான்கைந்து மணி சாவகாசம் நடிப்பதைவிட, நாற்பது நிமிஷம் சும்மா உட்கார்ந்துகொண்டிருப்பது மிகவும் கடினமாம் என்பதற்குச் சந்தேகமே யில்லை. இவ்வாறு நான் "சும்மா" உட்கார்ந்து கொண்டிருந்ததில் மற்ஞெரு விபரீதமான கஷ்டமொன்று நேர்ந்தது. நான் எனது ஆசனத்தில் உட்கார்ந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம்' எனது துடையில் ஏதோ ஒரு பூச்சி (அந்த ஆசனத்திலிருந்த மூட்டைப்பூச்சியாயிருக்கலாம் என்று நினைக்கிறேன்) என்னைக் கடிக்க ஆரம்பித்தது! நான் அதை அகற்றுவதென்ருல் எனது கைகால்களை அசைக்கவேண்டும். அப்படிச் செய்வேனுயின் காட்சி கெட்டுப்போகும். இந்த தர்ம சங்கடத்தில் அது கடிக்கும் தினவைப் பொறுத்துக்கொண்டே யிருந்தேன் அந்த முக்கால் மணி நேரமும்! இதை நினைத்துக்கொண்டால் இதைப் படிப்பவர்களுக்கு வருவதுபோல் எனக்கும் சிரிப்பு வருகிறது; ஆயினும் அப்பொழுது எனக்குச் சிரிப்பாயில்லை!

எனது நண்பர் இந்நாடகத்தில் யசோதையாக நடித்ததும், பாடியதும், மாயா யசோதையாக நர்த்தனம் செய்ததும் மிகவும் நன்ருயிருந்ததெனப் பலரும் மெச்சினர். இவருடைய சிறு குமாரன் 'மணி' என்பவன் ராகுலனுக அழகாய் நடித்தான்.

இந்நாடகத்தில் கௌதம புத்தராக நடிக்கும் ஆக்டருக்கு முக்கிய கஷ்டம் என்னவென்ருல் "ஹாம்லெட்" என்னும் நாடகத்தில், "ஹாம்லெட்" டின் பாகம்போல், இந்த நாடகத்தில் முதற் காட்சி முதல் கடைசி காட்சி வரையில், இடையில் இளைப்பாறச் சாவகாசமின்றி, ஏறக்குறைய எல்லாக் காட்சிகளிலும் வரவேண்டுமென்பதே.

இந்நாடகத்தில் முதன் முறை நடித்தபொழுது எனக்கு நேர்ந்த ஒரு சிறு கஷ்டத்தை எடுத்து எழுதுகிறேன். கடைசி காட்சிக்கு முந்திய காட்சியில், நான் ரங்கத்தின்பேரில் நடந்துசெல்லும்பொழுது காலில் பாதரட்சை ஒன்று மில்லாதபடியால், அங்கு அகஸ்மாத்தாய்க் கிடந்த ஒரு பழைய இரும்பாணி, எனது உள்ளங்காலில் நன்ருய்க் குத்தி ரத்தம் வடிய ஆரம்பித்தது. சீக்கிரம் காட்சியை முடித்துக்கொண்டு, கிரீன் ரூமுக்குப் போய் ரத்தம் வருவதை நிறுத்தி, காயத்தின்மீது கொஞ்சம் சுண்ணும்பைப் பூசி

பிறகு நன்றாய்க் கட்டிவிட்டேன். நாடகம் முடிந்தவுடன் வர்ணத்தைக்கூடக் கழுவுவதன்முன் எனது நண்பர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு, நேராக வயித்தியர் வீட்டிற்குப் போய் அதற்குச் சிகிச்சை செய்து கொண்டேன். இதை இங்கு நான் எடுத்து எழுதுவதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. நாடகமேடையில் ஆடும் ஆக்டர்களுக்கு அங்கிருக்கும் பழைய இரும்பு ஆணி முதலிய சாமான்களால் காயம் நேரிடக்கூடும்; அவைகள் பழயனவாய் துருப்பிடித்திருந்தால், ஏதோ சிறு காயந்தானே என்று அசட்டை செய்யலாகாது; உடனே சுண்ணும்பை யிட்டு, ரத்தம் வராதபடிக் கட்டிவிட்டு, கூடிய சீக்கிரத்தில் வயித்தியரிடம் போய் அதற்குச் சிகிச்சை செய்துகொள்ளவேண்டும். ஏனெனில், ஒரு பழய குண்டூசியாயினும் அது துருவேறியிருந்தால், ஒரு சமயம், செப்டிக் (sceptic) விஷத்தையுண்டு பண்ணக்கூடும். ஆகவே, "கொட்டினால் தேள் கொட்டா விட்டால் பிள்ளைப் பூச்சி" என்கிற பழமொழிக்கிணங்க, எதற்கும் முன் ஜாக்கிரதையாயிருப்பது நலம்; இதை எனது நாடகமேடை நண்பர்களுக்கு அறிவிப்பது எனது கடன் என இங்கு இதைப்பற்றி எழுதலானேன்.

இப்புத்தாவதாரமானது, உடனே இன்னும் இரண்டுமுறை ஆடப்பட்டது. இவ்வாறு கூடிய சீக்கிரத்தில் மூன்று முறை ஆடியபொழுதும் நல்ல பணம் வசூலாயது. இந்நாடகத்திற்கென்று செலவு செய்த தொகை யெல்லாம் ஏறக்குறைய இந்த மூன்று முறை ஆடியதினுலேயே, எடுத்துவிட்டோம். அன்றியும் இரண்டாம் முறை மூன்றும் முறை ஆடியபொழுது முதன் முறை ஆடியதிலிருந்த குறைகளையெல்லாம் நீக்க சமயம் வாய்த்தது; அன்றியும் முதல் நாள் வருவதற்கு அசந்தர்ப்பமாயிருந்த நாடகாபிமானிகள், இரண்டாவது தினமாவது மூன்றுவது தினமாவது வந்து பார்ப்பதற்குச் சௌகரியமாயிருந்தது. இதன் பிறகு தான் எனது பால்ய நண்பர், சென்னை டிராமாடிக் சொசைடியாரைப் போல் நமது முக்கியமான நாடகங்களையெல்லாம் மூன்று நான்கு தினங்களில் ஆட வேண்டும் என்று வற்புறுத்தியதின் நியாயத்தைக் கண்டேன்.

இந் நாடகமானது இதற்கப்புறம் எங்கள் சபையோரால் சில முறைதான் ஆடப்பட்டிருக்கிறது. இதர சபைகளும் இரண்டு

மூன்று விசைதான் இதை ஆடி யிருக்கின்றன. இதற்கு முக்கிய காரணம் இதற்குத் தக்க திரைகள் உடுப்புகள் முதலியன சித்தம் செய்வது மேற் சொன்னபடிக் கடின மென்பது ஒன்றாயிருக்கலாம்; அன்றியும் தக்கபடி நடிப்பதற்கும் இது மிகவும் கஷ்டம் தரும் என் பதற்குச் சந்தேகமில்லை. இதர சபைகள் இந்நாடகத்தை நடித்ததில் நான் பார்த்த வரையில் "ட்ரேட்ஸ் ஸ்டாப் கிளப்" (Trades Staff Club) இந் நாடகத்தை நடித்தது மிகவும் நன்றா யிருந்த தென்பது என் அபிப்பிராயம். சில காட்சிகளின் ஒழுங்கில் அவர்கள் எங்கள் சபையைவிட மிகவும் புத்தி சாதுர்யமாகச் செய்தார்கள் என்று நான் கூறவேண்டும். இது எனக்கு மிகவும் சந்தோஷத்தைத் தந்தது. இதில் ஒரு சிறு வேடிக்கை என்னவென்றால் என் பெயர் கொண்ட ஒருவரே அங்கும் கௌதம புத்தராக நடித்தார்!

இந் நாடகக் கதையானது இரண்டு முறை சினிமா காட்சியில் சென்னையில் காட்டப் பட்டதைப் பார்த்தேன். ஆயினும் அவை கள் எனக்கு மிகவும் பொருத்தமாக தோன்றவில்லை. அச் சினிமாக் காட்சியிலும் எங்கள் சபையிலும் இக் கதையைப் பார்த்த அநேகர், எங்கள் சபை நடித்ததே அதிக விமரிசையாக இருந்த தெனக் கூறி யதை நான் கேட்டிருக்கிறேன்.

நான் தற்காலமும் நடிக்க விரும்பும் நாடகங்களில் இது ஒன் றாகும்.

இவ் வருஷத்தில் எங்கள் சபையின் அங்கத்தினருள் சில முக் கியமானவர்கள் மரித்தனர் என்று நான் துக்கத்துடன் எழுத வேண் டியவனா யிருக்கிறேன். முதலில் பல ஆண்டுகளாக எங்கள் சபைக் குப் பிரசிடெண்டா யிருந்து அதற்காகப் பல விதத்திலும் முயற்சி எடுத்துக்கொண்ட டி. வி. சேஷகிரி ஐயர் அவர்கள் காலகதி யடைந் தனர். இவர் மரண மடைவதற்குச் சில தினங்களுக்கு முன் நான் இவரைப் போய்ப் பார்த்த பொழுது, "உன்னுடைய புத்தாவதாரம் எப்பொழுது வரப்போகின்றது?" என்று மிகவும் ஆவலுடன் கேட் டது எனக்கு நினைவிற்கு வருகிறது. என் துர் அதிர்ஷ்டத்தால் அதைப் பாராமலே அவர் பரலோகம் சென்றார். இவர் ஞாபகச் சின்னமாக ஏதாவது சபையில் ஏற்படுத்த வேண்டுமென்று சபை

யார் தீர்மானித்து, பணம் சேகரித்து, அவருடைய உருவப் படம் ஒன்றை சபையின் இருப்பிடத்தில் வைத்திருக்கின்றனர்.

அன்றியும் பல வருடங்களாக எங்கள் சபையில் கிரீன் ரூம் டைரெக்டர் ஆக உழைத்துவந்த என் பழய நண்பராகிய வெங்கடா சல ஐயரும் இவ் வருஷம் சிவலோகப் பிராப்தி யடைந்தார். இவர் பொருட்டும் ஒரு பொதுக் கூட்டம் கூடி, சபையின் துக்கத்தைத் தெரிவித்து, இவரது ஞாபகச் சின்னமாக இவரது உருவப் பட மொன்றைச் சபையில் வைக்க வேண்டுமென்று தீர்மானித்தோம். இப் பிரயத்னமானது சீக்கிரம் முடிந்து, இவரது படம் ஒன்று எங்கள் சபையின் ஹாலை அலங்கரிக்கிறது.

மேலும், இவ் வருஷம் எங்கள் சபையில் சற்றேறக் குறைய ஆரம்ப முதல் அங்கத்தினரா யிருந்த வி. எதிராஜுலு செட்டியார் வைகுண்டப் பிராப்தி யடைந்தார். இவர் எங்கள் சபையின் தெலுங்குப் பிரிவிற்காகப் பலஆண்டுகள் கண்டக்டராயிருந்து அதை முன்னுக்குக் கொண்டு வந்தவர்; அதன் அபிவிர்த்திக்காக அதிகப் பணமும் செலவிட்டவர்; எங்கள் சபையில் கடைசியில் பல வருடங் கள் பொக்கிஷதாரராக விருந்து, மிகவும் ஒழுங்காகக் கணக்குப் பார்த்தவர். இவரும் இவ்வருடம் இறந்தது எங்கள் சபையின் துர் அதிர்ஷ்ட வசமாம்.

கடைசியாக இவ் வருஷம் மரித்த எங்கள் சபையின் அங்கத் தினருள், என் மனைவியாகிய தனம்மாளையும் நான் குறிக்கவேண்டும். எங்கள் சபையில் ஸ்திரீகளை அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளத் தீர்மானித்த நாள்முதல், என் மனைவி அவர்களுள் ஒருத்தியாய்ச் சேர்ந்து, தன் ஆயுள் பரியந்தம் ஏறக்குறைய ஒரு நாடகமாவது தவருமல் பார்த்து வந்தனள். சபையின் மற்றொரு லேடி மெம்ப ராகிய பண்டிதை விசாலாட்சி அம்மாள், என் மனைவியைப் பற்றி ஒரு முறை கூறியது எனக் கிப்பொழுது ஞாபகம் வருகிறது. அதா வது, "மற்ற லேடி மெம்பர்களெல்லாம், என் கணவன் அப்படி நடிக்கின்றார், என் தமயன் அப்படி நடிக்கிறார், என் தகப்பனார் அப்படி நடிக்கிறார், என்று சும்மா பேசிக்கொண்டிருக்கிறார்கள்;

# 28-ஆவது அத்யாயம்

—∞∞—

இனி 1927-ம் வருஷத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகிறேன். அவற்றுள் முக்கியமாகக் குறிக்க வேண்டியது எங்கள் சபையார் சென்னையைவிட்டு, மறுபடியும் வெளியூர்களுக்குப் போய் நாடகங்கள் நடத்தியதேயாம். 1922-ம் வருஷம் கடைசியாக திருநெல்வேலி, திருவநந்தபுரம் போயிருந்ததைப்பற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன். மறு வருடம் ரங்கூனுக்குப் போகலாமா என்கிற பேச்சு வந்து, அது தடைபட்டது. அவ் வருஷம் எனதுயிர் நண்பர் என்னையும், எங்கள் சபையையும் இவ்வுலகையும் விட்டுச் சென்றது, இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அதன் பிறகு மூன்று நான்கு வருடங்களாக, வெளியூர் பிரயாணம் என்கிற பேச்சே ஆரம்பிக்கப் படவில்லை. இவ் வருஷம் எனது நண்பர் எஸ். சத்தியமூர்த்தி ஐயர், தமிழ் கண்டக்டராகப் பொதுக் கூட்டத்தில் நியமிக்கப்பட்ட பிறகு, அவர் இவ் வருஷம் நமது சபை எங்காவது வெளியூருக்குப் போக வேண்டும் என்று பிரேரேபித்து தன் ஜனன பூமியாகிய புதுக்கோட்டைக்கும், மதுரைக்கும் போனால் நலமா யிருக்குமென்று சொன்னார். எனக்கு மாத்திரம் இந்தப் பிரயாணத்தினால் சபைக்கு லாபம் கிடைப்பது கஷ்டம் என்று மனதில் தோன்றியது. ஆயினும் முன்பு போல டி. சி. வடிவேலு நாயகர் கன்டிராக்டராக சபைக்கு 1,000 ரூபாய் கொடுக்க இசைந்திருக்கின்றார் என்று சத்தியமூர்த்தி ஐயர் கூறவே, நாம் இதைத் தடுப்பானேன், சபைக்கு ரூபாய் 1,000 வருவதற்குத் தடங்கலாக இருப்பானேன், என்று சும்மா இருந்துவிட்டேன். அதன்பேரில் சபையார், புதுக்கோட்டையில் நான்கு நாடகங்களும், மதுரையில் ஐந்து நாடகங்களும் ஆட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அப்பொழுது புதுக்கோட்டைக்கு நேராக ரெயில் இல்லாதபடியால், தஞ்சாவூர் வழியாக, பஸ் ஏறிச் சென்றோம்.

புதுக்கோட்டையில் ஆடிய நான்கு நாடகங்களில் முதல் மூன்றாகிய, மனோஹரன், காலவரிஷி, லீலாவதி—சுலோசனா நாடகங்க

ளில் நானும், எனது புதிய நண்பர் கே. நாகரத்தினம் ஐயரும் ஆடி னோம். அவர் கவர்ன்மெண்ட் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தபடி யால் மூன்றாவது நாடகமானதும் சென்னைக்குத் திரும்பி வர வேண்டிய திருந்தது. கடைசி நாடகமாக ஹரிச்சந்திர நாடகத்தை வைத்துக் கொண்டோம். இதில் எனது நண்பர் டாக்டர் ஸ்ரீனி வாச ராகவாசாரியும், வடிவேலு நாயகரும் முக்கிய பாகங்கள் எடுத்துக் கொண்டனர். பல காரணங்களால் இந்த நாடகங்களுக்கு எங்கள் கண்டக்டராகிய சத்தியமூர்த்தி ஐயர் எண்ணியபடி அவ்வ ளவு பணம் வசூலாகவில்லை. மதுரைக்குப் போனால் எல்லாம் சரி யாகப் போய்விடும் என்று ஆக்டர்களை தேற்றினர். இவ்விடம், கே. நாகராஜ ஐயர், வி. சா. கெ. ச. சோமசுந்தரம் செட்டியார், திவான்பஹதூர் முத்தையா செட்டியார் அவர்கள், எங்கள் சபை யோருக்கு விருந்தளித்தனர்; அன்றியும் எங்கள் சபைக்கு ஒரு வந் தனோபசாரப் பத்திரமும் கொடுக்கப்பட்டது. இவ்விடம் மேற் சொன்ன நான்கு நாடகங்களையும் முடித்துக்கொண்டு, பஸ் மூல மாக திரிச்சிராபள்ளிக்குப் போய் அங்கிருந்து ரெயிலேறி மதுரையை யடைந்தோம். அன்று காலை புதுக்கோட்டையை விட்டுப் புறப் படும் பொழுது எனக்கு உடம்பு சொஸ்த மில்லாதிருந்தது. அதற்கு முக்கிய காரணம் அதற்கு முந்தியதினம் நான் மழையில் நனைந்ததே என்று நினைக்கிறேன். புதுக்கோட்டைக்கு வரும் பொழுதே எனது இடது காலில் ஒருவிதமான சிரங்கு இருந்தது; மழை நீரில் அப்புண்ணுடன் நடந்து வரவே, மறுநாட் காலை எனக் குக் கொஞ்சம் ஜ்வரம்போ லிருந்தது. அதை கவனியாது, மற்றவர் களுடன் பஸ் ஏறிப் புறப்பட்டேன். சாயங்காலம் மதுரையில் ரெயிலிலிருந்து இறங்கும் பொழுது எனக்கு ஜ்வரம் ஆரம்பித்து விட்டது. என்னடா இது, யாழ்பாணத்துக் கதை மறுபடியும் ஆகாதிருக்க வேண்டுமே யென்று, மீனாட்சி அம்மனை பிரார்த்தித் துக்கொண்டு இறங்கினேன். ரெயில் ஸ்டேஷனில், எங்களை வர வேற்பதற்காக எனது பழய நண்பர்களாகிய பி. ராமமூர்த்தி பந் துலு, மாணிக்கவாசகம் பிள்ளை முதலியோர் வந்திருந்தனர். எனக்கு உடம்பு அசௌக்கியமா யிருப்பதை தெரிவிக்கவே, எனது நண்பர் கள் என்னை உடனே, எங்களுக்கு ஏற்படுத்திய ஜாகையாகிய மதுரை

# 28-ஆவது அத்யாயம்

இனி 1927-ம் வருஷத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகிறேன். அவற்றுள் முக்கியமாகக் குறிக்க வேண்டியது எங்கள் சபையார் சென்னையைவிட்டு, மறுபடியும் வெளியூர்களுக்குப் போய் நாடகங்கள் நடத்தியதேயாம். 1922-ம் வருஷம் கடைசியாக திருநெல்வேலி, திருவநந்தபுரம் போயிருந்ததைப்பற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன். மறு வருடம் ரங்கூனுக்குப் போகலாமா என்கிற பேச்சு வந்து, அது தடைபட்டது. அவ் வருஷம் எனதுயிர் நண்பர் என்னையும், எங்கள் சபையையும் இவ்வுலகையும் விட்டுச் சென்றது, இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அதன் பிறகு மூன்று நான்கு வருடங்களாக, வெளியூர் பிரயாணம் என்கிற பேச்சே ஆரம்பிக்கப் படவில்லை. இவ் வருஷம் எனது நண்பர் எஸ். சத்தியமூர்த்தி ஐயர், தமிழ் கண்டக்டராகப் பொதுக் கூட்டத்தில் நியமிக்கப்பட்ட பிறகு, அவர் இவ் வருஷம் நமது சபை எங்காவது வெளியூருக்குப் போக வேண்டும் என்று பிரேரேபித்து தன் ஜனன பூமியாகிய புதுக்கோட்டைக்கும், மதுரைக்கும் போனால் நலமாயிருக்குமென்று சொன்னார். எனக்கு மாத்திரம் இந்தப் பிரயாணத்தினால் சபைக்கு லாபம் கிடைப்பது கஷ்டம் என்று மனதில் தோன்றியது. ஆயினும் முன்பு போல டி. சி. வடிவேலு நாயகர் கன்டிராக்டராக சபைக்கு 1,000 ரூபாய் கொடுக்க இசைந்திருக்கின்றார் என்று சத்தியமூர்த்தி ஐயர் கூறவே, நாம் இதைத் தடுப்பானேன், சபைக்கு ரூபாய் 1,000 வருவதற்குத் தடங்கலாக இருப்பானேன், என்று சும்மா இருந்துவிட்டேன். அதன் பேரில் சபையார், புதுக்கோட்டையில் நான்கு நாடகங்களும், மதுரையில் ஐந்து நாடகங்களும் ஆட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அப்பொழுது புதுக்கோட்டைக்கு நேராக ரெயில் இல்லாதபடியால், தஞ்சாவூர் வழியாக, பஸ் ஏறிச் சென்றோம்.

புதுக்கோட்டையில் ஆடிய நான்கு நாடகங்களில் முதல் மூன்றாகிய, மனோஹரன், காலவரிஷி, லீலாவதி—சுலோசனா நாடகங்க

ளில் நானும், எனது புதிய நண்பர் கே. நாகரத்தினம் ஐயரும் ஆடி னோம். அவர் கவர்ன்மெண்ட் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தபடி யால் மூன்றாவது நாடகமானதும் சென்னைக்குத் திரும்பி வர வேண்டிய திருந்தது. கடைசி நாடகமாக ஹரிச்சந்திர நாடகத்தை வைத்துக் கொண்டோம். இதில் எனது நண்பர் டாக்டர் ஸ்ரீனி வாச ராகவாசாரியும், வடிவேலு நாயகரும் முக்கிய பாகங்கள் எடுத்துக் கொண்டனர். பல காரணங்களால் இந்த நாடகங்களுக்கு எங்கள் கண்டக்டராகிய சத்தியமூர்த்தி ஐயர் எண்ணியபடி அவ்வ ளவு பணம் வசூலாகவில்லை. மதுரைக்குப் போனால் எல்லாம் சரி யாகப் போய்விடும் என்று ஆக்டர்களை தேற்றினார். இவ்விடம், கே. நாகராஜ ஐயர், வி. சா. கெ. ச. சோமசுந்தரம் செட்டியார், திவான்பஹதூர் முத்தையா செட்டியார் அவர்கள், எங்கள் சபை யோருக்கு விருந்தளித்தனர்; அன்றியும் எங்கள் சபைக்கு ஒரு வந் தனோபசாரப் பத்திரமும் கொடுக்கப்பட்டது. இவ்விடம் மேற் சொன்ன நான்கு நாடகங்களையும் முடித்துக்கொண்டு, பஸ் மூல மாக திரிச்சிராப்பள்ளிக்குப் போய் அங்கிருந்து ரெயிலேறி மதுரையை யடைந்தோம். அன்று காலை புதுக்கோட்டையை விட்டுப் புறப் படும் பொழுது எனக்கு உடம்பு சௌஸ்த மில்லாதிருந்தது. அதற்கு முக்கிய காரணம் அதற்கு முந்தியதினம் நான் மழையில் நனைந்ததே என்று நினைக்கிறேன். புதுக்கோட்டைக்கு வரும் பொழுதே எனது இடது காலில் ஒருவிதமான சிரங்கு இருந்தது; மழை நீரில் அப்புண்ணுடன் நடந்து வரவே, மறுநாட் காலை எனக் குக் கொஞ்சம் ஜ்வரம்போ லிருந்தது. அதை கவனியாது, மற்றவர் களுடன் பஸ் ஏறிப் புறப்பட்டேன். சாயங்காலம் மதுரையில் ரெயிலிலிருந்து இறங்கும் பொழுது எனக்கு ஜ்வரம் ஆரம்பித்து விட்டது. என்னடா இது, யாழ்பாணத்துக் கதை மறுபடியும் ஆகாதிருக்க வேண்டுமே யென்று, மீனாட்சி அம்மனை பிரார்த்தித் துக்கொண்டு இறங்கினேன். ரெயில் ஸ்டேஷனில், எங்களை வர வேற்பதற்காக எனது பழய நண்பர்களாகிய பி. ராமமூர்த்தி பந் துலு, மாணிக்கவாசகம் பிள்ளை முதலியோர் வந்திருந்தனர். எனக்கு உடம்பு அசௌக்கியமா யிருப்பதை தெரிவிக்கவே, எனது நண்பர் கள் என்னை உடனே, எங்களுக்கு ஏற்படுத்திய ஜாகையாகிய மதுரை

கலாசாலை ஹாஸ்டலுக்குக் கொண்டுபோய் விட்டனர். அன்று சாயங்காலம், பிறகு எனக்கு நண்பர்களான, மதுரை டிராமாடிக் கிளப் அங்கத்தினர் பலரை அதன் கண்டக்டரா யிருந்த ராம மூர்த்தி பந்துலு அவர்கள் இன்னா ரின்னாரென எனக்குத் தெரிவித் தார். அச்சமயம் பார்த்ததாக அவர்களுள் டாக்டர் சீதாராமன் என்பவர் ஒருவரைமாத்திரம் ஞாபகமிருக்கிறது. மற்றவர்களெல் லாம் எனக்கு ஞாபகமில்லாதது அப்பொழுது எனக்கிருந்த தேகஸ் திதி பற்றி யிருக்கலாம். பிறகு உங்களுடன் சாவகாசமாய்ப் பேசு கிறேன் என்று அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு, ஏதோ கொஞ்சம் கஞ்சி சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டேன். அன்று வெள்ளிக்கிழமை; ஏதாவது புதிய ஊருக்குப் போனால் வெள்ளிக் கிழமைகளில் கோயிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்யா திருப் பதில்லை நான்; ஆயினும் அன்று எனக்கு இருந்த தேக ஸ்திதியில் துவாதசாந்தஸ்தலம் என்று சொல்லப்படும் முக்கிய க்ஷேத்திரமா கிய மதுரைக்கு வந்தும் என் துர் அதிர்ஷ்டத்தால் அன்று நான் மீனாட்சி சுந்தரேஸ்வரர்களை தெரிசனம் செய்யக் கொடுத்து வைக் காமற் போயிற்று. நான் போவதற் கில்லாவிட்டாலும் எனது நண்பர் வடிவேலு நாயகரை அழைத்து, மற்ற எல்லா ஆக்டர்களை யும் அழைத்துக்கொண்டு கோயிலுக்குப் போய் வரும்படி சொல்லி அனுப்பினேன். அவர்கள் போய்வந்து எனக்கு குங்குமப் பிரசாதம் கொண்டு வந்து கொடுத்தனர். அதை அணிந்து, மானச பூஜை யாக, எனது ஒன்பதாம் வயது முதல் செய்து வரும் வெள்ளிக் கிழமை பூஜையைச் செய்து முடித்து உறங்கினேன்.

மறுநாள் அதிகாலையில் விழித்ததும், எனக்கு ஜ்வரம் அதிகமா யிருப்பதைக் கண்டேன். உடனே வடிவேலு நாயகரை அழைத்து என் தேக ஸ்திதியைக் கூறி "இன்று மனோஹரன் நாடகத்தை மாற்றி வேறு ஏதாவது நான் ஆடாத வேறொன்றை வைத்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்டேன். அவர் முகம் வாடி, "என்ன வாத்தியார், நோட்டீசுகளைக்கூட அனுப்பி விட்டேனே, ஆரம்பத்திலேயே தடங்கலானால் நான் என்ன செய்வது?" என்று துக்கப்பட்டார். அவர் புதுக்கோட்டையிலேயே நஷ்டப்பட்டதை அறிந்த நான், இங்கும் அவருக்கு நஷ்டம் வராதபடி எப்படியாவது

செய்ய வேண்டுமென்று தீர்மானித்து, "என்றால் ஒன்றும் தடை யில்லை. ஒரு வயித்தியர் யாரையாவது அழைத்துக் கொண்டுவா; அவர் இன்றிரவு என்னை மேடையின் பேரில் நடிக்கும்படியான சக்தி எனக்குக் கொடுப்பாராயின் நான் நடிக்க ஆட்சேபனை யில்லை" என்று கூறினேன். அவர் உடனே "ஓடோடியும் போய்" ஒரு வயித்தியரை அழைத்து வந்தார். அவர் முழுப் பெயர் எனக்கு ஞாபகமில்லை. அவரை 'மணி' என்று மற்றவர்கள் அழைத்தது எனக்கு ஞாபக மிருக்கிறது. அந்த 'மணி' வயித்தியர் என்னைப் பரிசோதித்துப் பார்த்து, "இது ஒன்றும் கெட்ட ஜ்வரமல்ல; இதற்கு ஒரு பஸ்பம் அனுப்புகிறேன்; அதை உட்கொள்ளுங்கள், நீங்கள் இன்றிரவு நாடகமாடலாம்" என்று சொன்னார். அப்பொழுதுதான் என் மனம் கொஞ்சம் திர்ப்தி அடைந்தது; வடிவேலு நாயகர் முகமும் கொஞ்சம் மலர்ந்தது. அவர் கொடுத்த பஸ்பம், ஆங்கில வயித்திய மருந்தல்ல, ஹிந்துக்களுடைய ஆயுர்வேதத்திலடங்கிய ஏதோ ஒரு பஸ்பம். அது உடனே வெகு சீக்கிரத்தில் என் ஜ்வரத்தை இறக்கியதுமன்றி எனக்குக் கொஞ்சம் ஊக்கத்தையும் தந்தது. இதை இங்கு சற்று விவரமாய் நான் எழுதுவதற்கு முக்கிய காரணமுண்டு. இங்கிலீஷ் வயித்தியர்கள் யாராவது என்னை வந்து பார்த்திருப்பார்களாயின் கட்டாயமாக கொயினா எனக்குக் கொடுத்திருப்பார்களென்பது நிச்சயம். அந்தக் கொயினா ஜ்வரத்தைக் கண்டித்த போதிலும், எனக்கு மிகுந்த பல ஹீனத்தை யுண்டுபண்ணி யிருக்கும்; நான் அன்றிரவு நாடக மேடையில் நடித்திருக்க முடியாதென்று உறுதியாய் நம்புகிறேன். அவ்வாறு பலஹீனத்தை யுண்டுபண்ணாது, ஜ்வரத்தைத் தணித்ததுமன்றி எனக்கு ஊக்கத்தையும் கொடுத்தது போன்ற அநேகம் மருந்துகள் நமது பூர்வீக வயித்திய சாஸ்திரங்களில் இருக்கின்றன. ஆயினும் அவற்றைச் சரியாக படிப்பாரும், சரியாக ஆதரிப்பாரும், அப்படிப்பட்ட மருந்துகளைச் சரியான முறைப்படி செய்வாருமின்றி, நமது ஆயுர்வேதம் க்ஷீணதசையை அடைந்திருக்கின்றது என்பது என் தீர்மானமான எண்ணம். இதை எனது இந்திய நண்பர்களுக்குத் தெரிவிக்க வேண்டியது என் கடமை என எண்ணி எழுதலானேன். அந்த ஔஷதத்தைக் கொடுத்து,என்னை அன்று நாடக

மேடையின் பேரில் ஏறச்செய்த "மணி" வயித்தியருக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன். அவர் என்னிடம் இந்த சிகிச்சைக்காகப் பணம் வாங்கமாட்டேன் என்று மறுத்தபடியால், அவருக்கு நான் பதிப்பித்துள்ள அவர் விரும்பிய சில நாடகங்களை, காணிக்கையாக என் வந்தனத்துடன் பிறகு அனுப்பினேன். இங்கு நான் எழுதியதை ஒருகால் அவர் பார்க்கும்படி நேரிடின், அவர் அன்று எனக்குச் செய்த பேருபகாரத்தை இன்றளவும் நான் மறக்கவில்லை என்று சிறிது மகிழ்வாராக!

அன்றிரவு வயித்தியர் கட்டளைப்படி வெறும் மிளகுரசம் சாதம் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு, வேடம் பூண்டு மேடை ஏறினேன். "மனோஹரன்" நாடகமாடுவது கடினம் என்று இதை வாசிக்கும் எனது நண்பர்கள் நன்குயறிவார்கள் என்று நினைக்கிறேன். எனது இடது கால் சற்று வீங்கி, என் மேஜோடைப் போடுவதற்குக் கஷ்டமா யிருந்தது; ஜ்வரம் விட்டபோதிலும் பலஹீனம் அதிகமாயிருந்தது. மனதில் உற்சாக மிருந்த போதிலும், தேகத்தில் வலுவில்லை. அப்படி யிருந்தும், மீனாட்சி சுந்தரேஸ்வர ரருளால், ஒருவிதமாக, அந் நாடகத்தை ஆடி முடித்தேன். ஆயினும் நான் அன்றைத்தினம் நடித்தது எனக்குத் திருப்திகரமாயில்லை என்று நான் இங்கு எழுதாமலே எனது நண்பர்கள் அறிந்து கொள்ளக்கூடும். நாடகம் முடிந்ததும் வேஷத்துடனே எங்கள் ஜாகைக்குப் போய் வெந்நீர் கொண்டுவரச் சொல்லி, என் முகத்தையெல்லாம் கழுவிக்கொண்டு இவ்வளவாவது பரமேஸ்வரன் கருணை கூர்ந்தாரே என்று அவரைத் துதித்துவிட்டு உறங்கினேன். இவ்விடம் இரண்டாவது நாடகம் செவ்வாய்க் கிழமை போட்டிருந்தபடியால், இடையில் எனக்கு இரண்டு நாள் சாவகாச மிருந்தது; இதற்குள் என் உடம்பும் சுவஸ்தமாய் விட்டது ஸ்வாமியின் கிருபையால். அன்றியும் அந்த இரண்டாவது நாடகம் "காலவ ரிஷி" யானபடியால், எனக்கு ஒரு கஷ்டமு மில்லை; நான் முன்பே என் நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறபடி, நாடகத்தின் முடிவில் சுமார் 10 நிமிஷத்திற்குத்தான் எனக்கு வேலை யிருக்கிறது. அந்நாடகத்தில் ஆட நாடகக் கொட்டகைக்குப் போகுமுன், கோயிலுக்குப் போய் மீனாட்சி சுந்தரேஸ்வரர்களைத் தரிசித்துவிட்டுப் பிறகு போனேன்.

இங்கு நான் ஆடிய மூன்றாவது நாடகம் "லீலாவதி-சுலோசனா" இதற்காக நான் வீட்டை விட்டுப் புறப்படும் பொழுது, எனது மதுரை நண்பர்களில் ஒருவர், "மிஸ்டர் சம்பந்தம், முதல் நாடகத்தில்தான் உங்களுக்கு உடம்பு சௌக்கியமாகவில்லை; இரண்டாவது நாடகத்தில் உங்களுக்கு அதிக பாகமில்லை; இதிலாவது உங்களுடைய பழய ஆக்டிங்கை நாங்கள் பார்க்கும்படிச் செய்ய வேண்டு" மென்று கேட்டது எனக்கு ஞாபகமிருக்கிறது. இந் நாடகத்தில் நான் என் பழய வழக்கப்படி நடித்து, எனது மித்திரர்களைச் சந்தோஷப் படுத்தினேன் என்று நினைக்கிறேன்.

மேற்சொன்ன முதல் மூன்று நாடகங்களும் முடிந்தவுடன் எனது நண்பர் கே. நாகரத்தினம் சென்னைக்குத் திரும்பிவிட்டார். ஸ்திரீ வேடம் பூண்டு நடித்தவர்களுள், இவர் இங்கு நற்பெயரெடுத்தாரென்பது என் அபிப்பிராயம். எனது மதுரை நண்பர்களிற் பலரும் அங்ஙனமே கூறினர். நான்காவது ஐந்தாவது நாடகங்கள் நந்தனார் சரித்திரமும் ஹரிச்சந்திர விலாசமுமாம். இதில் எனக்குப் பாகமில்லா விட்டாலும் எங்கள் கண்டக்டராகிய சத்தியமூர்த்தி ஐயர் கேட்டபடி நந்தன் சரித்திரத்தில் ஒரு பறையனாகவும் ஹரிச்சந்திர விலாசத்தில் பூதமாகவும் வந்தேன். இந்தச் சிறு விஷயத்தை இங்கு எனது நண்பர்களுக்குத் தெரிவித்ததற்கு ஒரு காரணமுண்டு. அநேக ஆக்டர்கள் ஒரு முறை ஏதாவது முக்கிய பாகத்தை நடித்தபிறகு சிறு பாத்திரங்கள் எடுத்துக் கொள்வதில்லை யென்று தீர்மானித்து விடுகின்றனர். அவ்வாறு சிறு பாகங்களை எடுத்துக்கொள்வது தங்கள் கௌரவத்திற்குக் குறைவு என்று நினைக்கின்றனர். அன்றியும் அரசன் வேஷம், ஸ்ரீராமர் வேஷம், சுப்பிரமணியர் வேஷம் முதலிய பெரிய வேஷங்களை தரித்தபின், பறையனாகவும் தோட்டியாகவும் வருவதா என்று சங்கோசப் படுகின்றனர். இவ்வாறு எண்ணுவது முற்றிலும் தவறு, ஒரு நாடக சபையைச் சேர்ந்தால், எந்த வேஷத்தை எடுத்துக்கொள்ள வேண்டி வந்தபோதிலும், சந்தோஷமாய் எடுத்துக் கொள்வதே முறைமை, என்று எனது இளைய நண்பர்களுக்கு அறிவிக்க வேண்டுமென்பது என் கடன் என்றெண்ணி, பல வருடங்களாக எங்கள்

சபையில் கதா நாயகனுக நடித்து வந்த நான், சிறு அற்ப பாகங் களைக் கொடுத்தபோதிலும், வேண்டாம் என்று மறுக்காது ஆடி வரு கிறேன். இக் காரணம் பற்றியே நந்தனர் சரித்திரத்தில் ஒரு பறை யனுகவும், ஹரிச்சந்திர விலாசத்தில் பூதமாகவும் வந்தேன். பறை யனுக வேடம் தரிப்பது ஒரு விதத்தில் சுலபமென் றெண்ணலாம். பூதமாய் வருவதற்காக முகத்தில் கருப்பு, வெண்மை, சிகப்பு முத லிய வர்ணங்களை அலங்கோலமாய்ப் பூசிக்கொண்டு, கோரைப் பற் கள் இரண்டு வைத்துக்கொண்டு, விகாரமான உடை தரித்து வர வேண்டும். அதையும் மனங் கூசாது உற்சாகத்துடன் பூண்டேன். இந்தப் பூதமாக வந்தபொழுது நான் மேடையின் பேரில் பேச வேண்டிய வார்த்தை ஒன்றுதான்—பூ! என்று உரக்கக் கூவவேண்டி யதே! அதையும் செய்தேன். நாடகங்களில் சிறு பாகங்களை எடுத் துக் கொள்வதைப்பற்றி சில வருடங்களுக்கு முன் சென்னையில் நடந்த ஒரு சங்கதி ஞாபகத்திற்கு வருகிறது. அப் பொழுது காலவரிஷி ஆடப்பட்டது, அச்சமயம் வேறு ஆக்டர்க ளில்லாதபடியாலோ, அல்லது எங்கள் கண்டக்டர் என்னை எடுத்துக் கொள்ளும்படிக் கேட்டபடியாலோ, ஏதோ காரணத்தினல் திடீ ரென்று, இந் நாடகத்தில் சுபத்திரையின் அரண்மனை வேலைக்காரர் களில் ஒருவனுக வரும்படி நேரிட்டது; அதில் நான் பேசவேண்டிய வரிகள் இரண்டே! அதற்காகத் தக்கபடி நான் வேஷம் பூண்டு, அந்த இரண்டடிகளையும் மேடையின் மீது நடித்த பொழுது சபை யோர்கள் எனக்கு மனமுவந்து அளித்த கரகோஷம் இன்னும் எனக்கு நினைவிலிருக்கிறது. அன்றியும் சென்ற வருஷம் எங்கள் சபையில் 'லீலாவதி-சுலோசன' நாடகமாடிய பொழுது, முக்கிய மான பாகங்களெல்லாம் எனது இளைய நண்பர்களுக்குக் கொடுக் கப்பட்டது (இது தவறு என்று கூறவில்லை. இது மிகவும் நியாயமாம்) எங்கள் சபை தமிழ் கண்டக்டர் எனக்கு இரண்டு மூன்று வரிகள் பேசும்படியான வேஷமாகிய தந்தவக்கிரன் வேஷம் கொடுத்தார்! மிகவும் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு, நான் எழுதிய நாடக மாகிய இந்நாடகத்தில், சற்றேறக் குறைய 50 முறை நான் கதா நாயகனுக நடித்த இந் நாடகத்தில், ஒரு மிகவும் சிறு பாகமாகிய இப் பாத்திரத்தைப் பூண்டேன். அந்த பாத்திரத்தின் பெயருக்

கேற்றபடி, வக்கிரதந்தங்களை வைத்துக்கொண்டு, நான் நாடக மேடையில் வந்த பொழுது, எனது பால்ய நண்பராகிய வி.வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் உட்பட, சபையோரெல்லாம் சந்தோஷித்து கரகோஷம் செய்தது மறக்கற் பாலதன்று. இனியாவது நாடக சபைகளின் அங்கத்தினர் பெரிய பாகம் சிறிய பாகம் என்று கவனிக்காது எதைக் கொடுத்தபோதிலும், ஒப்புக்கொண்டு அதற்குத் தக்கபடி வேடம் பூண்டு நடிப்பார்களாக! இச் சந்தர்ப்பத்தில் ஓர் சிறந்த ஆங்கிலக்கவி எழுதிய இரண்டு வரிகள் என் ஞாபகத்திற்கு வருகின்றன. "ஏதேயாயினும் உன் பாகத்தினை ஏற்றபடி நடிப்பாயாக; பீடும் பெருமையும் அதனால் பெருகும்" என்பது அவ்வடிகளின் தாத்பர்யமாகும். மேலும் நாடகமாடுவதையே ஜீவனமாக உடையவர்கள், இதைப் பற்றிச் சண்டையிட சிறிது காரணமுண்டு; ஏனெனில், பெரியபாகங்களை நடித்தால்தான் அவர்களுக்கு வரும்படி அதிகமாய் வரும். வருவாய் ஒன்றுமின்றி, நம்முடைய மனச்சந்துஷ்டிக்காகவும் நமது சபைக்காகவும், மேடையின்பேரில் நடிக்கும் ஆமெடூர்களாகிய நமக்கு எந்தப் பாகம் கொடுத்தாலென்ன? அதை நன்றாக நடிப்பதில்தான் நமக்குச் சந்தோஷமும் பெருமையும் என்பதை இதை வாசிக்கும் எனது சிறிய நண்பர்கள் கவனிப்பார்களாக.

எங்கள் சபை மதுரையிலிருந்தபோது எனது நண்பர்கள் வைகுண்டம் அய்யர் அவர்கள், ராமமூர்த்தி பந்துலு அவர்கள், டாக்டர் கோபாலசாமி ஐயங்கார் அவர்கள் முதலியோர் எங்களுக்கு விருந்தளித்தனர். பிறகு நான் அங்கத்தினனாகச் சேர்ந்த மதுரை டிராமாடிக் கிளப்பாரும் ஒரு நாள் சாயங்காலம் எங்களுக்கு டீ பார்ட்டி கொடுத்தனர்.

இங்கிருந்த பொழுது ஒரு நாள் சாயங்காலம் மேற்படி கிளப்பார் வேண்டுகோளின்படி, விக்டோரியா எட்வர்ட் ஹாலில் நாடக மேடையைப் பற்றி ஒரு உபன்யாசம் செய்தேன். அச்சமயம் நான் பேசியதில் ஒன்று மாத்திரம் மிகவும் நன்றாய் ஞாபகமிருக்கிறது. அச் சமயம் மதுரையில் இரண்டு நாடக சபைகளிருப்பதாகவும் அவைகளுக்குள் அவ்வளவாக ஒற்றுமை இல்லை யென்பதையும் அறிந்தவனாய், அந்த இரண்டு சபையாரும் ஒருங்கு சேர்ந்து ஓரே

சபையாய் ஏகோபித்து உழைப்பார்களானால் மிகவும் நலமா யிருக்கு மென்று கேட்டுக் கொண்டேன். இதன் பலன் என்ன வென்றால், இரண்டு மூன்று வருடங்கள் பொறுத்து நான் மதுரைக்கு மறுபடி யும் போனபோது, இரண்டா யிருந்த சபைகள் மூன்றாக மாறின; "ஒட்டக் கூத்தன் பாட்டிற்கு இரட்டை தாழ்ப்பாள்" என்றது போல் நமது வேண்டுகோளுக் கிணங்கி இரண்டா யிருந்தது மூன் றாயினும்போ லிருக்கிறது! என்று பிறகு சும்மா யிருந்து விட்டேன்.

இவ்வருஷம் எங்கள் சபை இரண்டு மூன்று புதிய நாடகங் களை நடித்தது. அவைகளைப் பற்றிச் சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன். முதலாவது "போஜ சரித்திரம்" ஆடப்பட்டது. இதன் ஆசிரியர் காலஞ்சென்ற எனது நண்பராகிய டி. எஸ். நாரா யண சாஸ்திரியார். அவர் இந் நாடகத்தைத் தான் ஸ்தாபித்த வித்வன் மனோரஞ்சித சபையாரைக்கொண்டு இதற்கு முன் ஆடி வைத்தார். மறுபடி அவர் எங்கள் சபையை வந்து சேர்ந்த பிறகு பன்முறை எங்கள் சபை இதை யாடவேண்டுமென்று பிரயத் னப்பட்டார். ஏதோ காரணத்தினால் பலிக்காமற் போயிற்று. அவர் காலமான பிறகு பல கண்டக்டர்கள், இதை ஆடமுடியாது என்று கைவிட்ட, இந்நாடகத்தை இவ்வருஷத்திய தமிழ் கண்டக்டராகிய எஸ். சத்யமூர்த்தி ஐயர் எடுத்துக்கொண்டு, நடத்திவைத்தார். என்னுடைய அபிப்பிராயத்தில் நாடகம் என்னவோ நல்ல நாடகம் தான். ஆயினும் மிகவும் பெரிதானது. எங்கள் சபை நடித்தபோது இதில் பாதியை நீக்கி ஆடினார்கள். நாராயண சாஸ்திரியாரின் குமாரர்களுள் ஒருவரான டி. வி. சுப்பிரமணிய ஐயர் என்பவர் கதாநாயகனாக நடித்தார். அவரது மற்றொரு குமாரன் காளிதா சன் வேடம் பூண்டு மிகவும் அழகாய்ப்பாடினார்.

இதன் பிறகு எனது நண்பர் சத்தியமூர்த்தி ஐயர், எனது பழய நாடகங்களிலொன்றாகிய "இரண்டு நண்பர்கள்" என்பதை எடுத்துக் கொண்டார். இந்நாடகமானது இதற்கு முன்பாகச் சுமார் இருபது வருடங்களாக ஆடாமலிருந்தது. நாடகத்தைப் பற்றி எனது நண்பர்களுக்கு முன்பே தெரிவித்திருக்கிறேன். என தாருயிர் நண்பர் ரங்கவடிவேலு இக்கதாநாயகியாகிய "மனோரமா"

வேடம் பூண்டபோதெல்லாம் இது "காமெடி"—அதாவது சந்தோஷகரமாய் முடியும் நாடகமாக ஆடப்பட்டது. அதை நான் அச்சிட்டபொழுது "டிராஜெடி"-அதாவது துக்ககரமாய் முடியும் நாடகமாக எழுதினேன். அதன்பேரில் ரங்கவடிவேலு அதில் தனக்கு ஆட இஷ்டமில்லையென்று அதை வெறுத்தார்; இதுதான் பிறகு சுமார் இருபது வருடங்கள் வரை இது ஆடப்படாமலிருந்ததற்குக்காரணம். "இது நல்ல நாடகமாயிருக்கிறதே, இவ்வருஷம் இதை நான் எடுத்துக் கொள்ளலாமென்றிருக்கிறேன். நீ என்ன சொல்கிறாய்?" என்று சத்தியமூர்த்தி ஐயர் என்னைக் கேட்டபோது, எனது புதிய நண்பராகிய கே. நாகரத்தினம் ஐயரை நான் கேட்க, அவர் இந்நாடகத்தை அச்சிட்டபடியே சோககரமான முடிவுடன் ஆடத் தனக்குச் சம்மதம் என்று கூற, அப்படியே ஆட நானும் இசைந்தேன். இவ்வருஷம் டிசம்பர் மாசம் இதை நாங்கள் மறுபடியும் ஆடினோம். நாகரத்தினம் ஐயர் மனோரமாவாக நடித்தது மிகவும் நன்றாயிருந்ததெனப் பலரும் மெச்சினர். இவர் தற்காலம் நடித்துவரும் முக்கிய நாடக பாத்திரங்களில் இந்த "மனோரமா" ஒன்றாகும்.

இதன் பிறகு சத்யமூர்த்தி ஐயர், எனது பழய நண்பராகிய அ. கிருஷ்ணசாமி ஐயர் எழுதிய "மீராபாய்" என்னும் நாடகத்தை எடுத்துக்கொண்டார். இந்நாடகமானது கவர்ன்மெண்ட் செக்ரடேரியேட் பார்டியாரால் பன்முறை இதற்கு முன்பாக ஆடப்பட்டது. இதில் நான் "அக்பர்" சக்ரவர்த்தியாக நடித்தேன். இவ்வேடம் நான் பூண்ட போது இரண்டு முக்கிய விஷயங்களைக் கவனித்தேன்; முதலாவது அக்பர் சக்ரவர்த்திக்கு ஒரு கன்னத்தில் ஒரு மருள் இருந்ததென அவரது ஜீவிய சரித்திரங்களால் அறிந்து, அவ்வேடம் பூணும்பொழுது அதைக் கவனித்து அப்படியே வேடம் பூண்டேன்; இரண்டாவது, அக்பர் சக்ரவர்த்தி பெரும்பாலும் சிம்மாசனத்தின் பேரில் உட்காராது, அங்கே சர்வேஸ்வரன் இருப்பதாக மதித்து, அதன் படியொன்றில் உட்கார்ந்த வழக்கமுண்டு என்பதை அறிந்து அதன்படி செய்தேன். இதற்கு முன்பாக அக்பர் வேடம் பூண்டவர்கள் இதைக் கவனிக்கவில்லை என்று பலர் கூறக் கேட்டுள்ளேன். இதை நான் எழுதியது நான் ஏதோ

புதிதாய்க் கண்டுபிடித்து விட்டேன் என்று பெருமை பாராட்ட வல்ல. இனி இவ்வேடம் பூணுபவர்கள் இவை யிரண்டையும் கைப்பற்றி நடிப்பார்களாக என்று வேண்டும் பொருட்டே. கல் பிதமான நாடகங்களில் எப்படி வேடம் தரித்தாலும் ஒருவாறு பாதகமில்லை. சரித்திர சம்பந்தமான நாடகங்கள் ஆடுவதென்றால், இவற்றை யெல்லாம் கவனித்தே ஆடவேண்டுமென்று எனது இளைய நண்பர்களுக்கு வற்புறுத்தும் பொருட்டே இதை எழுத லானேன்.

இவ்வருஷம் நாங்கள் புதிதாக நடத்திய இன்னொரு சிறு கதை தசராக் கொண்டாட்டத்தில் முதல் நாளில் ஆடப்பட்டது. பூர்வ காலத்தில் (அதாவது கோவிந்தசாமி ராவ் மனமோஹன நாடக கம்பெனி நடத்திய காலத்தில்) சூத்திரதார் வருகிறது, விதூஷ கன் வருகிறது, "வரமளித்துப் போகிறது", மோஹினிராஜன் மோஹினிராணி வருகிறது, முதலியவற்றையெல்லாம் வைத்து மார்க்கண்டேய நாடகத்தில் சில காட்சிகளை, அக்காலத்திய நாடகக் கம்பெனியார் ஆடிய ஆபாசங்களுடன், வேடிக்கைக்காக நடித்துக் காட்டினோம். இதில் நான் விதூஷகனை நடித்தேன். அதற்காக முதல் காட்சியில் தலையில் வேப்பிலை கட்டிக்கொண்டு வந்த பொழுது சபையோரெல்லாம் கொல்லென நகைத்ததை நினைத்துக் கொண்டால், இப்பொழுதும் எனக்குச் சிரிப்பு வருகிறது. இங்கு நானும் சூத்திரதாரராக வந்த எனது நண்பர் ராகவாசாரியாரும் பேசியதை ஒரு சிறு காட்சியாக எழுதி, "விடுதிப் புஷ்பங்கள்" என்று பெயரிட்டு நான் அச்சிடக் கோரியிருக்கும் புஸ்தகத்தில் பதியலாம் என்று எண்ணியிருக்கிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபையார் நடத்திய தெலுங்கு நாடகங் களில், நான் எழுதிய "காலவரிஷி"யின் தெலுங்கு மொழி பெயர்ப்பு ஒன்றாகும். என் அனுமதி பெற்று எனது நண்பர் டி. வெங்கட ரமண ஐயர் அவர்கள் இதைத் தெலுங்கில் மொழி பெயர்த்தார். அவர் தெலுங்கில் எழுதியதென்னவோ நன்றாகத்தானிருந்தது. ஆயினும் இதைத் தெலுங்கில் ஆடியபொழுது தமிழ் காலவரிஷி யைப்போல் அவ்வளவு நன்றாக நாடகம் சோபிக்கவில்லை என்று

பலர் கூறினர். என்னுடைய அபிப்பிராயமும் அப்படியே. இந்த எனது காலவரிஷி நாடகத்தை எனது நண்பர்களிலொருவர் சம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். அது அச்சிடப்பட்டதோ என்னவோ எனக்கு ஞாபகமில்லை. காலவரிஷியைத் தெலுங்கில் மொழி பெயர்த்த எனது நண்பர் வெங்கடரமண ஐயர் எனது "கள்வர் தலைவன்" என்னும் நாடகத்தையும் தெலுங்கில் மொழி பெயர்த்திருக்கின்றனர். எனது நாடகங்களை மொழி பெயர்ப்பதென்றால் எனது அனுமதியை முதலில் பெறவேண்டும் என்பதை அவ்வாறு செய்ய விரும்புவோர் கவனிப்பார்களாக.

இவ்வருஷம் சபை தொடங்கியது முதல் எண்ணூறு நாடகங்களாடி முடித்தோம். இதைச் சந்தோஷத்துடன் எங்கள் வருடாந்தர அறிக்கையில் குறித்தோம். அன்றியும் இவ்வருஷம் நாங்கள் ஆரம்பித்த புதிய வழக்கங்கள் இரண்டு; ஒன்று, "காளிதாஸன் தினம்" என்று ஒரு நாளைக் குறிப்பிட்டு, அத்தினம் சம்ஸ்கிருதத்தில் அவரது நாடகங்களிலிருந்து இரண்டொரு காட்சிகள் நடத்தி, அம்மகா நாடகக் கவியைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்வித்தோம். ஷேக்ஸ்பியர் தினம் என்று எப்படிக் கொண்டாடுகிறோமோ, அப்படியே இதையும் கொண்டாடினோம்; அன்றியும் இதேமாதிரியாக "கிருஷ்ணமாசார்லு தினம்" என்று ஆந்திர நாடக பிதா மகனாகிய அவரையும் கொண்டாடினோம். இத்தினங்களை மற்ற சபையாரும் கொண்டாடும்படியாக இதன் மூலமாக நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வருஷம் நான் புதிய நாடகம் ஒன்றும் எழுதவில்லை. ஆயினும் பல வருஷங்களுக்கு முன் நான் எழுதி முடித்து அச்சிட்டிருந்த 'மகபதி' என்னும் நாடகத்தை ஆடவேண்டுமென்று பிரயத்னப்பட்டேன். இந்த மகபதி எனும் நாடகம் ஷேக்ஸ்பியர் மஹாகவி ஆங்கிலத்தில் எழுதிய 'மாக்பெத் என்னும் நாடகத்தின் தமிழ் அமைப்பாம்; இதை 1909-ஆம் வருஷம் சென்னையில் மொழிபெயர்க்க ஆரம்பித்து, அவ்வருஷம் நான் கோடை விடுமுறையில் கோடைக்கானலுக்குப் போயிருந்தபொழுது அவ்விடம் பூர்த்தி செய்தேன். உடனே சீக்கிரத்தில் அச்சுவாஹனத்தின்மீதும் ஏற்றி

னேன். ஆயினும் இம் மகபதி நாடகம் நாளது வரையில் ஆடப்பட வில்லை. நான் எழுதி முடித்து ஆடப்படாத இரண்டு மூன்று நாடகங்களுக்குள் இது ஒன்றாகும். இது ஆடப்படாததற்கு அநேக காரணங்களுண்டு. முதற் காரணம் எனதுயிர் நண்பராகிய சி. ரங்கவடிவேலு இதில் கதா நாயகியாக ஆடப் பிரியப்படாததேயாம். இது ஷேக்ஸ்பியர் எழுதிய மிகுந்த சோகரச மமைந்த நாடகங்களில் ஒன்றாகும்; அன்றியும் கதா நாயகியாகிய மகபதியின் மனைவி அவர் வர்ணித்துள்ள துர்க் குணங்களமைந்த மாதர்களில் ஒரு முக்கியமானவள். எனதுயிர் நண்பர் துர்க் குணமுள்ள எந்த ஸ்திரீ பாத்திரத்தையும் நாடக மேடையில் நடிப்பதற்கு இஷ்டப் பட்டிலர்; ஆகவே, மகபதியின் மனைவியாக நடிப்பதற்கு அவர் இசையவில்லை, ஆகவே கதா நாயகனான மகபதியின் வேடம் நான் பூணுவதற் கில்லாமற் போயிற்று; அன்றியும் அக் கஷ்டமான பாத்திரத்தை நடிக்கக்கூடிய இரண்டொரு ஆக்டர்களை நான் கேட்டபொழுது, நீங்கள் முதன் முறை நாடக மேடையின் மீது நடித்துக் காட்டுங்கள்; பிறகு நாங்கள் ஆடுவதைப் பற்றி யோசிக்கிறோம் என்று சொல்லி விட்டார்கள். மேற்சொன்ன காரணங்களினால், எனதுயிர் நண்பர் ஜீவந்தரா யிருந்தவரையில், இந் நாடகமானது ஆடப்படவில்லை. அதன் பிறகு இவ்வருடம் (1927) 'கண்ணைக் கெடுத்த தெய்வம் கோலைக் கொடுத்தது' என்று பெரியார் கூறியபடி காலஞ் சென்ற எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுக்குப் பதிலாக பரமேஸ்வரன் தன் கருணையினா லெனக்குதவிய எனது புதிய நண்பராகிய கே. நாகரத்தினம் ஐயரை, இந் நாடகத்தில் நடிப்பதற்கு ரங்கவடிவேலுக்கு இருந்தமாதிரி உனக் கேதாவது ஆட்சேபனை யுண்டாவென்று கேட்டபொழுது, தனக்கு அப்படிப்பட்ட ஆட்சேபனை யொன்று மில்லை யெனத் தெரிவிக்க, இந்நாடகத்தை எடுத்துக்கொண்டு ஒத்திகைகள் நடத்த ஆரம்பித்து, என் வழக்கப்படி இந் நாடகத்தைப் பற்றி ஆங்கிலத்திலுள்ள விமரிசைகள் எல்லாம் படித்து நாகரத்தினம் ஐயருக்கு மகபதியின் மனைவியின் பாகத்தைச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தேன். ஆரம்பித்த சில தினங்களுக் கெல்லாம், திடீரென்று அவரைச் சென்னையி லிருந்து மதுரையம்பதிக்கு மாற்றிவிட்டார்கள் துரைத்தனத்தார். அதன்பேரில் ஆடுவதற்

காக ஒத்திகைகள் ஆரம்பிக்கப்பட்ட இந் நாடகம் தடையுற்றது; நாளதுவரையில் ஆடச் சாத்திய மில்லாமலிருக்கிறது. "எண்ணித் துணிவது ஏழை மனிதன் செயல்; முடித்து வைப்பது முக்கண்ணன் செயல்" என்றபடி இந் நாடகத்தை நாங்கள் ஆடும்படி அவர் எப்பொழுது திருவுளம் இசைவாரோ அறிகிலேன். நான் நாடக மேடையை விட்டகலுமுன் ஒரு முறையாவது இதை ஆடும்படியான பாக்கியம் எனக்குக் கொடுப்பாரெனப் பிரார்த்திப்பது தவிர, வேறொன்றும் செய்ய வகை யறியேன்.

இம் மகபதி நாடகத்தின் ஒத்திகைகள் ஆரம்பிக்கு முன், எங்கள் சபையின் கௌரவ அங்கத்தினரா யிருந்த ஆர்தர் டேவிஸ் என்பவரைக் கொண்டு ஷேக்ஸ்பியர் நாடகமாகிய மாக்பெத் என்பதை, ரெசிடேஷனுகக் (Recitation) கொடுக்கச் செய்தேன். எனது நண்பராகிய இந்த ஆர்தர்டேவிஸ் என்பவரைப் பற்றி இங்கு சில வார்த்தைகள் எழுத விரும்புகிறேன். அவர் சிலவருடங்களுக்கு முன்பாக ஹைகோர்ட் ஜட்ஜா யிருந்த சர் டேவிஸ் என்பவரின் குமாரர். ஹைகோர்ட்டில் டெபுடி ரிஜிஸ்டராராயிருந்து பிறகு சட்ட கலா சாலையில் பிரின்சிபாலாக இருந்து, 55 வயதானவுடன் பென்ஷன் பெற்றுக்கொண்டு, சீமைக்குப் போய்விட்டார். இவர் சென்னையிலிருந்த சுமார் 30 வருடங்களும், ஷேக்ஸ்பியர் நாடகங்களை எந்த சபையாராவது ஆடவேண்டு மென்றால், அவர்களுக்குத் தன்னுலியன்ற உதவி செய்து வந்தார். அவர்களுக்கு நாடகத்தை முதலில் படித்துக் காட்டி, பிறகு அதிலுள்ள பாத்திரங்களை யெல்லாம் இப்படி நடிக்க வேண்டுமென்று மிகவும் பிரயாசை எடுத்துக் கொண்டு சொல்லிக் கொடுத்து வந்தார். இம் மாதிரியாக எங்கள் சபைக்கும், ஹாம்லெட், மர்ச்சென்ட் ஆப் வெனிஸ், முதலிய நாடகங்களைப் படித்துக் காட்டியிருக்கிறார். இந்த மாக்பெத் என்னும் நாடகத்தையும் வெகு விமரிசையாகப் படித்துக் காட்டினார். இவரைப் பற்றிய ஒரு விசேஷம் என்ன வென்றால், மற்றவர்களுக்கு இவர் மேற் சொன்னபடி ஷேகஸ்பியர் நாடகங்களைக் கற்பித்த போதிலும், இவர் தானாக நாடக மேடையில் எப்பொழுதும் ஏறியதில்லை. இவர் தமிழ் அவ்வளவாகத் தெரியாதவராய் இருந்த போதிலும், எங்கள் சபையின் தமிழ் நாடகங்களுக்கும் அப்போ

தைக் கப்போது வந்து ஏதாவது சொல்லிக் கொடுத்துக் கொண்டு வந்தார். இவர் எங்கள் சபைக்குச் செய்துவந்த உதவிக்கெல்லாம் இதன் மூலமாக, அவருக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன். இவரிடம் இருந்த ஒரு முக்கியமான குணத்தைப் பற்றி இங்கு எழுத விரும்புகிறேன். நான் அறிந்த பல ஆங்கிலேயர்கள் தாங்கள் ராஜாங்கம் செலுத்தும் ஆங்கில ஜாதியாரைச் சேர்ந்தவர்கள், மற்றவர்கள் இந்தியர்கள், ஆளப்பட்டவர்கள், என்னும் வித்தியாசம் பாராட்டுவதைப் பன்முறை பார்த்திருக்கிறேன். அக் குற்றம் இவரிடம் ஒரு சிறிதும் இல்லை. இந்த நற்குணத்தை மற்ற ஆங்கிலேயர்களும் மேற்கொண்டு நடப்பார்களாயின் இந்தியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் உள்ள விவாதங்கள் ஏறக் குறைய எல்லாம் நீங்கி, இரு ஜாதியாரும் ஒருமைப்பட்டு வாழ மார்க்க முண்டாகும் என்று எண்ணுகிறேன்.

இவ்வருஷம் எங்கள் சபைக்கும், சவுத் இன்டியன் அத்லெடிக் அசோசியேஷனுக்கும், பிரசிடெண்டாக விருந்த சர் சி. பி. ராமஸ்வாமி ஐயர் இவ்விரண்டு சபைகளையும் ஒன்றாகச் சேர்க்க வேண்டுமென்று பிரயத்னப் பட்டுப் பார்த்தார்; அப்பிரயத்னம் சில காரணங்களால் பயன் பெறாமற் போயிற்று.

இவ்வருடம், எங்கள் சபையின் அங்கத்தினருள் ஒருவராயிருந்த திவான் பஹதூர் சர். பி. ராஜகோபாலாசாரியார் அவர்கள் காலமானது குறிக்கத் தக்கதாம். இவர் வெளியூரிலிருந்து சென்னைக்கு வந்தது முதல் எங்கள் சபையைச் சேர்ந்திருந்தார். எங்கள் சபை தமிழ் நாடகங்க ளாடும் போதெல்லாம், இவரும் இவரது மனைவியாரும் தவறாமல் வருவது வழக்கம். இவர் எங்கள் சபையைப்பற்றி ஒரு முறை கூறிய ஒரு சமாசாரம் எனக்கு நினைவிற்கு வருகிறது. ஒரு முறை எங்கள் சபையின் பொதுக் கூட்டத்திற்கு வந்திருந்து வியவஹாரங்களை நடத்தும் முறையை கண்டனர். சில நாட்களுக்கெல்லாம் சென்னையிலுள்ள பிரபல கிளப் ஒன்றின் பொதுக் கூட்டத்திற்கும் போயிருந்தார். அங்கு நடப்பதையும் பார்த்து, அதற்கு வந்திருந்த ஒருவரிடம், "நான் என் ஆயுளில் பல பொதுக் கூட்டங்களுக்குப் போயிருக்கிறேன்; ஆயினும் சுகுண

விலாச சபையில் நடப்பதுபோல் விமரிசையாக வேறெங்கும் நடக்கக் கண்டேனில்லை'' என்று கூறினாராம். இதை எனது நண்பர்களில் ஒருவர் எனக்கு உடனே தெரிவித்தார். அன்றியும் இவர் பென்ஷன் வாங்கிக்கொண்ட பிறகு அநேக சபைகளிலிருந்து நீங்கிய போதிலும் சுகுணவிலாச சபையை விட்டுமாத்திரம் நீங்கவில்லை தன் ஆயுள் பரியந்தம்.

இவ் வருஷத்திய வருடாந்தரப் பொதுக் கூட்டத்தில் எங்கள் சபையார் என்னை சபைக்கு டிராமாடிக் டைரெக்டராக நியமித்தனர். இதைப் பற்றிச் சில விஷயங்கள் எழுத வேண்டியவனா யிருக்கிறேன். சபை ஆரம்பமானது முதல், எங்கள் சபையின் 25-ஆம் ஆண்டுக் கொண்டாட்டம் வரையிலும், (ஒரு வருடம் தவிர), அதன் பிறகு இரண்டு மூன்று வருடங்களும், நான் தமிழ் நாடகங்களுக்குக் கண்டக்டராயிருந்து நடத்தி வந்தேன் என்பது இதை வாசித்து வரும் எனது நண்பர்கள் அறிந்த விஷயமே. இச் சமயங்களிலெல்லாம், எங்கள் சபையின் ஆக்டர்கள் அனைவருக்கும் திருப்திகரமாய் நடந்து கொண்டு வந்தேன் என்று சொல்வது தவறாகும். என்னிடமிருந்த பிடிவாதம், முன் கோபம், பொறுமையின்மை முதலிய துர்க்குணங்களைப் பற்றி நான் முன்பே எழுதி யிருக்கிறேன். இவை ஒருபுறம் இருக்கட்டும்; ஒரு சபையின் கண்டக்டரா யிருப்பவன் அச் சபையிலுள்ள எல்லா ஆக்டர்களையும் திருப்தி செய்வது அசாத்தியம் என்பது என்னுடைய கொள்கை. இதற்கு முக்கிய காரணம், ஒவ்வொரு சபையிலும், ஆக்டர் என்று மேடையின் பேரில் ஏறும் ஒவ்வொருவனும், ஒவ்வொரு நாடகத்திலும் தனக்கு முக்கியமான பாகம் வேண்டு மென்று இச்சிப்பதுதான் என்று நான் எண்ணுகிறேன். ஒவ்வொரு நாடகத்திலும் ஒரு கதா நாயகனுக்கும் கதா நாயகிக்கும்தான் பாகம் அதிகமா யிருக்கும்; அன்றியும் சில பாத்திரங்கள்தான் முக்கியமானவையா யிருக்கும். அப்படிக்கிருக்க, ஒவ்வொரு நாடகத்திலும், எல்லா ஆக்டர்களுக்கும் கதா நாயகன் பாகமும், கதா நாயகியின் பாகமும் அல்லது மற்ற முக்கிய பாத்திரங்களில் ஒன்றும், கொடுப்ப தென்றால், யாருக்கும் சாத்தியமான காரியமல்ல. அதுவும் நான் கண்டக்டரா யிருந்த வருஷங்களெல்லாம் எனதுயிர் நண்பருக் காகவும் எனக்காகவும்

நான் பல நாடகங்களை எழுதிவந்த பொழுது, அவைகளில் முக்கிய பாத்திரங்களை நாங்களிருவரும் எடுத்துக்கொண்டு வந்தபடியால், மற்ற ஆக்டர்களுக்கு முக்கிய பாகங்கள் கிடைப்பது இன்னும் கஷ்டமாயிருந்தது; இதனுடன் நாங்களிருவரும் மற்றவர்களுடன் ஆக்டு செய்யாததால் அநேகருக்கு மன வருத்தம் இருந்தது; அப்படியிருந்தது தவறென்று நான் கூறவில்லை. அது மிகவும் சகஜம்தான். இதைப்பற்றி நான் எடுத்துக் கூற விரும்புவ தென்னவென்றால், மற்ற ஆக்டர்கள் நாங்க ளிருவரும் அவர்களுடன் ஆக்டு செய்யாததற்குக் காரணத்தை அறிந் திருப்பார்களாயின், எங்கள்மீது அவ்வளவு வருத்தப்பட மாட்டார்கள் என்பதேயாம். ஆக்டர்களுக்குண்டான இக் குறையைத் தீர்க்கும்பொருட்டு, எங்கள் சபையின் கமிட்டியாரும் பொதுக் கூட்டத்தாரும் அநேக யுக்திகள் செய்து பார்த்தனர். அவற்றுள் ஒன்று என்னவென்றால், இன்னின்ன நாடகங்கள் போடவேண்டும் என்பதையும், அவற்றுள் ஒவ்வொன்றிலும் இன்னின்ன பாத்திரங்கள் இன்னின்னாருக்குக் கொடுக்கவேண்டும் என்பதையும் தீர்மானிக்க, ஒரு ஸ்பெஷல் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது; இதைக் கொஞ்சகாலம் பார்த்து, இதனாலும் அக் குறை தீராதபடியால், தமிழ், தெலுங்கு முதலிய ஒவ்வொரு பாஷைக்கும் ஒவ்வொரு கமிட்டி ஏற்படுத்திப் பார்த்தார்கள். 1916-ஆம் வருஷம் நான் கண்டக்டர் வேலையிலிருந்து நீங்கினபிறகு, மற்ற கண்டக்டர்கள் வந்த பிறகும் இக் குறை தீராதபடியால், ஒரு வருஷம் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரை டிராமாடிக் டைரெக்டராக நியமித்தனர். 1921-ஆம் வருஷம் நான் சபையின் டிரமாடிக் டைரெக்டராக நியமிக்கப்பட்டேன். இப் பிரயத்னங்கள் எவையாலும் மேற் சொன்ன குறை தீர்ந்தபாடில்லை யென்றே நான் கூறவேண்டும். இக்குறைகளை தீர்க்க எங்கள் சபையார் நாளது வரையில் என்னென்னவோ சூழ்ச்சிகள் செய்து பார்க்கிறார்கள்; எதனாலும் பயனடையவில்லை. வியாதி யொன்றிருக்க அதை யறியாது, ஔஷதங்கள் கொடுத்து என்ன பயனடையக்கூடும்? இதற்கு என் அபிப்பிராயப்படி எது தகுந்த சிகிச்சை என்பதைப் பற்றிப் பிறகு ஒரு சமயம் எழுதலாமென்றிருக்கிறேன்.



# 29-ஆவது அத்யாயம்

மறு வருஷமாகிய 1928-ஆம் ஆண்டில் என்னைப்பற்றிய வரையில், நடந்த சம்பவங்களுள் ஒரு முக்கியமான தென்ன வென்றால், இவ் வருஷம் பிப்ரவரி மாதம் முதல் தேதி, எனக்கு ஐம்பத்தைந்து வயது பூர்த்தியாகி அவ்வயதுக்குமேல் கவர்ன்மெண்ட் உத்தியோகத்தில் சதாரணமாக ஒருவரும் இருக்கக் கூடாது என்கிற சட்டத்தின்படி, நான் ஸ்மால்காஸ் கோர்ட்டு ஜட்ஜ் வேலையிலிருந்து விலக வேண்டி வந்ததேயாம். ஆக மொத்தம் சுமார் 4-வருடங்கள்தான் நான் ஜட்ஜ் வேலையி லிருந்தேன்; இதனிடையில் சில காலம் ஸ்மால் காஸ் கோர்ட்டு சீப் ஜட்ஜாகவும் சென்னை சீப் பிரசிடென்சி மாஜிஸ்டிரேட் ஆகவும் வேலை பார்த்தேன். நாடக மேடை நினைவுகளைப் பற்றி எழுதப் புகுந்தவன் இதை இங்கு எழுதுவானேன் என்று இதை வாசிக்கும் எனது நண்பர்கள் இங்கொரு கேள்வி கேட்கலாம். அதற்குப் பதில் அடியில் வருமாறு:—நான் ஜட்ஜ் வேலையிலிருந்து விலகியவுடன் எனது நண்பர்களிற் பலரும் வர்த்தமானப் பத்திரிகைகளின் ரிபோர்ட்டர்கள் சிலரும், இனிமேல் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? என்று என்னைக் கேட்டார்கள். அப்பொழுது அவர்களுக்கெல்லாம், இனிமேல் நான் வக்கீலாக வேலை பார்க்கப் போகிறதில்லை; இனி ஈசன் எனக் களித்திருக்கும் ஓய்வு காலத்தை யெல்லாம் தமிழ் நாடகங்கள் எழுதுவதில்—அதிலும் தற்காலத்திய நாகரீகத்தைப் பற்றிய சோஷல் நாடகங்கள் எழுதுவதில்—கழிக்கப் போகிறேன் என்று விடை கூறினேன். நான் இருபத்தைந்து வருடங்கள் வக்கீலாக இருந்த பொழுது மனிதர்களுடைய குணதிசயங்களைப் பற்றியும் நடவடிக்கைகளைப் பற்றியும் பல விஷயங்கள் அறிய ஹேதுவா யிருந்த போதிலும், ஜட்ஜாக விருந்த நான்கு வருடங்களில் இதற்குமுன் நான் அறியாத பல விஷயங்களைக் கற்றேன் என்றே நான் சொல்லவேண்டும். இவை யெல்லாம் தமிழ் நாடகங்கள் எழுதுவதற்கு எனக்கு மிகவும் பயன்பட்டன என்பதற்குத் தடையில்லை. ஒரு நாடகாசிரியன் கற்க வேண்டிய சமாசாரங்கள் இந்த வேலையில்தான் உண்டு இந்த வேலையில் இல்லை யென்று

சொல்ல இடமே கிடையாது. அன்றியும் இவ்வுண்மை நாடக மேடையில் ஆட விரும்புபவனுக்கு மிகவும் பொருத்தமானது என்ப தற்கு ஐயமில்லை.

இனி மேற்சொன்ன தீர்மானத்தின்படி நான் எழுதிய நாட கங்களைப்பற்றி சற்று விவரமாய் எனது நண்பர்களுக்குத் தெரிவிக் கிறேன்.

இவ்வருஷம் நான் ஆரம்பித்து எழுதி முடித்து, உடனே எங்கள் சபை யாடிய நாடகம் "தாசிப்பெண்" என்பதாம். இந்நாட கத்தின் கதை என் மனதினால் நிர்மாணம் செய்யப் பட்டதேயாம், முக்கிய பாத்திரங்களெல்லாம் என் மனோ சிருஷ்டியேயன்றி, நான் அறிந்த ஒருவரையும் குறிப்பிட்டதன்று. சில சிறு நாடக பாத்தி ரங்கள் மாத்திரம், எனது நண்பர்களுட் சிலருடைய குணாதிசயங் களை முன்னிட்டு எழுதியதாம். அப்படிச் செய்யும் பொழுதெல் லாம், அவர்களுடைய உத்திரவைப் பெற்றே அவ்வாறு செய்வது என் வழக்கம். உதாரணமாக, இத்தாசிப்பெண் என்னும் நாடகத் தில் வரும் "டப்பூஸ் நாயுடு" என்னும் பாத்திரமானது, காபி, தேத்தண்ணீர், சோடா முதலிய பானங்களை அபரிமிதமாய்ச் சாப்பிடும் எங்கள் சபையின் அங்கத்தினர் ஒருவரை முன்னிட்டு எழுதியதாகும்; இவ்வாறு செய்யப் போகிறேன் உங்கள் உத்தர வைக் கொடுக்கவேண்டும் அங்ஙனம் செய்ய, என்று அவரது உத் தரவைப் பெற்றே பிறகு எழுதியுள்ளேன். இந்நாடகத்தை எழுதி முடிப்பதற்கு இரண்டு மூன்று மாதங்கள் பிடித்தன. என் வழக் கப்படி, நாடகக் கதையின் கோர்வையை முன்பு தீர்மானித்து, பிறகு காட்சிகளாகப் பிரித்துக் குறிப்பிட்டுக்கொண்டு, எழுதி வரும் தருவாயில், ஏதாவது ஒரு கட்டம் வந்துவிடும். அதற்கப் புறம் எப்படி எழுதுவது என்று யோசிக்கவேண்டியவனாய் சரியான மார்க்கம் என் புத்திக்குத் தோன்றும் வரையில், ஒரு நாளோ இரண்டு நாளோ, ஒரு வாரமோ, பிடித்தாலும், அது வரையில், ஒரு வார்த்தையும் எழுதமாட்டேன், இப்படிப்பட்ட இடைக் காலங்களில், சும்மாக இருக்கப் பொறுக்காமல், எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காருடைய ஆங்கில நாடிகை (சிறு நாடகம்)

களை அவரது உத்திரவைப்பெற்று தமிழில் மொழி பெயர்த்து வந்தேன். இவ்வாறு ஒரு வருஷத்திற்குள்ளாக "மனைவியால் மீண்டவன்", விச்சுவின் மனைவி", "நோக்கத்தின் குறிப்பு", "விபரீதமான முடிவு", "இடைச்சுவர் இருபுறமும்", "இரண்டு ஆத்மாக்கள்", "என்ன நேர்ந்திடினும்", "சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து", "சுல்தான் பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட்", ஆகிய ஒன்பது நாடகங்களையும் மொழி பெயர்த்தேன், இவைகளைப்பற்றி பிறகு கொஞ்சம் எழுதவேண்டிவரும்.

இவைகளையெல்லாம் எழுதும் பொழுது ஈசன் அருளிய என் வாழ் நாட்களை நான் எவ்வாறு கழித்து வருகிறேன் என்பதை இதை வாசிக்கும் எனது நண்பர்கள் அறிய விரும்புவார்களென்று எண்ணினவனாய், அதை எழுதுகிறேன். 1928-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் முதல் தேதி முதல், இது வரையில், நான் சென்னையிலிருக்கும் போதெல்லாம் என் நாட்களைக் கழிக்கும் விதம் இதாகும்.

அதிகாலையில் எழுந்திருப்பது என்பது என் ஜன்மத்திற்கிடையாது; கும்பகர்ணனை ஸ்ரீராமபிரான் கொல்வதற்குள் அவரிடமிருந்து அவன், தனக்குப் பிரதிநிதியாக ஒவ்வொரு யுகத்திலும் ஒருவனிருக்கும்படி வரம் வேண்டியிருக்கவேண்டும்; அவ்வரத்தின் படி கலியுகத்தில் என்னை அக் கும்பகர்ணனுக்குப் பிரதிநிதியாக பகவான் ஏற்படுத்தினார் போலும். பால்யத்தில் பரீட்சைகளுக்குப் போகும் போதும் காலையில் எழுந்திருந்து படித்தவனன்று நான். காலையில் சாதாரணமாக ஏழு மணிக்குத்தான் எழுந்திருப்பது என் வழக்கம். எழுந்தவுடன் நான் வழிபடு கடவுளாகிய என் தாய் தந்தையாரைத் தொழுதுவிட்டு, தேகப்பயிற்சி சிறிது செய்து, என் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு எட்டு மணிக்கு என் மேஜையருகில் உட்காருவேன்; கால்மணி சாவகாசம் ஏதாவது சம்ஸ்கிருதம் படித்துவிட்டு பதினொருமணிவரையில் தமிழ் நாடகங்கள் எழுதுவதில் காலம் கழிப்பேன். பதினொரு மணிக்கு 15 நிமிஷம் சன்பாத் (sun bath) எடுத்துக்கொண்டு பிறகு 15 நிமிஷம் ஷாம்பு (shampoo) எடுத்துக்கொண்டு, ஸ்நாநம் செய்து பகல் பூஜையை முடித்து,

உணவுகொள்ள, சரியாக பன்னிரண்டாகும். அதன் பேரில் கால் மணி சாவகாசம் ஏதாவது வர்த்தமானப் பத்திரிகை வாசித்து விட்டு, எனது நாடக சம்பந்தமாக அவற்றை ஆட விரும்பும் சபைகளுக்கு ஏதாவது காகிதங்கள் எழுதவேண்டியிருந்தால் அவற்றை எழுதிவிட்டு, இரண்டு மணிவரையில் நான் அச்சிடவேண்டிய நாடகங்களை அச்சாபீசுக்கு அனுப்பப் பிழைகள் திருத்துவேன். இரண்டு மணிக்கு வண்டியேறி, என் நாடகங்களை அச்சிடும் இரண்டு அச்சாபீசுகளுக்கும் போய் புரூப்புகளை (proof) கொடுத்துவிட்டு, ஏதாவது சொல்ல வேண்டியவற்றைச் சொல்லிவிட்டு, சுகுணவிலாசசபைக்குப் போய்ச் சேர்வேன். அங்கு சபை காரியங்களை ஏதாவது பார்ப்பதிலோ, அல்லது ஒன்றும் இல்லாவிட்டால், ஆங்கில பத்திரிகைகளைப் படிப்பதிலோ, சாயங்காலம் வரையில்போக்கி, வெயில் சற்று தாழ்ந்தவுடன் பீபில்ஸ்பார்க்கில் அரைமணி சாவகாசம் உலாவுவேன். இச்சமயம் நான் ஏதாவது புதிய நாடகங்களைப்பற்றி யோசிக்க வேண்டியிருந்தால் யோசிப்பேன். திரும்பி வந்ததும் எனது சபை நண்பர்களுடன் பேசியாவது சீட்டாடியாவது (பணமில்லாமல்!—ஏனெனில் எங்கள் சபையில் துட்டுவைத்து சீட்டாடக் கூடாது என்று ஒரு நிபந்தனை ஆரம்பமுதல் உண்டு) எட்டுமணிவரையில் காலம் கழிப்பேன். பிறகு வீட்டிற்குத் திரும்பி பதினைந்து நிமிஷம் தேகப் பயிற்சி செய்த பிறகு கைகால்களை சுத்தி செய்து ராத்திரி பூஜையை முடித்து, சாதாரணமாக ஒன்பது மணிக்கெல்லாம் நித்திரைக்குப் போவேன். மேற் கூறியதினால், பொழுது போவது கஷ்டமாயிருக்கிறதென்னும் கஷ்டம் எனக்கில்லை என்பதை என் நண்பர்கள் அறியலாம். ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரத்துடன் இன்னும் ஐந்தாறு மணிகள் இருப்பினும், அவைகளிலும் செய்ய ஏதாவது வேலை எனக்குக் கிடைக்குமென நம்புகிறேன். செய்வதற்கொன்றுமில்லையே, என்கிற கவலை எனக்கு எப்பொழுதும் கிடையாது ; நாம் செய்ய வேண்டுமெனத் தீர்மானித்திருக்கும் காரியங்களையெல்லாம் கடவுள் கிருபையால், நமக்கிருக்கும் ஆயுளுக்குள் செய்து முடிப்போமோ என்னும் கவலை தான் உண்டு. எனது நண்பர்களில் அநேகர், இப்பொழுது எப்படி உன் காலத்தைக் கழிக்கிறாய் என்று கேட்டதினால் இதைப்பற்றி இங்கு சற்று விரி

வாய் எழுதலானேன். அன்றியும் இன்னொரு காரணமுண்டு. அநேகர் தங்கள் வேலையிலிருந்து பென்ஷன் (pension) வாங்கிக் கொண்ட பிறகு தாங்கள் செய்வதற்கொன்றுமின்றி, காலத்தைப் போக்க வகையறியாராய்க் கஷ்டப் படுகிறார்கள் என்பதை நான் அறிவேன். நான் நாடகமெழுதுகிறது என்கிறதை ஒரு வேலையாக வைத்துக்கொண்டிருப்பது போல், அவர்களும் தங்கள் மனதுக்கிசைந்த யாதொரு வேலையை மேற்கொள்வார்களானால், அவர்களுக்கு அதனால் பெரும் பலன் உண்டு என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆங்கிலத்தில் ஹாபி (Hobby) என்று ஒரு பதம் உண்டு. இதற்கு சரியான தமிழ் பதம் எனக்குக் கிடைக்கவில்லை; ஒருவன் மனதிற்கிசைந்த தொழில், என்று அதற்கு ஒருவாறு அர்த்தம் செய்யலாம். ஒவ்வொரு மனிதனும், தன் சிறு வயதிலேயே, தன் ஜீவனாதாரமான தொழிலைத் தவிர, வேறு ஏதாவது ஒரு விநோதமான வேலையைக் கற்று வருவானாயின், அவன் வயோதிகத்தில் அது மிகவும் பயன்படும் என்பதற்குத் தடையில்லை. நான் அறிந்தவர்களுள் அநேகர் பென்ஷன் வாங்கிக்கொண்ட பிறகு, வேறொன்றும் செய்வதற்கில்லாமல், கிளப்புக்குப் போய்ச் சீட்டாடி காலம் கழித்துத் தமது ஆயுளைக் குறைக்கிக் கொண்டிருக்கின்றனர்.

தமிழ் நாடகங்கள் எழுதுதலாகிய என் ஹாபி (Hobby) என் பொழுதைப் போக்குவதற்கு அனுகுணமா யிருப்பது மன்றி எனக்கு வருவாயையும் தருகிறது; தமிழ் பாஷைக்கு நான் செலுத்த வேண்டிய கடமையையும் செலுத்த மார்க்கமாகிறது.

இவ்வருஷம் நான் எழுதி முடித்த "தாசிப் பெண்" என்னும் நாடகம் இவ் வருடமே எங்கள் சபையில் ஆடப்பட்டது. அதில் தற்காலம் எனது அத்யந்த நண்பரா யிருக்கும் கே. நாகரத்தினம் ஐயர், தாசிப் பெண்ணாகிய ரூபாவதி வேடம் பூண்டனர்; நான் சுப்பிரமணிய ஐயர் வேடம் பூண்டேன். இந் நாடகத்தில் தாசிப் பெண்ணாகிய ரூபாவதி பாடும் இரண்டு பாட்டுகள் தவிர வேறு சங்கீதமே கிடையாது. ஆயினும் இந் நாடகம் மிகவும் நன்றா யிருந்ததென மெச்சப்பட்டதுமன்றி, நல்ல வரும்படியும் வந்தது எங்கள்

சபைக்கு முதன் முறை ஆடிய பொழுது சுமார் 400-ரூபாய் வரும் படி வந்தது. இதை நான் முக்கியமாக எடுத்து எழுதுவதற்குக் காரணம், அநேகர் புராணக் கதைகளா யிருந்தால்தான் வசூலாகும், சங்கீதம் அதிகமாயிருந்தால்தான் வசூலாகும், என்று நினைக்கிறார்களே, அது முற்றிலும் தவறு என்று ரூபிப்பதற்கேயாம். இதை மறு முறை எங்கள் சபையில் போடவேண்டுமென்று பிரேரேபிக்கப் பட்டபொழுது, மேற் சொன்னபடி எண்ணங் கொண்ட எனது நண்பர்களில் ஒருவர், இந்நாடகத்தில் வசூலாகாதென்று போட்டிப் போட்டார்; அம் முறை டிசம்பர் மாதத்தில் நாங்கள் இதை ஆடிய பொழுது, புராணக் கதையாயும், சங்கீதம் நிரம்பியுமுள்ளதான நந்தனர் சரித்திரத்தை விட, இந்நாடகத்திற்கு வரும்படி அதிகமாய் வந்ததைக் கண்டு, மௌனமாய் இருந்து விட்டார்.

இந் நாடகமானது, எங்கள் சபை இதை ஆடுமுன், நான் தற்காலம் வெளியூர் அங்கத்தினனாக (Mofussil member) இருக்கும், மதுரை டிராமாடிக் கிளப்பாரால் இவ் வருஷம் ஆடப்பட்டது. இந்நாடகத்தை, என் சொந்த கற்பனையில் நான் எழுதியவற்றுள், ஒரு முக்கியமான தாகக் கொள்கிறேன்.

இவ் வருடம் எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் ஆங்கிலத்தில் எழுதிய நாடிகைகள் பலவற்றை மொழி பெயர்த்ததாக முன்பே தெரிவித்திருக்கிறேன். இந்த நாடிகைகளை யெல்லாம் நான் மொழி பெயர்த்த பொழுது, எனக்கு சந்தேகமா யிருக்கும் இடங்களிலெல்லாம் குறிப்பிட்டு, பிறகு அவற்றை எனது நண்பரிடம் கொண்டுபோய், அவரது அபிப்பிராயத்தைக்கேட்டு, திருத்தின பிறகு தான், அவைகளை ஒவ்வொன்றாக அச்சிட்டேன். இப் புத்தகங்களுள் ஒன்றில் முகவுரையில் நான் எழுதியபடி, சில சமயங்களில், ஷேக்ஸ்பியர் மஹா நாடகக் கவியின் ஆங்கில நாடகங்களை மொழி பெயர்ப்பதை விட, இவரது நாடிகைகளை மொழிபெயர்ப்பது அதிக கஷ்டத்தைத் தந்தது! இம் மொழி பெயர்ப்புகளுள் சில எங்கள் சபையாராலும் ஆடப்பட் டிருக்கின்றன; பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் சிறுவர்கள் சங்கங்களின் வருடாந்தர கொண்டாட்டங்க

ளில், தமிழில் ஏதாவது சிறு நாடிகைகள் ஆடவேண்டுமென்று விரும்பினால், இவைகள் உபயோகப்படும் என்று நினைக்கிறேன். எனது நண்பர் எழுதியுள்ள "தாமுவை வழிக்கு கொண்டுவந்தது", (Domestication of Damoo) "ஆடி ஆகும் வரையில் பொறுங்கள்" எனும் (Wait for the stroke) இரண்டை மாத்திரம் இன்னும் நான்மொழி பெயர்க்கவில்லை. காலம் வாய்த்தால் அவைகளையும் மொழி பெயர்த்து என் பால்ய நண்பருக்கு நான் செலுத்த வேண்டிய பெருங்கடனைக் கொஞ்சம் தீர்க்கலாமென்றிருக்கிறேன்.

இவ் வருஷம் ஆகஸ்டு மாதம் 28-ஆம் தேதி எங்கள் சபையின் ஆதரவிலும் முன்னிலையிலும், குப்பி நாடகக் கம்பெனியார், வால்டாக்ஸ் ரோடு நாடக சாலையில், "ராஜபக்தி" என்னும் நாடகத்தை கன்னட பாஷையில் நடத்தினார்கள். இதற்காக எங்கள் சபையார் அக் கம்பெனியாருக்கு 150-ரூபாய் பெரும்படியான ஒரு வெள்ளி கோப்பை பரிசாக அளித்தனர். இந் நாடகத்தைத்தான் பிறகு என் இளைய நண்பர் வி. சி. கோபாலரத்தினம் ஐயங்கார் தமிழில் மொழி பெயர்த்தனர்.

அன்றியும் இவ் வருஷம் டிசம்பர் மாசம் 2-ஆம் தேதி ராயல் தியேடரில், எங்கள் சபையில் பல வருடங்களாக அங்கத்தினராயிருந்து தெலுங்கு பாஷையில் பன்முறை நாடகங்களில் நடித்து வந்த, எஸ். வெங்கடாசல ஐயருடைய, "ராதா மாத மந்திரம்" என்னும் தர்ம கைங்கர்யத்திற்காக எனது "மனோஹரன்" நாடகம் ஆடப்பட்டது. அதன் பொருட்டு எனது தேக கஷ்டத்தையும் பாராமல் அந் நாடகத்தில் நான் மனோஹரனாக நடித்தேன். என் இள வயதில் இருந்த உற்சாகத்துடன் இப் பாத்திரத்தை நான் நடிப்பதற்கு ஏலாமற் போன போதிலும், எனது பழய நண்பருக்காக உழைப்பதற்குப் போதுமான தேக வலியை இன்னும் நமக்கு ஈசன் அருளியிருக்கிறாரே என்று சந்தோஷப் பட்டேன். செலவு போக இதில் வந்த லாபமாகிய ரூபாய் 383—4—0 அவருக்கு மேற் சொன்ன தர்ம கைங்கரியத்திற்காகக் கொடுத்தோம். இந்த வெங்கடாசல சாஸ்திரியார், (இவருக்கு ஏர்ரையா என்று எங்கள் சபை

பர்கள் ஆடினபொழுது, நான் மதுரைக்கு சைத்ரோற்சவம் பார்க்கப் போயிருந்தேன்.

நான் இப்பிரயாணத்தி லிருந்து சென்னைக்குத் திரும்பி வருங்கால் ஸ்ரீரங்கத்தில் எனக்கு நேரிட்ட, எனது நாடகமேடை சம்பந்தமான நினைவொன்று எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. மதுரை உற்சவத்திற்கு என் குமாரத்திகள் இருவர்களையும் அழைத்துச் சென்றேன். பட்டணம் திரும்பிவரும்பொழுது அவர்கள் தாங்கள் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்க நாதனைத் தெரிசிக்கவேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். அதற் கிசைந்து, வரும் மார்க்கத்தில் திருச்சிராபள்ளியில் ஒரு நாள் தங்கி, அவர்களை அன்று ஸ்ரீரங்கம் கோயிலுக்கு அழைத்துச் சென்றேன். கோயிலுக்குப் போய் கர்ப்பக் கிரஹத்தை அண்டினபொழுது, அன்று உற்சவ ஆரம்பமாய் விட்டது. உற்சவ விக்கிரஹம் வெளியில் புறப்பட்டிருக்கும் பொழுது, மூல விக்கிரஹத்திற்கு ஆராதனம் கிடையாது என்று மூலஸ்தானக் கோயில் தாளிடப்பட்டிருந்தது! "ஐயோ! இவ்வளவு கஷ்டப்பட்டு வந்தும், ஸ்ரீரங்கநாதர் தெரிசனம் நமக்குக் கிடைக்கவில்லையே" என்று எனது இரண்டு குமாரத்திகளும் துக்கப்பட்டனர். நான் ரங்கநாதரை இதற்குமுன் பலதரம் தர்சித்திருந்தபோதிலும்அவர்களுக்கு அப்பாக்கியம் கிடைக்கவில்லையே யென்று, வாடின முகமுடையவனாய், அவர்களை அழைத்துக்கொண்டு திரும்பி, முதல் கோபுரம் வரையில் வந்தேன். நாங்கள் கர்ப்பக்கிரஹத்தருகில் போனதையும், ஸ்வாமி தர்சினம் கிடைக்காமல் திரும்பினதையும், கவனித்த யாரோ ஒரு பிராம்மணர் (அவரது பெயரையும் பிறகுதான் அறிந்தேன்) எங்களைப் பின் தொடர்ந்து வந்து, என்னைப் பார்த்து"தாங்கள்தானா, சம்பந்த முதலியார்?" என்று கேட்டார். நான் ஆம் என்று ஒப்புக்கொண்டு, ஏன் கேட்கிறீர்கள் என்று வினவ, "கொஞ்சம் பொறுங்கள், நீங்கள் இவ்வளவு தூரம் வந்து ஸ்வாமி தரிசனம் செய்யாமற் போவது சரியல்ல; நான் திரும்பிவருகிற வரையில் இங்கு இருக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்", என்று சொல்லி, எங்களை அங்கேயே இருக்கச் சொல்லி, தான் விரைந்து சென்று, யாரோ டிரஸ்டிகளுடைய உத்திரவைப்பெற்று, சாவி வாங்கிக்கொண்டு வந்து, எங்களை யெல்லாம் மறுபடியும் கர்பக்கிரஹத்

திற்கு அழைத்துக்கொண்டுபோய், கதவைத் திறக்கச்சொல்லி அருகிலிருந்து, நன்றாய் தர்சனம் செய்விக்கச் செய்தார். இதுவும் ரங்கநாதன் அருள் என்று கருதினவனாய், நாங்கள் எல்லாம் தர்சனம் செய்துவிட்டு திரும்பும் பொழுது, ஏதோ ஏழைப் பிராம்மணர் நமக்காக இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டாரே, என்று எண்ணினவனாய், அவர் கையில் ஒரு ரூபாயைக் கொடுக்க முயல, அவர் அதை வேண்டாம் என்று மறுத்தார்! அதன் மீது ஆச்சரியப்பட்டவனாய், "நான் கொடுப்பது குறைவாயிருக்கிறதெனத் தோன்றினால், சொல்லுங்கள், இன்னும் அதிகமாய்த் தருகிறேன்" என்று கூறி, என் பையை எடுக்க, "அப்படி அல்ல, உங்களிடம் பணத்தை ஆஸ்ரயித்து இதை நான் செய்தவனல்ல; உங்கள் நாடகங்களில் அநேகம் நான் படித்து சந்தோஷப்பட்டிருக்கிறேன், அதற்காக இதைச் செய்தேனேயொழிய வேறொன்றில்லை" என்றார்! அதன் பேரில் நான், அப்படியிருந்தபோதிலும், நீங்கள் மேற்கொண்ட சிரமத்திற்காக ஏதாவது நான் கைம்மாறு செய்யவேண்டும் என்று வற்புறுத்த "அப்படியாயின் எனக்குப்பணம் ஒன்றும் வேண்டாம், உங்கள் ஞாபகார்த்தமாக, உங்கள் புஸ்தகங்களிலொன்றை அனுப்புங்கள்", என்று சொன்னார். அதன் மீது அவர் வாசித்திருக்கும் நாடகங்கள் என்னென்ன வென்று கேட்டறிந்து, அவர் வாசியாத, ஒன்றிற்கு இரண்டாக நாடகங்களை அவர் பெயரும் விலாசமும் கேட்டறிந்து குறிப்பிட்டுக்கொண்டு, பிறகு சென்னைக்கு வந்தவுடன் அனுப்பினேன். நான் தமிழ் நாடகத்திற்காக உழைத்தது பயன்படாமற் போகவில்லை, ஏதோ எம்பெருமான் அருளால் அதன் பலன் இந்த ஜன்மத்திலேயே எனக்குக் கொஞ்சம் கிடைத்ததே என்று, ரங்கத்திற்கு உழைத்ததற்காக, ரங்கநாதராகிய சபாபதி, (மஹா விஷ்ணுவுக்கும் பரமசிவத்திற்கும் ஒரு பொருள்படும்படியான இப்பெயர்கள் இருப்பது இங்கு கவனிக்கத் தக்கது), எனக்கு இன்னருள் பாலித்தார் என்று, என் மனத்திடை வழுத்தினேன். இம்மாதிரியாக ஏதோ என் சிற்றறிவைக்கொண்டு தமிழில் சில நாடகங்கள் எழுதினதால், நான் பல இடங்களில், என்னை முன் பின் அறியாதவர்களாற் பன்முறை கௌரவப்படுத்தப்பட்டிருக்கிறேன். தமிழில் நாடகங்கள் எழுதி

னால், நமக்கு ஒரு லாபமும் கிடைக்கவில்லையே யென்று எப்பொழுதாவது ஏங்கும் ஸ்திதியிலிருக்கும் எனது இளைய நண்பர்கள், மேற்குறித்த நிகழ்ச்சியைக் கவனித்து, எவ்வளவு கஷ்டம் நேர்ந்தபோதிலும், தங்கள் ஊக்கம் குன்றாது உழைத்து வருவார்களென நம்பி இதை இங்கு எழுதலானேன்.

இவ்வருடம் கிறிஸ்ட்மஸ் (Christmas) விடு முறையில் எங்கள் சபை நாடகங்களை நடத்தினபொழுது, எனது அத்யந்த நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் சென்னைக்கு வந்திருந்தபடியால் நாங்கள் இருவருமாக, “தாசிப்பெண்”, “வள்ளிமணம்” என்னும் இரண்டு நாடகங்களிலும் ஆடினோம்.






சென்னை ‘பியர்லெஸ்’ அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.